# குரு சிஷ்ய சம்வாத
# ஹஸ்த இரேகை



பிரபல சோதிட கைரேகை நிபுணர்
ஆசிரியர். K. S சிவசுப்ரமணியம்

பதிப்பாளர்
சண்முகானந்த புத்தகசாலை,
48, நைனியப்ப நாய்கன் தெரு,
பார்க்டவுன், சென்னை 600003.
உரிமை பெற்றது] 1976 [விலை ரூ 6.

# உரிமை அறிவிப்பு

*

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில். சென்னை K. S. சிவசுப்பிரமணியம் அவர்களால் இயற்றப்பட்ட குரு சிஷ்ய சம்பாஷணை என்னும், ஹஸ்த இரேகை சாஸ்திரம் என்னும் புத்தகத்தை வெளியிட நான் மேற்படியாரிடமிருந்து சகல சுதந்திரத்துடன் பெற்றுக்கொண்டேன் ஆகையால் இந்த புத்தகத்தை இதரமானவர்கள் எந்த பாஷையிலும் அச்சிடலாகாதென்று கனம் பொருந்திய கவர்மெண்டார் சட்டப்படிரிஜிஸ்டர்காபிரைட் செய்யப்பெற்றிருப்பதை என் அனுமதியின்றி அச்சிட்டால் நான் கோரும் நஷ்டத்தை அச்சிட்டவரிடமிருந்து வசூல் செய்யப்படும் அல்லாமலும் காபிரைட் வில்லங்கனம் செய்த குற்றத்திற்கு உள்படுபவர் என்பதை தெரியப்படுத்துகிறேன்.

இப்படிக்கு

K. A. மதுரை முதலியார்,

உரிமையாளர், சண்முகானந்த புத்தகசாலை,

பார்க்டவுன், சென்னை-600003.

# முகவுரை



பண்டைய காலத்தில் நம்முன்னோர் இத்தகைய கலைகளில் வல்லுனராய் திகழ்ந்தனரென சரித்திர ஏடுகள் பல கூறுகின்றன. எனினும் அவ்வழி வந்த நாம் இக்கலையைத் தெளிவாக கற்றுணர மார்க்கம் ஏதும் செய்து வைக்கவில்லை. பல சிக்கலான வழிகளையே இயற்றி வைத்துள்ளனர்.

ஆகவே, இக்காலத்திய ஆராய்ச்சியாளர் பலரும் மேனாட்டு நூல்களை மட்டுமே ஆராய்ந்து அந்நாட்டு கலைப்பண்பாட்டினையே சிறப்புற பேசிவருகின்றன, ஆனால் மேனாட்டு அறிஞர்களோ. இக்கலையானது கடந்தகாலத்தில் இப்பாரத நாட்டின் மூலமே பண்புடன் விள்ங்கியிருக்கிறது அதிலும் குறிப்பாக தமிழகத்திலேயே மிக உயர்வு பெற்றிருந்தது. அது மட்டுமல்ல. தாங்களே சிலகாலம் பாரத நாட்டில் வசித்து இக்கலையினைப் பயின்று நுணுக்கங்களை ஆராய்ந்து தெளிவுபடுத்தி பலநூல்கள் வெளியிட்டதாக உறுதியிட்டு அறிவித்துஉளனர். எமது சொந்த அனுபவங்களைக் கொண்டும், இந்நூலை வெளியிட முன்வந்தேன். படிப்பவர் மனதில் குழப்பமடையாதிருக்க வேண்டி ஆசிரியர், மாணவன், இருவரிடையே கேள்வி பதில் என்ற முறையில் ஆரம்ப கட்டமுதல் கடைசிவரை எல்லா விளக்கங்களையும் தெளிவாக உரைத்துள்ளோம். கைரேகை சாஸ்திரமே இன்னதென்றறியாத அன்பர்கள்கூட மிகத் தெளிவாகப் படித்து பிறருக்கு பலன்களைக் கூறும்படியான அளவு

படங்களுடனும், அதற்கான விளக்கங்களையும், தந்துள்ளேன். அதிலும் குறிப்பாக விஞ்ஞான வளர்ச்சியும் பகுத்தறிவும் பெருகிவரும் இக்காலத்திற் கேற்ப பொதுமக்கள் யாவரும் சம்மதிக்கும் படியான நிலையில் எழுதியுள்ளோம். இந்நூலை புத்தகவடிவமாக ஏராளமான பொருட் செலவையும் கருதாது அச்சிட முன் வந்த பதிப்பாசிரியருக்கு நன்றி செலுத்தக் கடவேன். இந்நூலை வாசித்துப் பயன் பெறுவது மட்டுமன்றி எம்மையும் அடுத்துபல நூல்களை எழுதுவதற்கு ஊக்கமளித்தற்கு உங்களை, இக்கால சேவையை பூரணமாக முடிக்கும்வரை ஏதும் இன்னலின்றி இருத்தற்கு எல்லாம் வல்ல இறைவனையும் இறைஞ்சுகின்றனம்.

இப்படிக்கு

ஆசிரியர்.



## ஹஸ்த இரேகை சாஸ்திரம் அட்டவணை



## ரேகைகளின் விபரம்

## விரல்களின் அங்குல அடையாளக் குறிகள்





## ஹஸ்தஇரேகை சாஸ்திரத்தின் சிலகுறிப்புகள்

கைவிரல்: கையில் சிறுவிரல் அணிவிரல் மட்டும் இருக்கப்பெற்றவனுக்கு வயது 100 அணுவிரல் மேலிறைக்குமேலிருக்கப் பெற்றவனுக்கு வயது 90 மேலிறைக்குச் சரியாயிருக்கப்பெற்றவனுக்கு வயது 80 மேலிறைக்குச் சற்று கீழிருக்கப்பெற்றவனுக்கு வயது 75 மேலிறைக் கீழிறை ஆகிய இரண்டு நடுவுக்குச் சற்று மேலாக இருக்கப்பெற்றவனுக்கு வயது 70 மேலிறைக்கும் கீழிறைக்கும் கரு 'நடுவாயிருக்கப் பெற்றவனுக்கு வயது 60, அதற்குச் சற்று கீழிருக்கப் பெற்றவனுக்கு வயது 50 அதிலுந் தாழ்ந்திருக்கப் பெற்றவர்களுக்கெல்லாம் வயது முறையே அற்பமாகும் கிலேசமுண்டு.

உள்ளங்கை ரேகை;—உள்ளங்கை ரேகை அற்பமாய் சிவந்து சிறுத்திருக்கப்பெற்லவன் செல்வமும் ஆயுளுமுடையவனு யிருப்பான், கனத்திருக்கப்பெற்றவன். துக்கமுடையவனுயிருப்பான் வலதுகையில் சங்கு சக்கரம் போல் இருக்கப்பெற்றவன் மிகுந்த திரவிய வருமான முள்ளவனும் இரப்பவர்க்குக் கொடுப்பவனுமாயிருப்பான். மச்சரேகை யிருக்கப்பெற்றவன் மிகுந்த செல்வமுடையவனு யிருப்பான் குடைபோலிருக்க பெற்றவன், உதாரண குணமுடையவனு யிருப்பான் தமரகம் போலிருக்கப் பெற்றவன் புகழுடையவனு யிருப்பான் வாள்போலிருக்கப் பெற்றவன் வீரியவானு யிருப்பான் கும்பம் போலிருக்கப் பெற்றவன் பொறுமையுடையவனு யிருப்பான் சந்திரன் போலிருக்கப்பெற்றவன் வித்துவானு யிருப்பான் வெண் சாமரம் போலிருக்கப் பெற்றவன் வெகு ஜனங்களோடு கூடி வாழ்வான் தாமரைப் புஷ்பம் போலிருக்க பெற்றவன் என்னுளும் லக்ஷ்மி வாசம் உடையவனு யிருப்பான் மாலை போலிருக்கப்பெற்றவன் போக பாக்கியத்தோடிருப்பான் வேல்போலிருக்கப் பெற்றவன் வெற்றியுடையவனுயிருப்பான் லிங்கம் போல் இருக்கப்பெற்றவன் சிவபக்தி முதலிய தேவதாபக்தி யுடையவனுயிருப்பான் ரிஷபம் போலிருக்கப்பெற்றவன் வாகன ப்ரதிஷ்டை யுடையவனு யிருப்பான் மணிக்கட்டு முதல் நடுவிரல் நுனிவரைக்கும் ஒருரேகை யிருக்கப் பெற்றவன் ஞானியாயிருப்பான், அது நடுவிரல் அடியிலே வந்திருக்கப் பெற்றவன் வித்துவானு யிருப்பான் அது சிறுவிரல் அடியிலே வந்திருக்கப் பெற்றவன் செல்வமுடையவனுவான்.

அணிவிரலடியிலே வந்திருக்கப் பெற்றவன் ஆபரணமும் இலேசமுமுடையயவனு யிருப்பான். சுண்டு விரலடியிலே வந்திருக்கப் பெற்றவன் காமவிகாரியாவன். பெருவிரல் நடுவிலே வந்திருக்கப் பெற்றவன் பல மாதரை யணைவான் உள்ளங்கையில் வைத்திருக்கப்பெற்றவன் செல்வமும் புத்திர சம்பத்து முடையவனுயிருப்பான் அந்த ரேகையில்லாதிருக்கப் பெற்றவன் மூடனுயிருப்பான், உள்ளங்கை ரேகை பருத்து புகைநிறமாயிருக்கப்பெற்றவன் மகாபாவியாவன்.

புறங்கை:—புறங்கை மிருதுவா யுயர்ந்திருக்கப் பெற்றவன் செல்வமுமழகு முள்ளவனு யிருப்பான் புறங்கை நாம்பெழப்பெற்றவன் வறுமையாளனு யிருப்பான். உரோமமிருக்கப் பெற்றவன் ஈகையற்றவனு யிருப்பான்,

கைநகம்:—கைவிரல்நகம் மிருதுவாயிருக்க பெற்றவன் செல்வமுடையவனு யிருப்பான் இராமாயிருக்கப்பெற்றவன் காமவிகாரமுடையவனு யிருப்பான் சிவந்திருக்க பெற்றவன் செல்வமுடையவனு யிருப்பான் வெளுத்திருக்கப் பெற்றவன் வறுமையுடையவனுயிருப்பான். விரல்கள் மெல்லியதாயிருக்கப்பெற்றவன் அழகும் ஆயுள் விர்த்தியுமுடையவனுயிருப்பான் பருத்திருக்கப் பெற்றவன் திடவானுயிருப்பான் நீண்டிருக்கப்பெற்றவன் குணவானுயிருப்பான். குறுகியிருக்கப்பெற்றவன் வறுமையுடைவனு யிருப்பான்.

முழங்கை:—மூழங்கை பருத்திருக்கப்பெற்றவன் செல்வமுங் கபடுமுடையவனுயிருப்பான், சிறுத்திருக்கப் பெற்றவன் வறுமையுடையவனுயிருப்பான் நரம்பு தோன்றியிருக்கப்பெற்றவன் வறுமையுடையவனு யிருப்பான் முழங்கைச்சத்தில் வலஞ்சுழி யிருக்கப்பெற்றவன் விதாரணவானுயிருப்பான் இடஞ்சுழியிருக்கப் பெற்றவன் உலுத்தவனு யிருப்பான் முழங்கை மயிர் சிறுத்துக் கறுத்திருக்கப் பெற்றவன் எந்நேரமும் பெண்போக முடையவனுயிருப்பான் சூழ்ந்திருக்கப் பெற்றவன் வறுமையுடையவனு யிருப்பான். பருத்திருக்கப் பெற்றவன் பலமுடையவனு யிருப்பான் முழங்கைக்கு மேல் தோள் வரையில் மயிரில்லாதிருக்கப் பெற்றவன் அழகுடையவனு யிருப்பான், மயிரிக்கப் பெற்றவன் வறுமையுடம் விதாரணமும் உடையவனுயிருப்பன்.

# விரல்களின் அங்குலக் குறிகள்:-



கணபதி துணை



குரு சிஷ்ய சம்பாஷணை என்னும்

# ஹஸ்த இரேகை சாஸ்திரம்

—(0)—

இல்லற மெனும் நல்லறப் பூங்காவிலே இன்பமாக வாழ்க்கை நடத்தவேண்டு மெனின், நமக்கு ஏற்படும் எதிர்கால சுக துக்கங்களை அளவிட்டு அறிந்து கொள்ளலே ஏற்றவாறுகும். கால அளவைத் தெரிந்து கொள்ளகடியாரம் எத்துணை அவசியமோ, அதேபோல் நம்முடைய அன்றாட வாழ்க்கைச் சம்பவங்களை அறிந்து கொள்ள நம்முடைய கைரேகை அவசியமாகும். அதினுள் முக்கியமாக நுணுக்கமான இரேகைகளை ஆராய்ந்து பலன்களை தெளிவுற தெரிந்து கொள்அள யாவருக்கும் எளிதான முறை அமைய வேண்டுமல்லவா? எனவே ஆசிரியர், மாணுக்சர் இருவரிடையே கேள்வி பதில் ரூபத்தில் பல சிக்கலான அம்சங்களையும் விவரிக்கிறோம்.

இன்னும் படித்து விட்டால் மட்டும் போதாது தம்முடைய சொந்த அனுபவங்களையும் கொண்டு கூட்டியும் குறைத்தும், அவரவர்களுக்கு ஏற்பபலன் களைக்கூறவேண்டும். விடுத்தல், வினுதல், என்ற

முறையே பலசந்தேகங்களை தெளிவுபடுத்த எளிதாகும் எனவே இவ்வண்ணம் அமைத்துள்ளோம்,

கைரேகை சாஸ்திரம். பிறருக்கு உரைத்துஅதன் மூலம் பயன் பெறமட்டுமே. என்பதற்கில்லை ஏனெனில் பொதுமக்கள் அனைவருமே தெரிந்து வைப்பதில் தவறில்லை." பொதுவாக சுற்ருறைக் கற்ருரே காமுறுவர்,;' என்றவண்ணம் ஓரளவுக்கு கைரேகையைத தெரிந்திருப்பவர்களே கைரேகை ஆராயச்சியாளர்களை அணுகி தனது பலன்களை அறியமுறபடும் பொழுது அவர்கள் சொல்வதை வெகுஎளிதில் புரிந்து கொள்ள சாத்தியமாகிறது.

இசைக்குறிக் கோளாக்கியே. மேனாட்டுகைரேகை அறிஞர்''சீரோ'' அவர்கள், பொதுமக்கள் அனைவருமே கைரேகை. பஞ்சதத்துவம், இதுபோன்றநூல்களை வாசித்து, அதுகளை அனுபவத்திலும் ஆராய்ந்து பார்த்திடல் வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிருர்

" கைரேகை எப்படி பார்க்கவேண்டும் "

ஆசிரியர்;—தம்பி, நேற்றுமுதல் இங்குவந்துகாத்திருக்கிய்ய காரணம்?

மாணவன்:—ஐயா! எனக்கு தங்கள்மூலம் கைரேகை சாஸ்திரத்தைபூர்ணவிளக்கத்துடன் தெரிந்து கொள்ள அவா விருக்கிறது. தாங்கள் தயவு' கூர்ந்து எனக்கு அந்த சாஸ்திரத்தை சொல்லி அருளவேண்டுகிறேன்.

ஆசிரியர்:—தம்பி, எனக்கொன்றும் தடையில்லை ஆனுல் கலைகளில்மிகச்சிக்கலானது கைரேகைக் கலையாகும். அதனைத் தெரிந்துகொள்ள அநேகநாட்களாகுமே?

மாணவர்:—ஐயா! என் ஆயுட்காலம் முழுவதுமே அதிலேயே செலவிடப்பட்டாலும் எப்படியாகிலும், எனக்குத் திருப்தியாகும் அதுவேபோதும்.

ஆசிரியர்:—தம்பி! உன் அவாவிற்கு மெச்சினேன் உன்னைப்போல் உறுதியான உள்ளம்படைத்தவர்மட்டுமே அந்தக் கலையைப் பயில முடியும், சரிஉன சந்தேகங்களைக் கேள் விளக்குகிறேன்.

மாணவன்:—ஐயா! சோதிடம் கைரேகை இவற்றுள், உயர்ந்ததும் உண்மையானதும் எது?

ஆசிரியர்: தம்பி! சொல்லுகிறேன் சோதிடம் என்பது பிறந்த கால அளவைக் கணித்து பலன்களைக் கூறுவது. கடியாரமணி அளவுஎப்படியோ அந்த அளவைக்கொண்டே பலன்களைக்கணித்து கூற முடியும் வாழ்க்கை நிர்ணயம் ஒத்துவராது. உதாரணமாக சென்னை போன்ற பெரியநகரங்களிலகூட ஒருகடியாரத்திற்கு 3 அல்லது 5 நிமிஷம் வித்தியாசமிருக்கும் கிராமாந்தரங்களில் இதைவிடமோசம இது இப்படியிருக்க ஒருகுழந்தை மத்தியானம் கடியாரமணிப்படி 2-27 க்கு பிறந்திருக்கும் ஆனல் அவர்கள் வீட்டு கடியாரமே 2–26 என்ற அறிவிக்கும் பஞ்சாங்க கணிதத்தில் அன்றையதினம் மதியம 2-20 வரையில் அசுவணியும் அதற்குமேல் பரணி நக்ஷத்திரம் இருந்தால் சோதிடர் அவர்கள் கூறுவதைக் கொண்டு 2–27க்கு அசுவணி நக்ஷத்திர மென்றே பலன்களைக் கூறமுடியும் இதனுல் எதுவுமே ஒத்துவரமுடியாது. ஆனுல் கைரேகையில் மாற்றம் கண்டால் அது கணிதகூறுபவன் குறறமே ஒழிய கால வரையில் குற்றம காணமுடியாது. ஏனெனில் ஒவ்வொருவரின் கைரேகையும நாமே நேர்ல் பதவு எடுத்துக் கொள்கிறோம் ஆனுல் முக்கியமாக எல்லா ரேகைகளும் சிதறிவிடா

மல்பிரதி எடுக்கவேண்டும். எனவே, கைரேகையைக் கொண்டு மட்டுமேபலன்களைத் தவருமல்கூற முடியும்

மாணவன்:— ஐயா! மிக்கநன்றி கைரேகையைப் பிரதி எடுக்க வேண்டுமென்று சொன்னீர்களே! பிரதி எடுக்காமல் பார்த்து பலன்களைக்கூற முடியாதா?

ஆசிரியர்—முடியும்! ஆனல் தவறுதலாக கூற முடியும் உதாரணமாக உன்னிடம்பலன் கேட்க வருபவர் ஒரு பெரிய கனவாளுக இருக்கலாம். ஆனல் சில செய்யத்தகாத செயல்களை செய்தவராக இருக்கலாம். அத்தகைய செயல்களை அப்பழுக்கில்லாமல் ஆணித்தரமாகக் கூற நீ வெட்கப்படலாம். இல்லை அச்சப்படலாம் இன்னும் சிறுரேகைகளைக் கண்டு பிடித்து நுணுக்கமான பலன்களைக்கூற காலநேரமும் ஒத்துவரபது இரண்டாவதாக அவருடன் சில நண்பர்கள் வந்திருக்கலாம். அவர்கள் எதிரில் அத்தகைய பலன்களைக் கூறுவது: அவருடைய விருப்பினை அடைவதற்கு மாருக வெறுப்பினையே அடைய வேண்டி நேரிடும். உண்மையாக பலன்களைக் கூறு விட்டாலும் அவர் மனத்திருப்தி யடையாது வெளிப் படையாகக் கூறினுலும் தன்னுடைய கவுரவ அந்தஸ்தையும் கூட இருக்கும் நண்பர் குழாமின் நிலையையும் அனுசரித்து நீ கூறிய அனைத்தும பொய்யெனச் சொல்லிவிடுவார். அதுமட்டுல்ல, சில சிக்கலான ரேகைகளை இரவிலோ பகலிலோ தனிமையில் சிந்திக்கவேண்டிய கட்டமும் வரும், எனவே கைப்பிரதி எடுத்து பலன்களை எழுதிக் கொடுத்தலே மேலான வழியாகும்.

மாணவன்:—ஐயா! கையைப் பிரதி எடுக்கும் முறையைச் சொல்லவேண்டும்.

ஆசிரியர்:—தம்பி! கைப்பிரதி எடுப்பதற்கு ஏற்ற உபகரணங்கள், ஒரு வெள்ளைக்காகிதம் ஒரு ரப்பர் குஷன் ஒரு ரோலர், ஒரு வெள்ளைத்துணி கருப்புமை. முதலாவதாக கைப்பிரதி எடுக்க வேண்டிய இரண்டு கரங்களில் உள்ளங்கையை நன்ருகத் துடைத்து விட்டு ஏதாவதொரு எண்ணையை சன்னமாக தடவியப்பின் கருப்பு அச்சுமையை ஒரு கண்ணுடித் துண்டின்மேலபோட்டு அத்துடன்சிறிது எண்ணையைக் கலந்து ரோலரினுல் எடுத்துக்கொண்டு உள்ளங்கையினுல் ரேகைகள் அடைத்து விடாவண்ணம் மெதுவாக உருட்டி பூசவேண்டும், பின்மை ஆறி விடுவதற்குள் ரப்பர் குஷனை சமமான இடத்தில் வைத்து போட்டு அதன்மேல் வெள்ளைக்காகிதத்தைவைத்து கைகளை மெதுவாக வைக்கச்செய்து சிறிது சிறிதாக அழுத்திப்பிரதிஎடுக்கவேண்டும்பிரதி தவறி விடாமலிருக்க வலது இடது என்றும் பெயர் விலாசத்தையும் எழுத வேண்டும்.

மாணவன்:—பிரதி எடுத்தபின்செய்ய வேண்டுவன யாவை?

ஆசிரியர்:—கரங்களை உள்ளங்கை மிருதுத் தன்மை பெற்றுள்ளதா, அல்லது கடினத்தன்மை பெற்றுள்ளதா? என்று அழுத்திப் பார்த்துக் குறித்துக்கொள்ள வேண்டும், பின் ஒவ்வொரு மேடுகளையும் கவனித்துக் கொண்டால் பின்பலன் எழுத சுலபமாக இருக்கும்.

மாணவன்:—இதுவன்றி இன்னும் மற்றைய குறிப்புகள் யாவை?

ஆசிரியர்:—சாதகர் பெயர்; வயது பிறந்தநாள் பகல் அல்லது இரவு, இதுகளையும்உள்ளங்கையிலுள்ள

மச்சங்களையும் இன்னும் சாதகர் குறிப்பாக ஏதாவது கேள்விகள் கேட்பினுமகுறித்தும் கொள்ளவேண்டும

மாணவன்:—இவை யெல்லாம் குறித்த பின் செய்ய வேண்டுவன யாவை?

ஆசிரியர்:—பின் ஒரு நூலைக்கொண்டு முதலில் விரல்களையும் பின் உள்ளங்கையின் சதுரத்தையும அளந்து தனித்தனியே குறித்துக் கொள்ள வேணடும்

மாணவன்:— ஐயா! இன்னும் சாதகரிடம் ஏதேனும் கேட்க வேண்டியதுண்டா?

ஆசிரியர;—உண்டு சாதகருக்கு பொதுப்பலன் போதுமா? அல்லது ஆயுட்காலம்வரை வருடவாரி பலன் வேண்டுமா? அல்லது எவ்வளவு கால பலன் தேவை என்பதையும் கேட்க வேண்டும்

## குரு மேடு




மாணவன்—ஐயா ! இது வரை சொல்லிவந்தயாவும் தெரிந்து விட்டன இனி பலன் சொல்லும் விதத்தைச் சொல்லுங்கள்?

ஆசிரியர்:— மிக்க சந்தோஷம். முதலில் மேடுகளைப்பற்றிச் சொல்லுகிறேன் முதலாவதாக குரு மேட்டினைப்பற்றிக் குறித்துக் கொண்டிருக்கிறாய் அல்லவா? அந்தமேடு எவ்வளவு உயர்ந்து இருக்கிறது அது எந்த மேட்டின் பாரிசத்தில் சாய்ந்திருக்கிறது. அல்லது தனியளவில்

உயர்ந்திருக்கிறதா என்பதைப் பற்றி ஆராய வேண்டும்.

மாணவன்:—குருமேடு தனியளவில் உயர்ந்திருந்தால் என்ன பலன்?

ஆசிரியர்:—குருமேடு தனியளவில் உயர்ந்திருப்பின் தான்சிந்தித்தவாறே எக்காரியங்களையும் முடிந்திடும் வல்லமைசாலியும். நல்ல அறிவாளியும்வித்தை மிதமாயிருப்பினும் தன் சுயமதியால் பெருக்கிக் கொண்டு திகழ்பவராயும் கடவுள் விசுவாசியாகவும் ஈகை. தயை, தாக்ஷிண்யம் இவைகள் பொருந்தியிருப்பவராயும், தன்னால் முடிந்த அளவுக்கு பிறருக்கு உதவி புரிபவராயும், பிறருடையசெல்வத்தில் இச்சை கொள்ளாதவராயும், ஆன்றோர் ஆசிக்கும் அன்புக்கும் பாத்திரராயும் மேலான குடும்பத்தில் பிறந்தவராயும், சிலகவுரவ பட்டம் பதவிகளையும் வகிப்பவராயும தனவந்தராயும். குலத்தினருக்கு வழிகாட்டியாகவும் தான கூடியவரையில் சுபமுயற்சியுடன் தோட்டம் துறவு, இலைம், இவையிருப்பவராயும் பிறருக்கு சில உண்மைகளை எடுத்து போதிப்பவராயும் சமாதானப்பிரியராயும், அகிம்சையை விரும்பாதவராயும் நீதிக்கும் நேர்மைக்கும் கட்டுப்பட்டும் இருப்பார்.

மாணவன்:—ஐயா! குரு மேட்டின் விசேஷ பலன் மட்டும் சொன்னீர்களே! அடுத்து அதில் உள்ள இரகசியங்களையும் விசேஷ குறிகளையும்பற்றி விளக்கமாய்க் கூறுங்கள்?

ஆசிரியர்:—தம்பி! உன் ஆர்வத்திற்கு மெச்சுகிறேன் ஆயினும் பூராவிவரங்களையும் ஒரே தடவையில் சொன்னால் உன்னால் புரிந்து கொள்ள முடியாது குழப்பமேற்பட்டு விடும் எனவே அடுத்துவரும் பாகங்களில் பகுதி பகுதியாக சொல்லி வருகிறேன் இந்த பாகத்தில் ஆரம்ப பகுதிகளை மட்டும்சொல்லப்போகி

றேன், அப்போது தான், உனக்கும் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்.

மாணவன்:— ஐயா! அப்படியே ஆகட்டும தாங்கள் சொல்லியபடியே நன்றென நினைக்கின்றேன் அடுத்து சனி மேட்டினைப்பற்றி கூறுங்கள்-

## சனிமேடு




ஆசிரியர்:—தம்பி! சனி மேடு கம்பீரமாயும், அதிக சிவப்புற்றும சனி விரல் கனத்தும் அமைந்திருந்தால் சனி ஆதிக்கம் பெற்றவர் எனக் கூறலாம். சனி மேட்டின் பலன்களையே அதிக விளக்கமாக எடுத்துக்கூற வேண்டும் ஏனெனில். எல்லாவித வாழ்க்கையின் முக்கியத்வமும் சனி மேட்டினைக் கொண்டே நிர்ணயித்து விடலாம். அதுவுமன்றி குரு சுக்கிரன் சூரியன் செவ்வாய் இவைகளின் பலன்களையும் சனிமேட்டின் உயர்வினால் அடக்கி விடக்கூடும் என்பது அனுபவத்தினாலும் ஆதாரத்தினாலும்கண்ட உண்மையாகும், சனிமேடு ஆதிக்கமுள்ள சாதகர் ஏழுவகை மனித தோற்றங்களில் ஏற்றங்கண்டவராவர் தெளிவும் அளவுக்கு மீறிய மனோ சக்தியையும் பெற்றுப், கூர்மையான சிந்தனைச் சிற்பியாகவும் விளங்குவர் எத்தகையநோய் வாய்ப்படினும் சிந்தை கொள்ளாதிருப்பர் தனக்கு மீறிய நோய்பாதை ஏற்பட்டாலொழியசிகிச்சைக்கு ஒத்துவரமாட்டார்தேகத்தின் விவரமாவது நெட்டையான உருவமும் கைகால்களிலுள்ள விரல்கள் நீண்டும் முகம் நீண்டு' ஆனால்

1. அம்புக்குறி 2. சக்கரம் 3. திரிகோணம் 4. சங்குசக்கரம் 5. கோதுமைக்குறி 6. சூலம் 7. நக்ஷத்திரம் 8. சிலுவை 9. கிராஸ் 10. சூரியரேகை 11. வேல்குறி 12. அங்குசம் 13. துண்டுகோள் 14. சிக்கல்வலை கருப்புமச்சம் வெள்ளை புள்ளி.




1. விதிரேகை 2. ஆரோக்கியரேகை 3. செல்வாக்குரேகை 4. மணிக்கட்டுரேகை 5. சூரியரேகை 6. பாசரேகை 7. இருதயரேகை 8. ஆயுள்ரேகை 9. புத்திரரேகை 10. சந்தான ரேகை.

ஒட்டியகண்களோடு அதிக கடுமை நிறைந்துடனும் இருப்பர் தோள்கள் உயர்ந்து. புஜங்கள் ஆதரவற்றுள்ளவைபோல் தோன்றும். சனிமேடு உயர்ந்துள்ளவர்கள் தங்கள் திரேகத்தின் பேரில்கூட சந்தேக எண்ணம் கொண்டிருப்பவர் எனில் பிறவற்றுள் எப்படி நம்பிடுவர் என்று அறிந்துகொள்.

இவர்கள் இச்சைகொள்ளும் தொழில்கள் நிலபுலன்களைத் திருத்திப் பயிரிடுவதிலும். ரசாயனம் இரும்பு சம்மந்தப்பட்ட தொழில்களிலேயே அதிகம் நாட்டம் கொண்டவர்கள் கொடுக்கல் வாங்கலில் கூட தான் விரும்பாதவிடத்தே எத்துணை முயற்சித்த போதும் தரவோ வாங்கவோ மாட்டார்கள்.

சனிமேடு பலமுடையவர் தாம் தோல்வி கண்டவிடத்து தாமே உயிரைமாய்த்துக் கொள்ளக்கூட பின் வாங்கமாட்டார்கள். பிறரை ஈவிரக்கமின்றி சண்டிக்கவும் அஞ்சிடார். எனவே போலிஸ் இலாகாசம்பந்தப் பட்டவகையில் முன்னுக்கு வரபார்க்க முண்டு இவர்கள் எவ்வித மனச்சிக்கல் பிரச்சனைகளையும் யாரிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ளவிரும்பமாட்டார்கள் இதுமட்டுமன்றி சனி மேட்டின் அளவைக் கொண்டே குடும்ப வாழ்க்கைத் திட்டங்களையும் நிர்ணயித்து கூறவேண்டும் இன்னும் இதனைப் பற்றிய விபரங்களை அடுத்த பாகத்தில் தெளிவுர எடுத்துரைக்கிறேன்.

மாணவர்:—ஐயா! இதுவரை சனிமேட்டின் பலனைச் சொன்னீர்கள். இனி அடுத்து எந்தமேட்டினை எடுத்துப் பேசவேண்டும்?

3

## சூரிய மேடு



ஆசிரியர்:— தம்பி! சூரிய மேட்டினைப் பற்றிக் கூறப் போகிறேன் மோதிர விரலுக்கு கீழும் சனி மேட்டிற்கு அடுத்தும் உள்ளது சூரியமேடாகும் இம்மேடானது எவ்வித குறைபாடின்றி சாதகர்கையி லிருந்திடின் அவர் மேன்மை பெற்றவராவர் இதைப் பற்றி எவ்வளவு புகழ்ந்து வேண்டு மானாலும் அளவின்றி பேசலாம். ஏனெனில் சிறந்த பண்பாடுடையவருக்கு மட்டும் அவ்வாறு அமையும் அழகிய வஸ்துக்களில் விருப்பம் கொள்பவராயும் அணிவதிலோ. தொழில் நடத்துவதிலோ பிறருக்கு கொடுப்பதிலோ அதனையே விரும்புவர் இவருடைய வசீகரமான சக்தியினால் பிறரை தன் வசப்படுத்திக் கொள்ளும் அமைப்பண்டு சிறப்பு மிகும் கலைகளில் ஏதாவது ஒன்றில் வல்லவராயும் பிறர்புகழும்படியான சில கௌரவபட்டம்பதவிவகிக்கும்படியான நிலையிலும் இருக்கலாம் அதுவுமன்றி எப்பொழுதும் முன்னேற்றத்திற்கான சிந்தனையிலேயேஇருந்திடுவர்எம்முயற்சியிலும் பின்னடையார்.

மாணவன்:—ஐயா! இதுவரை சொல்லி வந்ததை மிக கவனத்துடன் கேட்டு வந்தேன் இதில் குற்றம்குறைகள் எப்படிக்கண்டு பிடிக்க வேண்டும். அதிலும் அளவுகள் எப்படித் தெரிந்து கொள்ள வண்டும்?

ஆசிரியர்:—தம்பி! முன்பே இதைப்பற்றி சொன்னேன் ஏனென்ருல் ஒரே மொத்தமாக எல்லா விபரமும் சொன்னல் நீ புரிந்து கொள்ள முடியாது அத்துடன் கவனத்திற்கு கொண்டு வரவும் முடியாது அளவு விபரங்களை தனியாக விபரமாக சொல்லுகிறேன் பின்ஞல் அறிந்து கொள்ளலாம்.

மாணவன்:—ஐயா! தொந்தரவு கொடுத்ததற்கு மன்னிக்கவும் தங்கள் இஷ்டப்படியே சொல்லிதாருங்கள் பின் எந்தமேட்டைப்பற்றி பேச வேண்டும்.

## புதன் மேடு



ஆசிரியர்:—தம்பி! அடுத்தது சூரியமேட்டை அடுத்து நான்காவது விரலுக்குக் கீழே சதுரமாக அமைந்துள்ளது புதன்மேடு

மாணவன்:—ஐயா! இப்பொழுது புதன் மேட்டின் விபரம் சொல்லுங்கள்?

ஆசிரியர்:--தம்பி! புதன் மேட்டினைப் பார்த்துக் கொள்வதோடு அதற்கு மேல் இருக்கும் நான்காவது விரலாகிய சுண்டு விரலையும் எப்படியிருக்கிறது என்று கவனிக்க வேண்டும். செங்குத்தாயும் செழுமையாயுப் அமைந்திருந்தால் ஆராய்ச்சி துறையிலேயோ அல்லது பிறர் மேன்மையாக நினைக்கும்படியாக வக்கில் வைத்தியர் அல்லது ஆசிரியர் இத்தகைய தொழில்களில் பெரும் புகழும் விளங்கச் செய்யும்

சதா மூளைக்கு வேலைகொடுப்பவராயும், சில பெரிய ஒப்பந்தம் தொழில் புரிபவராயும் சுறு சுறுப்புடைய வராயும் மனோபலம் பெற்றவராயும் மின்சார சக்தியினை ஒத்திருப்பவரும் தாம்செய்யும் தொழில் மூலம் இதனை வசீகரித்திருப்பவரும் இன்னும் மிருக வகையினை அதிக பக்ஷத்துடன் நேசித்து வருபவர் சொல் சக்தி சித்தி பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் தொழில் புரியும் ஆற்றல் மிக்கவர்கள் சிலர் பிறரை ஏமாற்றி தாம் கஷ்டப்படாமல் கூடவாழ்ந்து வருவர் சிலர் பிறருடைய நன்மை தீமைகளை எடுத்துச் சொல்லும் வாய்ப்புபெற்றிருப்பர் இவர்களுக்கு இளமையிலேயே திருமணம்ஏற்பட்டுவிடும் தம்மனைவிசதா அழகு செய்வதையே விரும்புவர் ஆனல் அடிக்கடி திடமற்ற சரீரத்தையும் சித்தத்தையும் கொண்டிருப்பர் பித்தம் அடிக்கடி ஏற்படும் தனது கொடுக்கல வாங்கலில் அதிக கவனம் செலுத்துவர் ஆனல் இந்த இடங்களில் இருதய ரேகையையும் ஆராய்ந்துபலன் சொல்ல வேண்டும் குறிப்பாக இவர்கள் அவசரப் பட்டு எதையும்செய்ய மாட்டார்கள் எனவே நிதானமாய்ப்பலன் சொல்ல வேண்டும்.



## செவ்வாய் மேடு







மாணவன்:--ஐயா! புதன்மேடு இவ்வளவு சிக்கலான பலன்கள் கொண்டது என்பதைபபற்றி தெரிந்து கொண்டேன் அடுத்தது எந்த மேட்டினைப் பற்றிப்பேசவேண்டும்?

ஆசிரியர்:—தம்பி! அடுத்தது இதைவிடகடின மானதும் மூன்று இடங்களைக் கொண்டதுமான செவ்வாய் மேடாகும்.

மாணவன்:—ஐயா! ஆச்சரியமாக இருக்கிறதே! செவ்வாய் மேடு மூன்று இடங்களைப் பெற்றுள்ளதாக விபரமாகக் கூறுங்கள்

ஆசிரியா:—தம்பி! ஆம் செவ்வாய் மேடு புதன் மேட்டிற்கு கீழேயிருந்து ஆரம்பித்து குருமேட்டிற்கு கீழே முடிகிறது எனவே புதன் மேட்டிற்கு கீழே ஒரு பகுதியும் மத்தியில் ஒருபகுதியும் குரு மேட்டிற்கு கீழே மூன்றும் பகுதியும் ஆகும்

மாணவன்:—ஐயா! அப்படியாயின், மூன்று இடங்களிலும் சேர்ந்து ஒரேபலனைக் கூற முடியுமா?

ஆசிரியர்:—முடியும் ஆனால் அது எப்படி செங்குத்தாக கடை சிவரை அமைந்துள்ளதா என்பதைக் கண்டறிய வேண்டும் முதலில் எப்படியெனில் புதன் மேட்டிற்கு கீழேயும் ஆக இருபக்கங்களிலும் நன்றாக செழிப்புற்று இருக்கிறகா என்பதை அறியவேண்டும் செவ்வாய் மேடு அதிசபிரகாசம் உடையவர்கள் இத் தகையோர் பிறருக்காக தன் உயிரை கொடுக்கக்கூட பின்வாங்க மாட்டார்கள் சேனைகளில் மட்டுமே சேர்ந்து ஊழியம் செய்வர் என்தபற்குயில்லை ஏனெனில் தம்வாழ்வையே தேசத்துக்காக அர்ட்பனம்செய்யும் தேச தொண்டனவே விளங்கலாம் காடு மேடு என்னும் பயமின்றி எதற்கும் துணிந்து எங்குவேண்டுமானாலும் செல்லுவதற்கு தயங்க மாட்டார்கள். அனுவசியமான சண்டைக்குப் போகமாட்டார்கள், வீண் சண்டை வந்தாலும் விடமாட்டார்கள். இவர்கள் தம்மிலும் தாழ்ந்தோரிடத்தேநேசம்கொள்ளவிரும்புவர் எதிர்பாராதுஏதாவதுதோல்விஏற்பட்டாலும்அதைப் பற்றி வருத்தப்படமாட்டார்கள், மிருகங்களோ விஷ

ஐந்துக்களோ இவர்களைக்கண்டு அச்சப்படும் என்ருல் இனி இவர்களைப்பற்றி அதிகம் சொல்ல வேண்டிய தில்லை சுக்கிர மேட்டுக்கு மேல் உள்ள செவ்வாய் மேடு பருத்து உன்னத நிலையிலிருந்தால் தாம்மாதர் தம்மால் விரும்பப்படுவராயும் சுக, துக்கம் எதையும் மனதில்கொள்ளாதவராயும் அதிகஉணவு உட்கொள்ளாதவராயும், அரசாங்கப் பற்றுடையவராயும் இன்னும் அடிக்கடி பிரயாண இச்சையுடையவராயும் இருப்பர் சிலபெரும் தலைவர்களைக் கூட தைரியமாக சென்று பேட்டி கண்டும், நுண்ணிய அறிவுத்திறனைக் கொண்டிருப்பர் சதாயோக இச்சை கொண்டிருப்பர் சமாதானப் பிரியராயும் உன்னத ஆடை அணிகளில் விருப்பம் கொண்டிருப்பர் இன்னும் இதில் உள்ளசில சிக்கலான விளக்கங்களை அடுத்துவரும் பாகங்களில் கூறுகிறேன்.

மாணவன்:—ஐயா! தாங்கள் சொல்லிவந்த அங்காரகமேட்டின் மத்தியில் உள்ள பகுதியைப்பற்றி சொல்ல வில்லையே

ஆசிரியர்:—தம்பி! ஆமாம் மறந்தேபோய் விட்டேன் நல்ல சமயத்தில் நினைவூட்டினுய் இல்லையெனில் இந்தபகுதியை நீஎப்பொழுது அறிந்துகொள்ள முடியும் சொல்லுகிறேன் கவனமாககேள்!

அங்காரக மேட்டின் மத்தியபகுதியைக்கொண்டு சாதகரின் முழுத்திறமையைப்பற்றி பேசவேண்டும் ஏனெனிற் இந்த இடத்தில் கேதுவின் பிரியம் இருக்கிறதாக ஆராய்ச்சிகள் வாயிலாகவும், அனுபோகமூலமாகவும் தெரிய வருகிறது.

சாதகர் எத்தகைய நல்ல செயலுக்கு அஞ்சமாட்டாரோ, அதே அளவுக்கும் துணிவுடன் செயலாற்றக்கூடிய, வல்லமை பெற்றிடுவாரென்றும் சில பாபகிருத்தியங்களையும் புரிந்து கூட, அதிகமான

சொத்துக்களைச் சேர்த்திட இச்சை கொள்வர். அது மட்டுமல்ல இச்சாதகர் போர் சம்மந்தமான சரித்திர ஆராய்ச்சி சம்மந்தமான கதைகளைப் படிப்பதிலும், அத்தகைய நாடகம், சினிமா, பார்ப்பதிலும் வாட் போர், மல்யுத்தம் இவைகளைப் பார்ப்பதிலும் மட்டு மன்றி தாமே பயில்வதற்கு கூட விரும்புவர்.

இவர்கள் பிறர்பொருளை தம்வசம் கொள்ள மட் டுமே ஒத்துக்கொள்வாரேயின்றி எக்காரணம் முன் னிட்டும் தம் பொருளைபிறர் அபகரிக்கமனந்தரார்இன் னும் இதைப்பற்றிய ஆராய்ச்சிகள் பலவற்றை அடுத்த பாகத்தில் தெளிவாகக் கூறுகிறேன்.

## சந்திர மேடு




மாணவர்:—ஐயா! அங் கார மேட்டினைப்பற்றி பூரா விளக்கங்களையும் புரிந்து கொண்டேன் அடுத்து எந்த மேட்டினைப்பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

ஆசிரியர்:—தம்பி! இனி சந்திர மேட்டைப்பற்றிச் சொல்லுகிறன் அங்காரக மேட்டிற்கு கீழும், கங்கண மேட்டிற்கு மேல் பாரிசத் திலும் அதிக இடத்தை வியாபித்துக் கொண்டிருப்பது சந்திரமேடாகும் அதிலும், சிவந்த நிறத்துடனும் சமமான உயரத் துடனும் நக்ஷத்திரக் குறியுடனோ, நீண்ட சதுரங் கமோ, அல்லது நீண்டு வளைந்த ரேகையுடனோ அமைந்திருந்தால்'மிகப்பிரகாசமுடையசந்திரமேடா கும்.

இந்த சாதகர்மனஓய்வுடனும், தனித்திருக்கவும் பிரியப் டுவர். காலப்பிரதேச காட்சிகளையே எண்ணத்தில் கொண்டிருப்பவர்சிலர் ஸாஸனமான தான கருமங்கள் புரிவதலே இச்சை கொள்வர் அடிக்கடி உல்லாஸ பிரயாணங்களில் ஏற்க அவர்சொள்வர்ஒரு சிலருக்கு கடல்கடந்துப் உத்தியோகமோ தொழிலோ ஏற்படலாம் ஆனால் அந்தஇடத்தில் மற்ற இடங்களையும் அனுசரித்து பலன்சொல்ல வேண்டும் ஏனெனில் வித்தைக்கோ தானத்திற்கோ, ஏற்ப பலன்களைக் கூட்டியும் குறைந்தும் சொல்லவேண்டும் இத்தகையோர் மாதரிடமும் மாதுல வம்சத்தர்ரிடமும்அதிக பற்று கொண்டிருப்பார் சீதள உபாதைகள் மட்டும் அதிகம் பிடிக்குமேதவிர இதர நோய்கள் அவ்வளவு பாதிக்காது,

மாணவன்:—சந்திர மேட்டில் அருள் ரேகை உண்டானால் என்னபலன்.

ஆசிரியர்:—தம்பி! இரேகைகள் விஷபத்தைப் பற்றி இப்பொழுது கேட்க வேண்டாம் இப்பொழுது மேடுகளைப்பற்றிய விபரம் கேட்டு அறிந்துகொள்.

மாணவன்:—ஐயா! அப்படியே சொல்லி வாருங்கள் இனி அடுத்த மேட்டினைப்பற்றி கூறுங்கள்.

ஆசிரியர்:—தம்பி! இனி அடுத்தமேடு சுக்கிர மேடு இதைப்பற்றி கூறுகிறேன்.

4

## சுக்கிர மேடு




மாணவன்:—ஐயா! இது வரை சொல்லி வந்த மேடுகளை இவ்வளவு விபரமாகச் சொல்லவில்லையே இதைப் பற்றி மட்டும் அவ்வளவு விசேஷமாகச் சொல்லக் காரணம்.

ஆசிரியர்;—தம்பி! நீயும் குறிப்பாகத் தான் கேட்கிருய் இதரமேடுகள் யாவும் ஒவ்வொரு பகுதியை மட்டுமே குறிப்பிடலாம் ஆனுல் சுக்கிர மேட்டினைக் கொண்டு மட்டும் பல பகுதிகளையும் பற்றி பேசலாம் அதாவது மாதர் சம்மந்தமான காதல் விஷயங்கள் சிங்கார ரேகையிலுள்ள விஷயங்கள் பூமி பூஸ்திதி அதிருஷ்டவகைகள் குணம் தன்மை பூர்வீக அம்சம் இவைகளைப்பற்றி விரிவாகவும், விளக்கமாகவும்பலன் களைக் கூறலாம்.

மாணவன்:—ஐயா! அப்படியாளுல் இத்தகைய விசேஷமானமேடு எவ்வண்ணம் இருப்பின் உயர்ந்த தாக கொள்ளலாம்.

ஆசிரியர்:—தம்பி! சுக்கிரமேடு பெருவிரலுக்கு கீழும் அங்காரக மேட்டிற்கு பக்கத்திலும் கங்கண மேட்டிற்கு மேலும் உருண்டையாக பந்து போலும் சிவந்த நிறமேனியுடனும் மழமழப்புடனும் குறுக்கிட்ட ரேகைகளோசல்லடை இரேகைகளோ இல்லாமல் சுத்தமாக இருப்பின் இது உயர்ந்த மேடாகும்.

மாணவர்:-ஐயா! குறிப்பறிந்து சொல்வதென்றால் எப்படி?

ஆசிரியர்:--தம்பி! சுக்கிரமேடு, குருமேடு, சந்திர மேடு, புதமேடு சூரிய மேடு இதுகளை கவனித்துப் பார்த்து பலன்களைச் சொல்ல வேண்டும்.

உதாரணமாக குருமேடு உயர்ந்து அதற்கேற்ப சூரியமேடு சூரியரேகையும் மற்றும் ரேகைகளும் பரிசுத்தமான நிலையைப் பெற்றிருந்தால் இத்தகைய சாதகரை சனிமேட்டின் மிதப்பால் அதிகமாகப்பாதிக்காது இனி அடுத்த விஷயத்திற்கு வருவோம்.

மாணவன்:-ஐயா! உங்களுக்கு தொந்தரவு கொடுத்ததற்கு மன்னித்து விடுங்கள் நீங்கள் சொன்ன அத்தனை விஷயங்களையும் தெளிவாகப்புரிந்துகொண்டன இனி எந்த மேட்டினைப்பற்றிதெரிந்துகொள்ள வேண்டும்.



ஆசிரியர்:--தம்பி! இனி சூரிய மேட்டினைப் பற்றி ஆராய்வோம். சூரியமேடு மூன்ருவது விரலுக்கு சற்றே தள்ளியும் பகசுத்து மேட்டினை அணுகியும் அதிக [பிரகாச மில்லாமலும்] உயர் வின்றியும் இருந்தால் இத்தகைய சூரிய மேட்டினை உடையோர் தானுகவரக் கூடிய பதவி பட்டம் புகழ் உயர்வு இவையாவற்றையும் தன் திறமையற்ற

போக்கினால் தடுத்துக் கொள்பவராயும், அடிக்கடி உஷ்ண சம்மந்த நோய்களினால் தொந்தரவு படுபவராயும், சிந்தனை மட்டும் அதிகம் இருந்து அவ்வண்ணம் செயலாற்றமுடியாதவராயும் இலைபந்துகளிடத்தே வெறுப்பும் ஆததுறையில் வரக்கூடிய லாபம் முதலான வகைகளை தடுத்துவிடுபவராயும் அடிக்கடி பிறநாடுகளைப்பற்றியே புகழ்பவராயும் தன் கௌரவ நிலையைத் தானே குறைத்துக் கொள்பவராயும் குரோத மனப்பான்மை உள்ளவராயும் அடிக்கடி பிரயாண நினைப்பிலேயே லயித்திருப்பவராயும் இருப்பார்,

மாணவன்:—ஐயா! சனிமேட்டினை விளக்கமாக கூறுனீர்கள் மிக்க நன்றி ஆனால் அம்மேடு மிக உயர்வாக இருந்தால் என்ன என்று கூறுவது.

ஆசிரியர்:—தம்பி! உன் சிந்தனை சக்தியைக் கண்டு களிப்படைகிறேன் இரண்டாவது விரலுக்கு அப்பால் உயர்வாக உள்ளமேடு தான் சனிமேடு என்பதை கவனத்தில் வைத்துக் கொள்.

மாணவர்:—ஐயா! இதுவரை சுக்கிரமேடு எப்படி உயர்ந்திருக்கவேண்டும்என்பதைப்பற்றிதெரிந்து கொண்டேன். இன்னும் அத்தகைய சுக்கிர மேட்டினைப் பெற்றவர் பலன்களைக் கூறுங்கள்.

ஆசிரியர்:—தம்பி! இவ்வண்ணம் அமைந்தசுக்கிரமேட்டினைப் பெற்ற சாதகர் தன் திரேகத்தினாலே பிறரை வசீகரிக்கச் செய்யும் சக்தியைப் பெற்றிடுவர் அதிலும் குறிப்பாக ஆணாக இருப்பின் பெண்ணினத்தையும், பெண்ணாக இருப்பின் ஆணினத்தையும் விருப்பம் கொள்ளச் செய்வர். காதல் விஷயங்க

ருக்கு தோல்வியே கிட்டாது- இவருடைய வாழ்க்கை எதுவும் இன்னலின்றி நடை பெற்றுவரும். சில எதிர் பார்த்திடாத அதிருஷ்ட வகைத்தனமும், மாதர் சம் மந்தமான தனமும் சேரும். ஆனல் தனரேகை அதி ருஷ்டரேகை இதுகளை அனுசரித்து பலன்களைக் கூட் டியும் குறைத்தும் சொல்ல வேண்டும்.

மாணவன்:—ஐயா! உன்னதபிரகாசம் கொண்ட சுக்கிர மேட்டினைப் பெற்ற சாதகருடைய குணங்கள் தன்மைகள் யாவை.

ஆசிரியர்;—தம்பி! இத்தகைய சாதகருக்கு பிரபு நேயமும் கனதனவான்கள் சகாயமும் அரசசபையில் கூட நன் மதிப்பும் சதா நல்ல ஆரோக்கியமான உண வும் சுத்தமான ஆடைகள் அணிவதிலும் தங்களை பூஷணங்களால் அணிவதும் அழகு பார்த்துக்கொள் வதிலும் பிறரால் பெருமைபடுத்திப் பேசப்படும் பொ ழும் ஆனந்த மடையும் குணமும் கொண்டிருப்பர்.

மாணவன்:—ஐயா! ஒவ்வொரு மேடுகளைப்பற்றி யும் தெளிவாகவும் புரியும்படி சகல விளக்கங்களையும் பற்றிக் கூறினீர்கள் நானும் தெளிவாகத் தெரிந்து கொண்டேன் ஆனல் ஒவ்வொரு மேடுகளும், உயர் வாக மட்டும் இருந்திடில் என்ன பலன்கள் நடக்கும் என்பதை மட்டும் சொன்னீர்களே ஆனல் மேற் கண்டமேடுகள் பிரகாசமற்றோ அல்லது குன்றுதல டைந்தோ இருந்தால் எப்படிச் சொல்ல வேண்டும் என்பதைத் தெளிவாகக் கூறவேண்டுகிறேன்?

ஆசிரியர்:—தம்பி! ஆம் நீ கேட்டது மிக மிக முக்கியம் தான் சரி, உன் சந்தேகங்களைக் கேள்.

மாணவர்;-ஐயா! முதலாவதாக குரு மேட்டினைப்பற்றி கூறுங்கள்?



ஆசிரியர்; தம்பி! குருமேடு மிதமான பிரகாசத்துடனே அல்லது சரிந்தோ இருந்தால் அது எந்த மேட்டினை அணுகி சரிந்திருக்கிறது என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும் இந்தகைய குரு மேட்டினை உடையவர் மிதமான பலனையே அடைவர் அதாவது மேலோர் நேயம் கொள்ளாமலும் தாம் சிந்தித்தவாறு முடியாமலும் தெய்வ பக்தி இல்லாதவராயும் ஆன்றோரைத் தூஷிப்பவராயும் மனோசக்தி திடமில்லாதவராயும் அடிக்கடி பலவீனமடைவராயும் சுற்றத்தார் நண்பரிடையே விரோதித்துக் கொள்பவராயும் மன நிம்மதி யில்லாதவராயும் இருப்பர் இத்தகையோர் எதற்கெடுத்தாலும் சந்தேகிப்பவராயும் வீண் சச்சரவுகளைதேடிக்கொள்பவராயும் அனுவஸ்யமான விரயங்களைத் தேடிக்கொள்பவராயும் சதா இருதயந்தனிலே இருண்ட சூழ் நிலையைப் பெற்றிருப்பவராயும் மேடு சரிந்து இருந்தால்பூர் வீகஆஸ்திகளிருப்பனும் தான் விரயப்படுத்துபவராயும எவர் என்ன கூறினும் எடுத்துக்கொள்ளாதவராயும் இருப்பர் குருமேடு உயர்ந்து இருப்பின் எவ்வளவு உயர்ந்த பலன்களைக் கூறமுடியுமோ அந்த அளவுக்கு தாழ்ந்தும் பிரகாச மற்றும் இருந்தால் மந்தமானபலன்களை எதின்மையடைந்த சேர்த்துபலன்சொல்லலாம் இன்னும் கையினுல் குரு மேட்டினை அழுத்திப்பார்க்க வேண்

டும் அப்பொழுது ஏற்ப கூட்டியும் குறைத்தும் பலன் சளைக் கூறல் வேண்டும்,

மாணவன்—:ஐயா! மெத்த சந்தோஷம் இனி அடுத்து சனிமேட்டினை பற்றிக் கூறுங்கள்?



ஆசிரியர்:— தம்பி! சரி இனி சனி மேட்டினைப் பற்றி சொல்லுகிறேன் கவனமாய்க் கேட்டுக் கொள்.

சனி மேடானது இரண்டாவது விரலுக்கு சற்றே தள்ளியும் உயரமில்லாமல் தாழ்ந்தும் சிலகுறுக் கிட்ட ரேகைகள் படர்ந்தும் அதிக பிரகாச மில்லாமலும் கருமையடைந்தும் இருக்குமானல் அந்தசனி மேடு உயர்வற்றதாக கருதவேண்டும் இத்தகையசனி மேட்டினை உடையவர்கள் தங்கள் திரேகத்தின்பேரில் கூட சந்தேக எண்ணம் கொண்டவர்களாயும் இன்னும் அடிக்கடிகைகால் இடுப்பு மார்பு முதலிய அவயவங்களில் பலவீனம் கொண்டவராயும் வீணை சண்டைசச்சரவுகளை உண்டாக்கிக் கொள்பவராயும் குடும்பத்தில் சதாகுழப்பத்தை உண்டாக்குபவராயும்' மனோநிம்மதி அற்றவராயும் எதிலும் பற்றில்லாதவராயும் உற்ற சிநேகிதனிடத்தும் கூட மன வேற்றுமை கொள்பவராயும் அடிக்கடி வீண் செலவுகளைச் செய்து விட்டு பின் அதைநினைத்து நினைத்து வருந்துபவராயும் கலகப்பிரியராயும், அதிகாரிகளிடத்தும் ஆன்றோரிடத்தும் துவேஷித்துக் கொள்பவராயும் இனபந்துவகையில்சச்சரவைஉண்டாக்கிக்கொள்பவராயும் நீச நேயம் விரும்புவராயும் மனைவி புத்திர

வகையில் கூட உண்மை கூற விரும்பாதவராயும் அநு வசியமான பிரயாணங்களை விருப்பிவராயும் தெய்வ பக்தியிலாதவராயும் அடிக்கடி தொழில்தனை மாற்றிச் செய்பவராயும் மன உறுதியில்லாதவராயும், அரசியல் சட்ட திட்டங்களுக்கு குதர்க்கம் தெரிவிப்பவராயும் தான் நினைத்தது சரியென சாதிப்பவராயும் இருப்பர் இன்னும் இத்தகையோருக்கு இருதய ரேகையும்' ஆயுள்ரேகையும் பல வீனப்பட்டிருந்தால் நோய்கண்ட விடத்து, உடனுக்குடன் குணமாகாது அதிக நாட்கள் பின்னரே குணம் காணமுடியும் நோயுற்றவிடத்தே பிறரிடமும் வெறுப்பாக நடந்து கொள்வர் இன்னும் செல்வக்கு ரேகையோ தன ரேகையோ பலவீனம் கண்டிருந்தால் இவர்கள் எவ்வளவு தான் முயற்சி செய்த போதிலும் பொருள் சேர்க்க முடியாது இனபந்துக்களின் அபசு காரியங்களில் கூட கலந்து கொள்ள மாட்டார்கள் குடும்பத்தையே வெறுக்கக் கூடியவரென்றால் இவர்களைப் பற்றி அதிகம் கூற வேண்டிய தில்லையல்லவா.

மாணவன்:—ஐயா! இவ்வளவு கொடுமையாக வருபவர்களிடம் பலன் களைக்கூற முடியுமா?

ஆசிரியர்;—தம்பி! நன்றாக கேட்டாய் இதைப் பற்றி முன்னரே பல தடவை உனக்கு விளக்கமாகக் கூறியிருக்கிறேன் இன்னும் கூறுகிறேன் மகள் சனிமேடு மத்திபமடைந்திருந்தால்மட்டும் இத்தகைய பலன்களை பூராவும் சொல்லக்கூடாது. இதரமேடுகளையும் ஆராய்ந்து இதர ரேகைகளையும் பூராவும் தெளிவு ஆராய்ச்சி செய்து அவரவருக்கேற்ப கூட்டியும் குறைத்தும் அனுபவத்திற் கேற் வும் சொல்ல வேண்டும் இதற்கெனவேகுறிப்பிட்டுள்ள கைரேகை

அளவுகளையும் அளந்துபார்த்து குறிப்பறிந்துசொல்ல வேண்டும்.



மாணவன்:—ஐயா! புதன் மேடு சரிந்தும், பலவீனப் பட்டும் இருந்தால், என்ன பலன்கள்?

ஆசிரியர்:— தம்பி, புதன் மேடு பக்க மேட்டுவாக்கில் சரிந்தும் பிரகாசம் குறைந் தும் இருந்தால், இச்சாத கர் தன்னுடைய முயற்சி கள் அத்தனையும் பிறருக்காகவே செய்து கடைசியில் தனக்கு புகழுக்கு பங்கமும் அனாவஸ்ய விரயமும், இன்னும் வீண் விரோதமும் ஏற்படுத்திக் கொள்வர். இவர்கள் தமக்காக வேண்டிய அத்தனை வகையான தொழில்களையும்.பிறர்மூலமாகவே செய்து கொள்வர் ஆயினும் வரக்கூடிய ஆதாய வகைகளையும் பிறர் மூலமாகவே சாதித்துக்கொள்ள வேண்டிவரும். தனக்கென தன் சொந்த முயற்சியில் ஏற்படுத்திக் கொள்ள முடியாது.

மாணவன்:—ஐயா, மிக்க நன்றி. இதுவரை சரிந் துள்ள புதன்மேட்டினைப் பற்றிக்கூறினீர்கள் அடுத்து அங்காரக மேட்டின் முப்பகுதிகளைப் பற்றியும் கூறுங் கள்?







ஆசிரியர்:—தம்பி! அங்காரக மேட்டின் முப்பகுதிகளோ, அல்லது தனிப்பட்ட பகுதிகளோ எது சரிந்திருந்தும் அல்லது பலவீன மடைந்தும் பிரகாசமில்லாதிருப்பின் அதன் பலன்களைக் கூறுகிறேன். கேட்டுத் தெரிந்து கொள். இச்சாதகர்கள், முன்கோபக்காரராயும், அடிக்கடி முறன் வழக்குகளிலும் சச்சரவுகளிலும் ஈடு படுவார்கள் கீழ்த்தரமான நேயத்தினாலேயே

அதிக நட்பும் அதிக ஆதாயமும், சகாயமும், அடைவார்கள். சில சமயங்களில் மன அமைதி குன்றுதலடைந்து. இனபந்துக்கள் வகையிலும் குடும்பத்திலும் அதிகபூசல்களை ஏற்படுத்திக் கொள்வார்கள் எனவே இந்தகைய சாதர்களிடம் அதிக பொருமையையும் எச்சரிக்கையையும் கையாளும்படி சொல்லவேண்டும் இவர்களிடம் பலன்களையும் நிதானமாகக் கூற வேண்டும்.

மாணவன்:—ஐய! இனி சந்திர மேட்டினைப்பற்றி விவரமாகக் கூறுங்கள்?



ஆசிரியர்:—தம்பி! சந்திரமேடு பக்கவாட்டில் சரிந்தும் அதிகத் துல்லியமில்லாமலும் இருந்திடில் இத்தகையசாதகர்கள்சதா சிந்தனையற்றவர்களாயும். மனவலிமையின்றியும் அதிக அசதியுடனும் இருந்திடுவர் ஆன்றோரின் நிந்தனைக்கு பாத்திராயும் தேவதா விசுவாசமின்றியும் இனபந்துக்கள நண்பர்கள் வகையில் பகைமை கொண்டும். இருந்திடுவர். அடிக்கடி சீதளசம்பந்தமான உபாதைகள் அணுகியும் இருந்திடுவர் இவர்களிடம் கூட பொருமையுடன் பலன்களைச் சொல்ல வேண்டும்,



மாணவன்:—ஐயா! இது வரை சகல மேடுகளையும் விவரமாகக் கூறி வந்தீர்கள் ஆனால் இனி சுக்கிர மேட்டின் பலன்களைக் கூறுங்கள்.

ஆசிரியர்;—தம்பி! சுக்கிர மேடானது உள்ளங்கை பாகத்திலோ அல்லது கங்கிண மேட்டின் பாகத்திலோ. சரிந்திருந்தாலோ அல்லது பலவீனப்பட்டும், அதிக உயமிரமின்றி இருந்தால் இச்சாதகர்கள், பெண்கள் வகையில் விரும்பப் படாதவராயும் அவர்கள் சிலர்களிடம் சதா வெறுப்பு கொண்டு வீண் சச்சரவுகளை உண்டாக்குவர். மாதர் தனமோ சேராது அனாவஸ்ய சண்டை சச்சரவுகள் அத்துறையில் ஏற்படும் குறிப்பாக உயர்ந்திருந்தால் எவ்வளவுக் கெவ்வளவு நற்பலன்கள் உண்டோ அவ்வளவுக் கவ்வளவு குறைவுற்றிருப்பின் அதிகமாக பலவீனப்பட்ட பலன்களைத் தாராளமாகக் கூறலாம்.

மாணவன்:—ஐயா! சனி மேட்டினை விளக்கமாக கூறினீர்கள் மிக்க நன்றி ஆனால் அம்மேடு மிக உயர்வாக இருந்தால் என்ன என்று கூறுவது?

ஆசிரியர்:—தம்பி! உன் சிந்தனை சக்தியைக் கண்டு களிப்படைகிறேன் இரண்டாவது விரலுக்கு அப்பால் உயர்வாக உள்ள மேடுதான் சனிமேடு என்பதை கவனத்தில் வைத்துக்கொள்.



மாணவன்:—ஐயா! சனி மேட்டில் உயர்வாக தனித்த ரேகையிருந்தால் அதன் மூலம் கிடைப்பது லாபமா நஷ்டமா?

ஆசிரியர்:—தம்பி! அப்படி உயர்வாக உள்ள தனித்த ரேகைகளுக்கு தொழில் வகைகள் கொடுக்கல் வாங்கல் இன்னும் பெயர் பெறத்தக்க பட்டம் பதவி ஆகிய எல்லாக்காரியங்களும் லாபமாகத்தான் முடியும்,

மாணவன்;—ஐயா! சனி மேட்டில் உள்ள நீளமாக உள்ள அந்தரேகை ஆழமாய் இருந்தால். அதனால் சாதகருக்கு ஏற்படும் பலாபலன்கள் யாது?



ஆசிரியர்:—தம்பி! கவனமாக கேள்! இப்படி ரேகை உள்ள நபருக்கு முதன் முதலில் கொடுக்கல் வாங்கலிலோ! அல்லது அரசியல் காரியங்களிலோ சமமும் பின் கடைசியாக சந்தேகப் படத்தக்க வாழ்க்கையாகவும் ஏற்படும்.






மாணவன்:— ஐயா! சனி பேட்டில் இரண்டு ரேகைகள் இருந்தால், இதனால் கிடைக்கும் நன்மைகள் யாது? விளக்கமாக விவரிக்க வேண்டுகிறேன்?

ஆசிரியர்;—தம்பி! நீ கூறியதைப் போல விபரமாக விளக்குகிறேன். ஆனால் உற்று கவனி இந்த இரண்டு சிறு ரேகைகள் உள்ள நபருக்கு கடைசி காலத்தில் வியாபாரத்திலும், நிலம், வீடு, மாடி இன்னும் கொடுக்கல், வாங்கல், அரசியல் சம்மந்தமான ஆகிய எல்லாக்காரியங்களும் வெற்றி அடையும் என்பது தின்னம்.



மாணவன்:— ஐயா! சனி மேட்டில் பல ரேகைகள் சேர்ந்து சேர்ந்து இருந்தால்! இதனால் ஏற்படும் நன்மைகள் என்ன?

ஆசிரியர்;—தம்பி! இப்படி சேர்ந்து சேர்ந்து இருக்கும் ரேகைகள் உள்ளவருகளுக்கு, தொழில் வகைகள். நட்புறவு அரசியல் காரியங்கள், இன்னும் மத சம்மந்தமான காரியங்கள் ஆகிய அத்தகைய காரியங்களும் நஷ்டத்தை கொடுக்கும்.




மாணவன்:— ஐயா! இருதய ரேகைகளில் சில குறுகிட்டு சனி மேட்டுக்கு சென்ருல், இப்படி உள்ள சாதகருக்கு எப்படி பலாபலன்களை விவரிப்பது என்பதை தாங்கள் தயவு செய்து விபரமாக கூறுங்கள்?

ஆசிரியர்:—தம்பி! ஆராய்ச்சிக்குரிய கேள்வியைக் கேட்ட உன் திறமையைக்கண்டு சந்தோஷப்படுகிறேன் உன்னைப்போல், இவ்வளவு விரிவாக யாரும் கேள்வி கேட்டது இல்லை. ஆகையால் நீ நன்ருக, கவனிக்கும்படி வேண்டுகிறேன், விஷபத்தைக் கேள் குறுக்கிட்டு செல்லும் ரேகைகள் உள்ளஜென்மங்களுக்கு பரம்பரையாக [அதாவது] பாட்டன்மூலம் தகப்பனுருக்கு, தகப்பன்மூலம் மகனுக்கு மகன்மூலம் அவனுக்கு பிறக்கும்குழந்தை, யாகிய அத்தனைபேர்களும் வியாதி உள்ளவர்களாக இருப்பார்கள். இவர்களுக்கு மனநிம்மதி என்பது எள்ளளவும் கிடையாது அடிக்கடி குடும்பத்தில் சண்டை சச்சரவுஏற்பட்டுக் கொண்டே இருக்கும் ஆனுல் இவர்களுக்கு உன்திறமையால் சந்தோஷத்தையும் சங்கடத்தையும், கொடுக்கலாம்



மாணவன்: ஐயா! சனி மேட்டில் குறுக்கிட்ட ரேகை யும், சூரியமேட்டில்பதியாது நீண்டு உள்ள ரேகையும், இருந்தால் இவைகளால் உண் டாகும் நன்மை? தீமைகள் என்ன என்பதை எடுத்துக் கூறுங்கள் என்று தங்களின் தாழ்பணிகிறேன்?

ஆசிரியர்: தம்பி! நீ கேள்விகள் கேட்டதற்கு மிகவும் சந்தோஷப்படுகிறேன். ஆனால் நீ. தாழ்பணி கிறேன் என்று சொன்னதற்கு மிகவும் வருந்துகிறேன் ஏனப்பா! மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு ஏது. நானும் உன்னைப்போல் சாதாரண மனிதன்தானே ஆகையால் இனிமேல் இப்படியெல்லாம் நடந்து கொள்ளவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன் சரி? காரியத்துக்கு வருவோம், நன்ருககவனி. இப்படி குறுக்கிட்டகோடுகள்உள்ளவர்களுக்குஎதிர்பாராமல் அழகிய பெண்களை கண்டுகாதல் கொள்ளலாம், திடீ ரென்று தொழில்முறையில் லாபம் கிடைக்கலாம்பட் டம்,பதவி, அந்தஸ்துகிட்டலாம், நிறையபொருளுக்கு அதிபதியாகலாம். ஆனல் பிற்காலத்தில், இவைகள் அத்தனைக்கும் கஷ்டத்தை அனுபவிக்கலாம், உன் திறமையால் மாற்றுபலன்களை கூறவும் முடியும்.




மாணவன்:—ஐயா! நான் கூறியதுக்கு மன்னிக்கவும் ஆனால் குருவுக்கு கீழ்ப்படிய வேண்டும் என்றமூதாதையர் சொன்ன காரணத்தால் தான், அடியேனாகிய நான் அப்படி கூறினேன் வேறொன்றும் நினைக்க வேண்டாம் கேள்வியை விளக்கி தாருங்கள்? சனி மேட்டில் தனித்தனியாக ரேகை உள்ளவர்கள் அடையும் நன்மை தீமை எவை?

ஆசிரியர்,—தம்பி உன்னைப்போல் ஒரு மாணாக்கனை இதுவரைக்கும் நான் சந்தித்ததுகிடையாது. ஆசையால் உன்வினாக்களுக்கு விடையளிக்கிறேன். உற்று நோக்குவாயாக சனிமேட்டில் தனித்தனியாக ரேகைகள் ஏணியைப்போல குரு மேடுவரை சென்று உள்ளநபருக்கு வாழ்க்கையில் (அதாவது அரசியல் காரியங்களில் அடிக்கடி அந்தஸ்தும் காதல் விஷயங்களில் விறு விறுப்பும், பொருளாதாரத்தில் அதிகபெருளும் கொடுக்கல் வாங்கலில் அமோகலாபமும் வீட்டில் எப்பொழும், சந்தோஷமும், குறிப்பாகமனைவி மக்களிடம் இன்பமானவார்த்தைகளும் பேசுவார் இன்னும் தேகத்துக்கு யாதொரு திங்கும் வராது. •நண்பர்களின் ஆமோக ஆதரவுங் கிட்டும் இன்னும் நீண்டஆயுள் உள்ளவராயும்,இருப்பர், இன்னும் கூறப்போனால் சகலசம்பத்துடைய தீர்க்க ஆத்மாவாகத் இந்த உலகில் உயிர்வாழக் கூடும்.



மாணவன்; ஐயா! சனி மேட்டில் ஒரு புள்ளி இருந்தால் கெடுதியா? புத்தி இருதய ரேகைகளைக் கொண்டு ஆராய வேண்டுமா அல்லது வேறு முறையை கையாள வேண்டுமா? என்பதை தாங்கள் விபரமாக விளக்கும்படி வேண்டுகிறேன்?

ஆசிரியர்:— தம்பி! இக்கேள்வி. சிக்கலான கேள்விதான், எனினும் பயப்படதேவையில்லை, கொஞ்சம் சிக்கல்தான் ஆயினும் முயற்சித்தால் முடியாமல் எங்கபோய்விடும், கவனமாக காதுகளை கொடுத்து கேள். கடைசியாக கூறுகிறேன். உனக்குசந்தேகங்கள் ஏற்பட்டால் உடனே குறுக்கு கேள்வியைக் கேட்கலாம். அதைப்பற்றிகவலைப்படாதே சனிமேட்டில் ஒருபுள்ளி உள்ளபுண்ணியவானுக்கும் தொழில்முறைகளில் முடக்கம். கொடுக்கல். வாங்கலில். மனச்சச்சரவுகள், காதலில்படும் தோல்வி. அரசியல் காரியங்களுச்கு அறுகதையற்றவர் எப்பொழுதும் குடும்பத்தில் குழப்பம் வீணான செலவுகள் செய்தல் தனக்கு சம்மதமில்லாதக் காரியத்தில் தலையிடுவது, அதன்மூலம் தோல்வியைக் கண்டு. தலையைதொங்கப் போடுவது அடிக்கடி அடுத்தவர்களிடம் சண்டை சச்சரவுகள் செய்தல், எப்பொழுதும் குழப்பமடைவதுஇச்சாதகருக்குபுத்தி இருதய ரேகைகளைக்கண்டு ஒருவாறு கஷ்டங்களைப் போக்கலாம் ஆனாலும் இச்சாதகர் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.




மாணவன்:—ஐயா! சனி மேட்டில் குறுக்கிட்ட இரு ரேகைகள் குறிகளுடன் இருந்தால் இதனால் ஏற்படும் நன்மைகளையும் தீமைகளும் எனக்கு நன்றாக விளக்கமாக கூறுங்கள்?

ஆசிரியர்—: தம்பி! நீ கேட்பதைப் போலதான் விளக்கமாக கூறுகிறேன். அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். கேள்விக்கு செவிசாய்க்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன் குறுக்குட்ட இருரேகைகள், குறிகளுடன் சனிமேட்டில் இருந்தால் இருவருக்குதான் செய்யும் வேலைகளின் கவனக்குறையும் காதல் சம்பந்தமான செய்கைகளில் ஆபத்தும், எவரைக் கண்டாலும் கோபமுள்ளகொடுமைக்காரனாகவும், மனைவி, மக்களிடம் மனக்கசப்பும் சிநேக உறவு அற்றவராகவும் கடவுளின் கிருபையால் கிடைத்த சொத்துக்களை இழந்த ஏமாந்த சோணகிரியாகவும்,குறிப்பாக கெட்டசெய்கையால் உடல் நலம் குறைந்தவராகவும்,இனபந்துக்களை தூற்றுபவராகவும் இன்னும் சொல்லப்போனால் இச்சாதகருக்கு எப்பொழுதும், எச்சமயமும் ஆபத்துவரக்கூடும்என்று சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா! ஒரு நட்சத்திரக்குறி சனி மேட்டில் இருந்தால் ஏற்படும் காரியம் யாது? மேலும் சனி மேட்டில் நட்சத்திரம் குறி கண்டும் காணுமலும் இருந்தால் ஏற்படும் நன்மை தீமைகள் மிக விளக்கமாக விளக்கி தாருங்கள் என கேட்டுக் கொள்ளுகிறேன்?

ஆசிரியர்; தம்பி! சனி மேட்டின்மேல் நட்சத்திர குறிகண்டவருக்கு எப்பொழுதும் குணம் ஆகமுடியாத நோய் அதாவது பாரிச வாயுவை உள்ளவராகவும் அவ்வியாதியால் அடிககடி குடும்பத்தில் சண்டை செய்யும் நபராகவும் தொழில் களில் மனக்கசப்படைந்தவராகவும் இவ்வியாதியால் அரசியம் காரியங்களில் தோல்வி கண்டவராகவும் அடுத்த ஊருக்கு பிரயாணம் செய்ய பிரியமில்லாதவராயும் நண்பர்களைக் கண்டால் கோபிக்கும் குணம் கொண்டவராகவும், பெண்களை கண்டால் கசக்கும் தன்மையுடைது என்று எண்ணக் கூடியவராகவும், அடிக்கடி சம்மந்தமில்லாத காரியங்களில் தலையிட்டு அதன் மூலம் அவமானம் அடையும் தம்மையுடைய வராகவும் எப்பொழுதும் தோல்வி மனப்பான்மை கொண்டவராகவும் இருந்திடுவர் சனிமேட்டில் நட்சத்திரக்குறி பட்டும் படாமலும் இருந்தால் இச்சாதகருக்கு தன்வாழ் நாள் முழுவதும் ஆரோக்கியம் கெட்டவராகவும் தேகநலம் கெட்டு அதன் மூலம் பல இன்னல்களை அனுபவிக்கும் தன்மையுடையவராகவும், தொழில் முறையில் மனம் உடைந்தவராகவும்

மக்கள் மனைவியாகியவர்களை சரியாக கவனிக்காமல் அவர்கள்மூலம் பலதீமைகளை அனுபவிப்பராகவும், நண்பர்களை கண்டால் கோபமுள்ளவராகவும், அரசியல காரியங்களைக் கண்டால் நமக்கு ஏன்? இந்த தொந்தரவு என்று எண்ணக் கூடியவராகவும் வீடு தோட்டம் இன்னும்தன் சொத்துகள் போனாலும்போகட்டும் என்று எண்ணுபவராயும் இன்னும் சொல்ல முடியாத வேதனையை விலைக்கி வாங்குபவராயும் இருப்பர். கடைசியாக இதுஎன்னவாழ்க்கை என்றும் எண்ணும் குணம் கெட்டவராகவும் இருந்திடுவர்



மாணவ:— ஐயா! ரேகைகள் இரண்டு கூடிய சனி வளையத்தில் ஒரு நட்சத்திரக்குறியிருந்தால்? இதன் மூலம் ஏற்படும் நல்லது? கெட்டது யாது? என்பதை எனக்கு புரியும்படி கூறுங்கள்?

ஆசிரியர்:— தம்பி! இரண்டு ரேகைகள் சேர்ந்து இருக்கும் சனி வளையத்தில் ஒரு நட்சத்திரக்குறி இருந்தால் அதன் மூலம் உண்டாகும் கொடிய குணங்களை கூறுகிறேன். ஆனால் நீ அச்சமும் ஆயாசமும் கொள்ளலாம்? நீ, மனதை திடபடுத்திக் கொண்டு நான் சொல்வதை செவி சாய்க்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இச்சாதகருக்கு மர்மஸ்தானத்தில் கொடிய வியாதியும் இவ் வியாதியால் பலநோய்கள் உண்டாகி உடல் நலம் கெட்டவராகவும், மனைவி, மக்களை

மறந்தவராகவும் தொழில் துறைகள் மூலம்நஷ்டமும் நண்பர்களிடம் நல்லமுறையில் நடக்காதவராகவும் அயல் நாட்டுக்குச் சென்ருல் ஆபத்தும், தோட்டம் துறவு யாவற்றையும் துறந்தவராகவும். அரசியல்காரியங்களில் அக்கரைகொள்ளாதவராகயும், திடீரென்று மனம் உடைந்தவராகவும், தெய்வபக்தி யற்றவராகவும்,இறுதியில் உயிருக்கு ஆபத்துவரத்தக்க சூழ்நிலை உள்ளவராகவும் இச்சாதகருக்கு ஆபத்து எப்பொழுதும் சுற்றிக்கொண்டே இருக்கும் என்று, மேற்கண்ட குறிகள் கூறுகின்றது.



மாணவன்:— ஐயா! சனி மேட்டில் நீண்ட விதிரேகையின் மத்தியில் ஒரு நட்சத்திரக்குறி யிருந்தால், இச்சாதகரின் பலா பலன்கள் யாது? என்பதை விபரமாக விளக்குங்குகள் குருவே?

ஆசிரியர்:— தப்பி! உன்னைப் போன்ற ஒரு தன்னம்பிக்கை உள்ளவனை இது வரைக்கும் நான் பார்த்ததில்லை, உண்மையிலேயே! உன்போல் யாவரும்முன்னுக்குவந்து, இக்கலையைக் கற்றுக் கொள்ளுவார்களேயானுல் இன்னும் இக்கலை சீறும், சிறப்பும் உள்ளதாக விளங்கும் ஆகையால் மறுபடியும்வினுக்களுக்கு விளக்கம் தருகிறேன். தாராளமாக கேட்டுத் தெரிந்து கொள். சனி மேட்டில் நீண்டவிதி ரேகையின் மத்தியில் ஒரு நட்சத்திரக்குறி உள்ளவருக்கு கொலை செய்யப் பயப்படமாட்டார், ஆனுல்

இதர ரேகைகள் பொதுவாக கெடுதலாக இருந்தால் தான் அப்படி நடக்கும் இருந்தாலும் கொலை செய்யும் தன்மையானது மனதை விட்டு அகலாது தொழில் வகைகள் சுமார் தான். அடுத்தவர்களிடம் எப்பொழுதும் கோபமாக பேசுவர், மனைவி, மக்களை ஒருவாறு அடக்கி ஆளும் தன்மை கொண்டவர். பிரயாணத்தை எப்பொழுதும் விரும்புவர். அரசியல்காரியங்களில் ஈடு பட்டால் அதனால் அடுத்தவர்களின் உயிருக்கு ஆபத்து ஏற்படலாம். தேகநலம் குன்றிஉடல் கெட்டு இருக்கும் ஆகையால் இவரை எப்பொழுதும் நம்ப முடியாது கடைசியாக ஆபத்தைச்சுற்றி வாழ்ந்து வரக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்:— ஐயா! சனி மேட்டில் வட்ட வளையமாக ரேகை காணப்படில் இதனால் இச்சாதகருக்கு ஏற்படக்கூடிய நல்லது, கெட்டது யாது? என்பதை கூற முடியுமா குருவே?

ஆசிரியர்:— தம்பி! ஏது, கூற முடியுமா? என்ற ஐயமா? நன்றாக கேள் ஐயத்தை அகற்றுகிறேன்.

கவனமாககேள் சனிமேட்டில் வட்டவளையமாகரேகை உள்ளவருக்கு குடும்பத்தில் சந்தோஷமும். காதல் விஷயங்கள் ஜெயமும் தொழில் வகைகளில் வெற்றியும் அரசியல் விவகாரங்களில் ஆனந்தமும். பட்டம், பதவி தேடிவரக் கூடும். நண்பர்களிடம் எப்பொழுதும் அன்பாகவே இருந்திடுவர், மனைவி, மக்களிடம் மகிழ்ச்சியாகவே இருப்பர் அயல்

நாட்டு பிரயாணம் என்றால் மிகவும் பிரியப்படுவர். பெண்களால் லாபமும் கிடைக்கக் கூடும். இன்னும் சொல்லப்போனால் இப்படி அடையாளம் கொண்ட சாதகர் தன்வாழ்நாள்முழுவதும் இன்பமாகவேஇருந்திடுவர், ஆண்டவன் கிருபையால், அவர்மேல் பக்தியும் நீண்ட ஆயுள் உள்ள அதிர்ஷ்டசாலியாகவும். இருந்திடுவர் சகலசம்பத்தும் உடையபுண்ணியவான் என்று கூறப்பட்டுள்ளது.



மாணவன்:— ஐயா! சனி மேட்டில் சதுரக்குறி உள்ள சாதகரின் நன்மையும், தீமைகளையும், கூறும்படி தங்களைவேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆசிரியர்:— தம்பி! இடைவிடாது கேட்கும் இளைஞன் என்ற காரணத்தால் களிப்படைகிறேன் வினவுக்கும் விளக்கம் கொடுக்கிறேன், சதுரக்குறி சனி மேட்டில் உள்ள சாதகருக்கு. தொழில்முறையில் நஷ்டமும், பெண்களால் ஆபத்தும் நண்பர்களால் கஷ்டமும, அடிக்கடி குடும்பசச்சரவும் அரசியல் காரியங்களில் கவனமாக இருக்கவேண்டும. அயல்நாட்டின் பிரயாணத்தை கூடியமட்டும் ஒத்திவைக்க வேண்டும். ஏன்? என்றால் அதன் மூலம் ஆபத்துவரக்கூடும் இச்சாதகருக்கு தெய்வபக்தி ஒருவாருஉண்டு. ஆனாலும் சிற்சில சமயம் உடல் நலம் குன்றிஇருக்கலாம் ஆனாலும் கடைசியாக இச்சாதகக்கு ஆபத்துவரக் கூடும் இவன் திறமையால் அந்த ஆபத்தை அகற்றக்கூடும். என்ன இருந்தாலும் மிக, மிக

மிக. மிக ஜாக்கிரதையாக நடந்துகொள்ளவேண்டும் என்று கூறப்படுகிறது.




மாணவன்:— சனி மேட்டின் சதுரத்தில் ஒரு நட்சத்திரககுறி இருந்தால் இந்த நபருக்கு உண்டாகக் கூடியது எவை? என்பதை எடுத்துக் கூறுங்கள்.

ஆசிரியர்—: தம்பி எடுத்துச் சொல்லுகிறேன். சொன்னவைகளை உன் இளம் மனதில் பதியவைத்துக் கொள்? சனி மேட்டின் சதுரத்தில் நட்சத்திரக்குறி காணப்படும் நபருக்கு, தொழில்முறைகளில் லாபமும் நஷ்டமும், மாதர் தம்மால்ஒருவாறு வெற்றியும், தோல்வியும், குடும்பத்தில் சிலசமயம்சச்சரவும், சமாதானமும் ஏற்படக்கூடும் அரசியல் விவகாரங்களில் ஒருவாறுநாட்டம்செலுத்துவர். நண்பர்களிடம் சுமாராக பேச்சுவார்த்தை வைத்துக் கொள்ளுவர். இனபந்துக்களிடம் அன்பாக இருக்கக்கூடும் தேக நோய்கள் வாக்கூடும். பின் அகன்றுவிடக் கூடும் பட்டம் பதவிகளைப்பற்றி கவலைகொள்ளார், வெளிஊர்பிரயாணம் ஒருசிலசமயம் வரக்கூடும், இச்சாதகர்சர்வசாதாரண நபராகத் தான் இருப்பர் அவ்வளவு உயர்ந்து காணமாட்டார், கடைசியாக இப்படி உள்ள சாதகருக்கு ஆபத்துவந்து, பின்விலகிவிடும் என்று சொல்லாமல் சொல்லாம்.

7

மாணவன்:— ஐயா! அச்சதுரம் நான்கு குறி எந்த புள்ளிகள் இருந்தால் அச்சாதகரின் பலா பலன்களைக்கூறுங்கள் என்று உங்களை மிக அன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன்



ஆசிரியர்:— தம்பி! கேள் கேட்டுக்கொண்டு அம்முறைகளை நீ கைக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். விஷயத்தைவிளக்குகிறேன் உற்று நோக்குமாறு உன்னைக் கேட்டுக் கொள்ளுகிறேன், இச்சாதகருக்கு தொழில் முறையில் ஏற்பட இருந்த ஆபத்து விலகி விடும். பெண்களால் ஏற்பட இருந்த பெரிய ஆபத்து விலகி இருக்கிறது. மனைவி மக்களால் மூன் மனவேதனையும், பின் மன அமைதியும் ஏற்பட்டுள்ளது. கல்வி அறிவு அவ்வளவாக கிடையாது பட்டம் பதவி கிடைப்பது கஷ்டம் அடிக்கடி நோய்கள் ஏற்படக் கூடும். பின் நோய்கள் அகன்று விடும் வீண் செலவு ஏற்படக் கூடும், அதனுல் மனவேதனை உண்டாகும் தெய்வீக பக்தி அதிக இல்லாவிடினும்; சுமாராக உண்டு, நெருப்பு போன்ற பெரிய ஆபத்துக்கள் இருந்தது இவரின் திறமையால் அவைகள் அகன்று விடக் கூடும், எதுக்கும் இச்சாதகர் முன் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டுமென்று கூறப்பட்டுள்ளது



மாணவன்—: ஐயா! மூன்றும் விரலுக்கும் மோதிர விரலுக்கும் இடையில் உள்ள மேடு என்பது யாது?

ஆசிரியர்: தம்பி! இந்த ரேகை மற்றொரு ரேகை யாகும். இதைக் கவனிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன், மோதிர விரலுக்கும், மூன்றும் விரலுக்கும் இடையில் உள்ள மேடானது சூரியமேடாகும், இம்மேடு உயர்வாகவும் அதிகத்துடித்துடன் இருக்கும், இப்படிஉள்ளவரைத்தான் சூரிய ஆதிக்கம் பெற்றவர் என்று சொல்லப்படுப,

மாணவன்: இச் சூரிய மேட்டில் ஒரே நீளமாக இந்தரேகை இருந்தால் இப்படி உள்ளவர்களுக்கு கிடைப்பது நன்மையா அல்லது தீமையா என்பதை கொஞ்சம் புரியும்படி தாங்கள் எடுத்து கூறவேண்டும்



ஆசிரியர்: தம்பி! நீ பேட்பதை போலவே புரியும்படியே கூறுகிறேன் ஆனால் நீ மிக கவனமாக கேட்டுத் தெரிந்துகொள் என்பதையும்கேட்டுக்கொள்ளுகிறேன். சூரிய மேட்டில் நீண்ட ரேகை உள்ள சாதகருக்கு தொழில் வகைகளில் நல்ல இலாபமும் யாதர் தம்மால் செல்வ சீமானாகவும் இருக்கக்கூடும்

காதல் விஷயங்களில் வெற்றிகிட்டக் கூடும், உடல் எந்த விதமான நோய்கள் இல்லாமல் நல்ல தேகபல முடையவராகவும் இருப்பர், அரசியல் காரியங்களில் அந்தஸ்துவந்து கிட்டக் கூடும் பட்டபதவி வரக் கூடும் அயல் நாட்டு பிரயாணத்தால் லாபமும் பெயரும் வரக்கூடும். இன்னும் இச்சாதகருக்கு பெயரும் புகழும் வளிய வந்து சேரக்கூடும் ஆகையால் இப்படிப்பட்ட சாதகர் அதிக தெய்வீக பக்தி உள்ளவராகவும் இருப்பர் ஜனபந்துகளால் எப்பொழுதும் அன்பும் ஆதரவும் கிடைக்கும், இச்சாதகர் இப்புவியில் நீண்ட காலமாக வாழக்கூடும்,




மாணவன்:— ஐயா! இரண்டு ரேகைகள் ஒரே அளவு காணப்பட்டால் இச் சாதகருக்கு ஏற்படக் கூடிய நன்மை யாது? இன்னும் ஒரு ரேகை அழுத்தமாகவும் மெல்லியதாகவும் இருந்தால் இதனல் ஏற்படகூடிய நன்மைகளையும், தீமைகளையும்விரிவாகவிளக்கி தாருங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஆசிரியர்,— தம்பி! சொல்லுவதை கேட்டுக் வைத்துக் கொள். ஒரே அளவு இரண்டு ரேகைகள் உள்ள சாதகருக்கு அறிவும் ஆற்றலும் அதிக முள்ளவர் வருமானம் கொஞ்சம் கொஞ்சமாக கிடைக்கும், நண்பர்களிடம் நல்லபடி நடந்து கொள்ளுவர். குடும்பத்தில் சந்தோஷம் ஒருவாறு நல்லபடி இருக்கக் கூடும். அயல் நாட்டு பிரயாணத்தால் நல்லபெயரும் கிடைக்கும் உடலுக்கு நோய்கள் வராது வந்தாலும்

சீக்கிரம் குணம் ஆகிவிடக்கூடும். பட்டம் பதவிகள் வந்துகிட்டக்கூடும். இனபந்துக்களால் சந்தோஷமும் சகல சம்பத்தும் வந்து சேரக்கூடும் இவர் ஆயுள் உள்ள ஆத்மாவாக இவ்வுலகில் நீண்டகாலம் நீடித்து வாழக்கூடும் சொன்னவைகளை மனதில்பதியவைத்துக்கொண்டு அடுத்த கேள்வியைக் கவனிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். ஒரு ரேகை அழுக்தமாகவும் மெல்லியதாகவும் இருந்தால் இப்படி உள்ள நபருக்கு தொழில் முறைகளில் லாபமும் காதல்விஷயங்களில் வெற்றியும் சிநேகிதர்களால் லாபமும் சொற்பகல்வி உடையவராகவும் இருந்திடுவர் அரசியல் சம்மந்தமான காரியங்களில் கவனம்செலுத்துவர் பட்டம் பதவிகளுக்கு போட்டிபோட்டுக் கொண்டு செல்வர், அயல் நாட்டு பிரயாணத்தால் சொற்பலாபம் கிடைக்கலாம் குடும்பத்தில் ஒருவாறு சந்தோஷம் ஏற்படக்கூடும். தேகத்திற்கு நல்லகுணம் கிடைக்குமென்றும் கடவுள்பக்தி சுபார்உண்டு என்றும் சுமார் ஆயுள் உள்ளவர் என்றும் கூறப்பட்டுள்ளது.



மாணவன்—: ஐயா! நெருக்கடியாக அநேக துண்டு ரேகைகள் இருந்தால் அந்த நபருக்கு ஏற்படகூடிய நல்லதுகெட்டது யாது என்பதை கொஞ்சம் விளக்க தருமாறு கேட்டுக்கொள்ளுகிறேன், மீண்டும் ஒய்வு இல்லாமல் உழைக்கும் தங்களை மனமார பாராட்டுகிறேன், கேள்வியை விளக்கி தாருங்கள் என்று மீண்டும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆசிரியர்—: தம்பி! உழைக்கும்என்னை பாராட்டுவதாக கூறுகிறாய் எதற்கப்பா எனக்கு பாராட்டு அவை எனக்கு வேண்டாம் என்றுகேட்டுக் கொள்ளுகிறேன். பலதுண்டு ரேகைகள் நெருக்கடியாக சூரிய மேட்டில் உள்ளவர்களுக்கு படங்கள் .வரைவதற்கு தகுந்தசிந்தனை உண்டுஎன்றும்தொழில் முறைகளைப் பற்றிகவலைப் படாமலும் இல்வாழ்க்கையை சரிவர நடத்துவதற்கு திறமையில்லாதவராகவும் நண்பரை கண்டால் வெறுப்பாகவும் கோபமாகவும் பேசக்கூடியவராகவும் இருந்திடுவர் அறிவும் ஆற்றலும் ஒருவாறு உண்டு சிற்சிலசமயம் நோய்கள் வரக்கூடும் பின் அவைகள் ஆண்டவன் சென்றுவிடக்கூடும், பட்டம் பதவியைப்பற்றி அக்கரை கொள்ளமாட்டார்பிரயாணத்தை விரும்பமாட்டார் ஆண்டவன் பக்தி சுமார் உண்டு என்றும் கடைசியாக இச்சாதகருக்கு எதிலும் தோல்விதான் ஏற்படக் கூடும் என்று சொல்லப்படுகிறது,



மாணவன். ஐயா! சூரிய மேட்டில் புள்ளி காணப்பட்டால் இந்த நபருக்கு கிடைப்பது எது என்பதை எனக்கு எடுத்துக் கூறுங்கள் ஆசிரியர் அவர்களே

ஆசிரியர்: தம்பி! உன் போன்றவர்களை இக்கலையில் முன்னுக்கு கொண்டு வரத் தான் என்போன்றவர்கள் இரவு பகல்என்று பாராமல் உழைக்கிறோம் ஆகையால் நீ இக்கலையில் எப்படியும் முன்

ணுக்கு வரமுடியும் என்று எண்ணுகிறேன் என்எண்ணப்படியால் எல்லாம்வல்ல எம்பெருமானுல் நடந்தே தீரும் புள்ளி உள்ள சூரியமேட்டுக்காரரின்பலாபலன் களை உன்னிப்பாக கவனி இவருக்கு இல்வாழ்க்கையில் முதலில் இன்பமும் பின்னுல் துன்பமும் ஏற்படக் கூடும், அதேபோல் வியாபாரமுறையில் முதலில்இலாபமும் பின்னுல் நஷ்டமும் ஏற்படும் என்றும்உயர்ந்த பதவியால் உத்தமர் என்றும் பின் ஊதாரி என்றும் பெயர் எடுக்ககூடும். வெளியூர் பிராயணத்தால் உயிருக்குஆபத்து ஏற்படுமென்றும்பின் நீங்கிவிடக்கூடும் என்றுசொல்லப்படுகிறது. நண்பர்களால் நயவஞ்சகம் உண்டாகக்கூடுமென்றும் தெய்வீகபக்த போதயளவு கிடையாது குடல்வியாதிவரக் கூடும்என்றும் எதிர் பாராத எதிர்ப்புகள் வந்தசேரு மென்றும், இன்பந் துக்களால் துரோகிஎன்றபெயரும்ஏற்படக்கூடுமென்றும் சொல்லப்படுகிறது, இவ்வுலகில் அதிககாலம் இருக்கமுடியாதுஎன்றும்சொல்லப்படுகிறது, மனைவி மக்களால் ஒருவாறுஇன்பம் அடைவர் இச்சாதகர் என்பது திண்ணம்,




மாணவன்: ஐயா! விடையை கேட்க கேட்க என் மனம் சொல்ல முடியாதஇன்பம் அடைகிறது அடுத்தவையை கூறுங்கள் ஒரு கிரகமும் ஒரு ரேகையும் சூரிய மேட்டில் இருந்தால் இச்சாதகரின் நன்மைகள் யாது தீமைகள் யாது குருநாதா?

ஆசிரியர்: தம்பி! நான் கூறுவதால் மட்டும் நீ இன்பம் அடையவில்லை, நம்முடைய அழகிய தால்

மொழியாகிய தமிழால் இன்பம் அடைகிருய், ஏன் என்ருல் இருக்கும்மொழிகளில் நம்முடைய தாய்மொழியை வெல்வதற்கு வேறுமொழி கிடையாது என்பதை நீ அறிய வேண்டும். அடுத்து விஞவுக்கு வருவோம், நான் சொல்லுவதுசரிதானே சூரிய மேட்டில் ரேகைமட்டும் இருந்தால் இப்படி உள்ளவர். தொழில் வகைகளில் வெற்றி அடையக்கூடும், காதல்விஷயத்தில் வெற்றி அடையக்கூடும். அடுத்தவர்களை தன் நாவின் அழகிய வார்த்தைகளால்எதிர்த்து வாதாடக் கூடும் இவ்வுலகில் உள்ள எம்மதத்திலாவது ஆழ்ந்த பற்றுடையவராகவும் அரசியல் என்ருல் எதற்கு அப்பா நமக்கு அந்ததொல்லை என்றுஒதுங்கி விடுவர். இன்னும் அரசியலில் இருப்பவர்களை மதத்தில் சேர்க்கவிடா முயற்சி செய்வர். மதத்தலைவர்களை கண்டால் கடவுள் போல்மதிப்பர்.இனப்பந்துக்களையும் கடவுளின்பெயரில் அன்புவைக்கும்படி கேட்டுக் கொள்ளுவர் இவ்வுலகில் நீண்ட காலம் வாழக்கூடும். உடல் நோய்கள் அதிகமாக வராது. கல்வி அதிகம் உண்டு. என்றும் கூறப்பட்டுள்ளது. இரண்டாவதாக கிராஸ் மட்டும் சூரியமேட்டில் இருந்தால் இவர்எதையும் எவரையும் எதிர்த்துவாதாடக்கூடும் குடும்பத்தில் விஞக்களை கிளப்பி அவர்களை திக்குமுக்காடச் செய்வர், இனபந்துக்களை எப்பொழுதும்எதிர்த்துக் கொண்டே இருப்பர் பட்டம்பதவிகளை நாடுவர் அரசியல் அகராதிகளை கண்டால் விட மாட்டார், எதிர்த்துவாதாடுவார். தான்சேர்ந்துஇருக்கும் மதமே உலகில் பெரிது என்று சொல்லுவர் மதம் வளரதன் வாழ்வைப் பற்றி கவலைப்பட மாட்டார். மதத்தால் வரும் எதிர்ப்புகளைக் கண்டு ஓடிவிட மாட்டார் முன் நின்று எதிர்த்துவெற்றி அடைவார் நோய்களைகண்டு பயப்படமாட்டார். இறுதிபாக இவர்எக்காரியத்திலும் பிடிவாதமாக இருப்பர் என்று கூறப்பட்டுள்ளது.

மனதைகளிப்பு கடலில் மிதக்க விடுவார்கல்வி அறிவு ஏராளமாக உண்டு பெண்களை கண்டால் உன் உடன் பிறந்த சகோதரி போல் நினைப்பார் தான் செய்யும் தொழில்களை பிறர் கூறுவண்ணம் நடந்து கொள்ளு வர் அயல்நாட்டு பிரயாணம் என்றால் சொல்ல முடி யாத பிரியப்படுவார் இன்னும் பெயரும்புகழும் நாலா வட்டத்தில் பரவிவிடும் தெய்வ என்றால் ஆகா என்ன அழத என்று வர்ணிப்பார் இவருடைய தேகம் தேக்கு மரம் போல எப்பொழுதும் குறையாமல் குன்று மல் இருக்கும் கடவுளின் கிருபையால் நீண்ட காலம் இந்த உலகத்தில் உயிர் வாழக்கூடும் என்று கூறப் பட்டுள்ளது.



மாணவன்: ஐயா! தாங்கள் சொல்லும், ஒவ்வொரு வார்த்தைகளும் இதுவரைக்கும் என் வாழ்க்கையில் கேட்டு அறியாத வார்த்தைகளாக இருக்கிறது தான் தங்களுக்கு இவ்வார்த்தை என்ற பொன்னுக்கு என்ன பரிகாரம் செய்வேனே எனக்கு தெரியவில்லை? ஆகவே! குருநாவ! சூரியமேட்டில் ஒரு நட்சத்திர சூறியும் நீண்ட சில ரேகைகளும் இருந்தால் இச்சாதகருக்கு ஏற்படக் கூடிய நன்மைகள் யாது? தீமைகள் யாது?

ஆசிரியர்: தம்பி! நான் கூறியது பொன் அல்ல அது எனக்கு வேண்டாம் உன்பேர்ன்றவர்களின் புன் னகை வேண்டும். சூரிய மேட்டில் ஒரு நட்சத்திரக் குறியின் நீண்ட, ரேகையும். இன்னும் சிலரேகைகள்

காலம் அதுசரி கேள்வியை கவனிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன் சூரிய மேட்டில் ரேகையில்லாமல் நட்சத்திரம் மட்டும் இருந்தால் இவர்தன் இளம் வயதில் சொல்லமுடியாத நோகளுக்கு உட்பட்டு இருப்பர் சரியாக உண்ண உணவு கிடைக்காமல் சஷ்டப்பட்டு இருப்பார்தொழில்முறையில் நஷ்டம்ஏற்பட்டு இருக்கும் பெண்களால்பெரிய ஆபத்துக்குஉட்பட்டு இருந்திருப்பார் மதத்தையும் அதன் தலைவர்களையும் தூற்றுவார் கல்வி சுமாராக உண்டு. சேராதவர்களோடு சேர்ந்து செல்லக்கூடாத வழிகளுக்கெல்லாம்சென்றுஇருந்திருப்பர் இனத்தவர்களைகண்டால் கடும்கோபம் கொள்ளுவர் கடவுளை கண்டபடி ஏசும் கயவனாக காட்சியளிப்பார் தேகநலம்குன்றி குறைகள் அதிகம் உள்ளவனாக காட்சியளிப்பார் இவர் தொட்டதுகள் துலங்காது வீண் அலைச்சலும் செலவும் தான் அதிகம் ஆகக்கூடும் ஆனாலும், இச்சாதகருக்கு இறுதிகாலத்தில் சுமாரான செல்வம்வந்து சேரும் என்று கூறப்பட்டுள்ளது,



மாணவன்: ஐயா! சதுர ரேகைகுறி சூரிய மேட்டில் இருந்தால் இச்சாதகருக்கு ஏற்படக் கூடிய நல்லது? கெட்டது யாவை? கூறுங்கள் குரு நாதா?

ஆசிரியர்: தம்பி! சொல்லும் வார்த்தைகளை. உன் இளம் மனதில் பசுமையான மரத்தில் ஆணி அறைந்தால் எப்படி பதியுமோ! அதைபோல் பதிய வைத்துக் கொள்சூரியமேட்டில் சதுரரேகை குறிஇருந்தால் அப்படிஉள்ளவர்கள் தன்வேலைகளை மிக கவனமாக

மூலம் பல, பதவிகள் இனபந்துக்களுக்கு இல்லமும். மனைவியும்மக்களும் மகிழ்ச்சியுடன் இருப்பார் என்றும் சாந்தகுணமும் அக்குணத்தைக்கண்டு அடுத்தவர்கள் ஆச்சரியம் படத்தக்க நிலைமையிலும் இருக்க கூடும் நோய், நொடிகள் வராமல் உடலை மிக கவனமாக கவனித்துக் கொள்வார் என்றும் ஆண்டவன் அருளால் இவ்வுலகில் நீண்ட காலம்வாழ்வார்என்று சொல்லப்படுகிறது,




மாணவன்; ஐயா! கேட்கும் கேள்விகளுக்கு தங்கு தடங்கலன்றி பதில் கூறும் குருநாதா? அடுத்த கேள்வி சூரிய மேட்டில் வளைந்த சரியாய் அமையாத ரேகை குறியுடன், சேர்ந்த ரேகை குறிகள் காணப்பட்டால் இதனுல் அடையும்? அந்தஸ்து யாது? என்பதை விளக்கமாகச் சொல்லுவீர்கள் எனகேட்டுக் கொள்கிறேன்?

ஆசிரியர்: தம்பி! வளைந்த சரியாய் அமையாத ரேகைகள் குறிகளுடன் பிணைப்பட்டு சூரியமேட்டில் இருக்கும் நபருக்கு இந்த உலகத்தில் யாவற்றையும் பார்த்து தெரிந்து கொள் என்று ஆண்டவனுல் ஆக்கப்பட்ட கண்களின் பார்வை மங்கும அப்படி மங்கப்படுவதால் மனைவி, மக்களிடம் சுகம் காண முடியாதவனுகவும் மேலும் இது தான் சமயம் என்று எண்ணக்கூடிய திருடர்கள் இவர்வீட்டில்புகுந்து பொருள்களை அபகரித்துக் கொள்ளுவர் எங்கேயும்செல்ல முடியாதவனுகவும் இருந்திடுவர் இனபந்துகளின் விரோதமும் விரைவில்வந்து சேரும்பட்டமோபதவியோ இவரைக் கண்டு அஞ்சி நடுங்கும், இன்னும் பார்த்தவர்கள்

இவனுக் என்ன செய்ய முடியும்? பார்வை இழந்த பாதகன் என்ற பழிச் சொல்லையும் கேட்கக்கூடும் இன்னும் ஆம் மனிதனுகபிறந்து எல்லா வகைகளும் பார்க்க முடியவில்லையே என்று அவராக மனவேதனை அடையக்கூடும் இந்த வேளையில் விபரீதத்தால் பின்னுல் கண்நோய் கண்டு இவ்வுலகில் வாழ முடியாதவனுக ஆகிவிடக் கூடும் என்றும் சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா! முதலாவதாக கேட்ட கேள்வி! மிகவும் வருந்தக்கூடிய கேள்வி அல்லவா? என் மனம் மிகவும் வேதனை அடைகிறது இருந்தாலும் மனதை திடபடுத்திக் கொண்டு, அடுத்த கேள்விக்கு வருகிறேன் முக்கோணக்குறிசூரிய மேட்டில் இருக்கும் நபருக்கு எந்த விதத்தில் பலா பலன்களை கூறவேண்டுமென்று கூறும்படி தங்களை கேட்டுக் கொள்ளுகிறேன்?

ஆசிரியர்: தம்பி! நீ மேற்கண்ட கேள்விக்காக வருந்துவதை நான் அறிவேன் ஏனப்பா! ஆண்டவன் எல்லாவற்றையும் ஒன்றுக படைத்து இருந்தால் இந்த உலகத்தில்ஒவ்வொருவனும் சொல்ல முடியாத செய்யமுடியாத அட்டகாசங்களை அல்லவா செய்வார்கள் ஆகையால்தான் ஆண்டவன் பலபேர்களை பல விதமாக படைத்து இருக்கிருன் நாம்யாது செய்வது அதைப்பற்றி நினைக்காமல் கேள்வியை கவனித்து வருக, சூரியமேட்டில் முக்கோணகுறி உள்ளவருக்கு சித்திரம் வரைவதிலேயோ அல்லது நம்போல சாஸ்தி

ரம் பார்ப்பதிலேயோ அல்லது பல நாள் பயிற்சியினுல் ஒருநாள் இமமாநிலத்தையோ அல்லது இந்த நாட்டையோ ஆளத்தகுந்த திறமை யுடையவராகவும் அத்திறமையின் மூலம் தன் குடும்பத்தை நல்லபடிக்கு வைத்துக் கொள்ளவும். சிந்தனை சக்தி மூலர் சிரேநகிதர்கள் ஆச்சரியம் அடையத்தக்க திறமையுள்ளவராகவும் இருந்திடுவர் என்றும் மேலும் தன் சுயபுத்தியால் உடலை மிகவும் கவனமாக வைத்துக்கொள்வார் என்றும் அப்படி வைத்துக் கொள்வதினுல் இவ்வுலகில் ஆண்டவர் அருளாலும் நீண்ட நாடகள் உயிர் வாழக்கூடும் என்றும் சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா ஒரு சிறு சந்தேஷகம் தங்களைப் போன்று பிற்காலத்தில் நானும் இக்கலையில் வல்லவனாக இருக்கலாம் அல்லவா ஆகையால் தான் கேட்டேன் தவறுதலாக எண்ண வேண்டாம் கேள்விக்கு விடை கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்?

ஆசிரியர்:—தம்பி! நன்ருக கேட்டாய்? உன் திறமையால் முன்னுக்கு வரமுடியும் ஒன்று கூறுகிறேன் அதுவும் என் கற்பனை என்று எண்ணிவிட வேண்டாம் அது நம் பெரியோர்களின் சொல் அது முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார், ஆகையால் நீ இக்கலையில் முயன்ருல் முன்னுக்கு வரமுடியும் என்பது என் ஆசை வலைக்குறி சூரிய மேட்டில் காணப்படும் நபருக்கு வேலை என்ருல் பிடிக்காது தினம் ஏன்! நேர நேரத்துக்கு எப்படியும் சாப்பாடு வேண்

டும். பின்செலவுக்கு பணம் வேண்டும் அதன் பின் மைனர் விளையாட்டுக்கு பணம் வேண்டும். அப்படி பணம் கிடைக்க வில்லை என்றால் எங்கேயாவது திருடு வது அதனால் அகப்பட்டுக் கொண்டு பல இன்ன லுக்கு ஆளாவது ஒரு காரியத்தை செய்வதற்கு துணி யலாம்.

மாணவன்: ஐயா! புதன்மேடு என்பது எப்படி இருக்கும் என்பதை எனக்கு எடுத்துக் கூறுங்கள்.

ஆசிரியர்: தம்பி! இப்பொழுது நான் கூறப் போ கும் மேடானது தான் புதன் மேடாகும். தெளிவுடன் இருப்பதால் தான் இதை புதன்மேடு என்று கூறுகி றோம்.



மாணவன்: ஐயா! ஒரு சிறு ரேகை புதன் மேட் டில் இருந்தால் இதனால் ஏற்படக் கூடிய பலாபலன் கள் யாது? இந்த ரேகை அழுத்தமாக இருந்தால் இதன் மூலம் கிடைக்கக் கூடிய சகாயம் என்ன என் பதை எடுத்து கூறும்படி தங்களை மிகதாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன் புரியும்படி கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! நீ கேட்பதைப் போல புரியும் படியே கூறுகிறேன். நீகவனமாக கேட்டு புரிந்துகொள் புதன் மேட்டில் ஒரு சிறுரேகை யிருந்தால்இந்த நபர் செய்யக்கூடிய தொழில்களினலோ, அல்லது வியா பாரத்தினலோ, நண்பர்களின் உதவியாலோ, அல் லது, இனபந்துக்களின் உதவிகளினலோ, அல்லது

இவர் செய்யம் அரசாங்க ஊழியத்தாலோ, அல்லது அயல் ஊருக்கு செல்லும் பொழுதோ திடீரென்று இவர் எதிர்பாராத பொருள் வகைகள் கிடைக்கக் கூடும் பெண்களின் மூலமும் கடவுளின் கருணையாலும் இவர் மனம் பரிசுத்தத்தாலும் எதிர்பாராது பெருளும் புகழும் கிடைக்கக்கூடும். அடிக்கடி நோய்நொடிகள் ஏற்பட்டு பின் அசந்து விடக்கூடும். சுய அறிவு சுமாராக உண்டு தெய்வபக்தி ஏராளம் உண்டு, தன் மதமே பெரிதென வாதாடுவார், கடைசி காலத்தில் ஒரு வாறு கஷ்டமும் பின் ஆண்டவன் அருளால் அவைகள் அணைத்தும் செய்து விடக்கூடும். நீண்ட ஆயுட்காலம் இருக்கக்கூடும் என்றும் சொல்லப்படுகிறது. புதன் மேட்டில் அச்சிறுரேகை அழுத்தமாக இருந்தால் இச்சாதகர் எப்பொழுதும் சிந்தனை செய்து கொண்டு தொழில் முறைகளிலும் வியாபார வகைகளிலும் பெண்கள் விஷயங்களிலும் கவனமாக இருப்பர் அடுத்தவர்களுக்கு தன்னுல் இயன்ற அளவு அறிவை கொடுப்பார் பிறரின்பொருள்களை விரும்பமாட்டார் தன் பொருளை அடுத்தவர்களுக்கு கொடுத்து உதவி செய்வார், யாவரிடமும் அன்புடனே பேச்சு வார்த்தைகள் வைத்துக்கொள்ளுவார் நான்தான் பெரியவன் என்று டாம்பீகமாக கூறமாட்டார் தன்குழந்தைகளுக்கு சிறுவயதில் நல்ல எண்ணங்களை எடுத்துக் கூறுவார் அதன் படியே அவர்களை நடக்கவும் சொல்லுவார். எம்மதத்தவரையும் கண்டால் அன்புடனே பேசுவார் நீங்கள் எந்த மதம் என்முல் எமக்கு எம்மதமும் சம்மதமேஎன்றுசொல்லுவார் விஞ்ஞான முறைப்படி உடலை பாதுகாத்து காலமென்னும் சக்கரத்தை சுற்றிவரக்கூடுமென்றும் கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! நீளமாக ஒரே அளவில் மூன்று சிறு ரேகைகளும் ஆறு சிறு ரேகைகளும் புதன் மேட்டில் நன்கு காணப்படின் இதனுல் வரும் வழி வகைகள் எது? என்பதை எடுத்துச் சொல்லுங்கள்?



ஆசிரியர்: தம்பி! இக் கேள்வியை ஆழ்ந்து கவனி ஏன் என்ருல் சிக்கலான கேள்வி என்று எண்ணுகிறேன்? ஆறுசிறு ரேகைகளும், மூன்று சிறு ரேகைகளும் நீளமாக புதன்மேட்டில் உள்ளவர்களுக்கு விஞ்ஞான முறைப்படி டாக்டர் தொழிலோ. அல்லது சர்வசாதாரண வைத்திய முறையோ செய்யக் கூடும் என்றும், இவர்கள் இத்தொழில் மூலம மேன்மை அடையக்கூடு மென்றும் தன் குழந்தைகளை இத்தொழிலே செய்யும்படி வற்புறுத்துவர் என்றும் அதனுல் தன் குடும்பம் முன்னுக்கு வரமுடியும் என்றும் ஏராளமான நண்பர்களை நட்புக்கொள்வார் என்றும் அரசியல் காரியத்தில் அதிக கவனம் செலுத்த மாட்டார் எனவும் ஏதோ ஒரு மதத்தில் பற்றுடையவராகவும் தன் தொழில் மூலம் உடலை பாது காத்துக்கொள்ளக் கூடுமென்றும், இதனுல் கொஞ்ச காலம் நிம்மதியாக வாழ்கை நடத்துவர் என்றும் எண்ண வேண்டியிருக்கிறது மேலும் கவனி, இக்குறி

கள் மாதர்களுக்கு இருந்தால் நல்ல ஒழுக்கமுடைய பெண்ணுகவும் பார்த்தவர்கள் அப்பெண் உத்தமவதி என்று சொல்லக் கூடிய பெயரும். பெண்களுக்கு வேண்டிய நாணம், மடம் அச்சம் ஆகிய எல்லா அம்சங்களும் மாதர்கள் செய்யக் கூடிய காரியங்களுக்கு தன்னுல் இயன்ற உதவிகளும் தன் குடும்பம் அடுத்தவர்கள் பார்த்து இது அல்லவா! குடும்பம் என்று சொல்லக் கூடிய வார்த்தைகளை தன் காதால் வாங்க வேண்டும் என்றஎண்ணமும் பெற்றோரிடமும் சுற்றத்தாரிடமும் அன்பாக பேசுவது ஆகிய எல்லா அம்சங்களைக் கொண்ட இப்பெண் பேரும், புகழும் பொருளும் கொண்ட டாக்டருக்கு மனைவியாகி இல்வாழ்க்கை இன்பமாக நடத்தக் கூடுமென்றும் நினைக்கப் படுகிறது.



மாணவன்: ஐயா! மேற்கண்ட வினு! கஷ்டமான வினுத்தான், ஆயினும் தங்களின் வன்மையால் அழகாக எடுத்து கூறிய தங்களை எப்படித் தான் மறப்பது அப்படி மறந்தால் உளுத்துப் போன மரத்துக்கு சமமாவேன் இக்கேள்விக்கும்விடைகொடுங்கள் பற்பல சிறு கலப்பு ரேகை புதன் மேட்டில் காணப்பட்டால் இதன் மூலம் கிடைப்பது யாது என்பதை எடுத்து கூறுங்கள்?

ஆசிரியர்:—தம்பி ஏது நீயும் அழகாக பேசகற்றுக் கொண்டாயே அதற்குமிக்க சந்தோஷப் படுகிறேன் புதன் மேட்டில் பற்பல கலப்பு ரேகைகள் உள்ளவர்

அதிக புத்திசாலியாகவும், புத்தியின் திறமையால் தொழில்முறையிலும் வியாபாரமுறையிலும் வாங்கல் கொடுக்கல் வகைகளிலும் இனபந்துக்களின் உதவியும் நண்பர்களின் நட்பும் பெண்கள்மூலம் வருவாயும் வெளி இடங்கள் செல்வதால் வருமானமும் மனைவிமக்களிடம் மனக்கசப்பும் பின் சந்தோஷமும் ஏற்படக்கூடுமென்றும் நினைக்கப்படுகிறது, ஆனால் இவர் விஞ்ஞான முறைகளை கையாண்டால் இதனால் ஆபத்து வரக்கூடுமென்றும் நினைக்க வேண்டியிருக்கிறது ஆயுள்காலம் அவ்வளவாக கூறமுடியாது ஒருவாறு தெய்வீக பக்திஉண்டு, எதற்கும் முன்னெச்சரிக்கையாக நடந்துகொள்ள வேண்டுமென்றும்சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா!பலசிறு இரேகைகள் உற்பத்தியாகி அவைகள் இருதயரேகைகள் வரைக்கும் புதன் மேட்டில் காணப்பட்டால் இதனால் கிடைக்க கூடிய காரியங்கள் யாது? புரியும்படி கூறுங்கள்.

ஆசிரியர்: தம்பி! புதன் மேட்டில் பலசிறு ரேகைகள் உண்டாகி இவைகள் இருதயரேகை வரைக்கும் போய் இருந்தால் இச்சாதகர் தொழில் முறைகளில் வரக்கூடிய செல்வத்தையும், வியாபார முறையில் கிடைக்கக் கூடிய பணத்தையும், பெண்களால் கிடைக்கக் கூடிய பொருள் வகைகளையும். வெளிநாட்டில் இருந்து வரக்கூடிய வருமானத்தையும். இவைகளால் ஏற்படக்கூடிய நன்மைகளையும், அரசியல் காரியங்களால் கிடைக்கக்கூடிய பட்டம் பதவிகளையும், ஆண்டவன் அருளால் வரக்கூடிய அந்தஸ்தையும் மதசம்மந்தமாக வரக்கூடிய மதிப்பையும், தன்புத்தியில்லா தன்மையால் இழக்க நேரிடும், மேலும் உடல் வகையால் பலவியாதிக்கு ஆளாக்கப்பட்டவராகவும்

சொற்பகாலம்தன் வாழ்க்கையை நடத்திவிட்டுஇவ்வுலகைவிட்டு, சென்றுவிடக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! புதன்மேட்டில் குறுக்சாய்சிறு ரேகை சென்றுள்ளவர்களின் காலபலன்கள் யாவை?



ஆசிரியர்: தம்பி! குறுக்காய் சிறு ரேகைகள் புதன் மேட்டில் காண்பவர்களுக்கு, அடுத்தவர்கள் பொருளின் மேல் ஆசையும் பொறுமையும் கொண்டவராகவும், இனபந்துக்களை மோசப்படுத்தி வாழ வேண்டும் என்ற எண்ணம் கொண்டவராகவும் நண்பர்களை கண்டால் பல்லையிளித்து பணம் பறிக்கும் பண்புள்ளவராகவும், மனைவி மக்களை நம்ப முடியாதவராகவும் வெளி நாட்டு பொருளை திருட்டுத்தனமாக கொண்டு வந்து அதன் மூலம் குடும்பம் என்ற வண்டியை ஓட்டலாம் என்ற எண்ணம் படைத்தவராகவும், பெண்களால் பெரும் வியாதிக்குஆளானவராகவும்,தெய்வத்தையும் அதை போற்றி புகழும் மக்களை ஏசுபவராகவும் கொள்ளை கொலை ஆகியவைகளுக்கு அஞ்சாதவராகவும் சொற்பகாலம் இருந்து இவ்வுலகில் சொல்லமுடியாதஅட்டகாசங்கள் செய்து அடுத்தவர்களால் தன் உயிரைப் போத்திக் கொண்டு இந்த உலகத்தில் இருந்துமறைந்துவிடக்கூடிய மனிதனுகவுகம் இருக்கக்கூடும்.

மாணவன்: ஐயா! ஒரு கறுப்புக் கோடு புதன் மேட்டில் காணப்பட்டால் அதனுல் அடையும்

அந்தஸ்துக்கள் யாது? புதன்மேட்டில் ஒரு பெரிய கறுப்புப்புள்ளி காணப்படின் அதனால் கிடைக்கக் கூடிய காரியங்கள் யாது?




ஆசிரியர்! தம்பி! புதன் மேட்டில் ஒரு கருப்புப் புள்ளி உண்டாகி இருந்தால் இச்சாதகருக்கு. தொழில் வகைகளிலும் வெளிநாட்டு முறைகளிலும் வெளிநாட்டு பிரயாணத்தாலும் காதல் விஷயங்களாலும் அரசியல் காரியத்தாலும் நண்பர்களா லும். இன பந்துக்களாலும் குடும்பத்தில் உள்ளவர்களா லும், மதத்தலைவர்களாலும் கொடுக்கல் வாங்கல் வகைகளிலும். உத்தியோக முறைகளிலும் அங்கும், இங்கும் அலைவதாலும் கெட்ட செய்கையாலும் தன் கைவசம் உள்ள செல் வங்கள் அனைத்தையும் இழந்து விட்டு ஏமாந்த சோணகிரியாக இருந்திடுவர் இரண்டாவது புதன் மேட்டில் ஒருபெரிய கறுப்புப்புள்ளி உண்டாகி இருந்தால் பெண்களால் ஆபத்தும், நஷ்டமும், தொழில் முறைகளில் கஷ்டமும் குடும்பத்தில் அடிக் கடி சச்சரவுகளும், நண்பர்களால் தீமைகளும், இன பந்துக்களால் மன வேற்றுமையும்பட்டம், பதவி களால்பெரிய ஆபத்தும் தெய்வபக்தி இல்லாதவனாக வும் நோய் நொடிகளால் அடிக்கடி ஆபத்தும்தனக்கு சம்மந்தமில்லாத காரியத்தில் தலையிடுவதால் மான பங்கமும், பக்தர்களைக் கண்டால்பரிகாசம் செய் யக்கூடிய பண்பு உள்ளவனாகவும் கையில் உள்ள பொருளை இழந்து விட்டு அதன் மூலம் மனவே தனை அடைபவனாகவும், பல ஆபத்தை அடைந்து

கொண்டு இவ்வுலகில் அதிகநாள் வாழ முடியாதவ னாகவும் இருந்திடுவர்.

மாணவன்: ஐயா! புதன்மேட்டில் ஒரு கிராஸ்குறி இருந்தால் அதனால் அடையும் நன்மைகள் தீமைகள் யாது? மேலும் மந்றையகிரகரேகைகள் இருந்தால் அதனாலும் ஏற்படுவது எவை? என்பதையும் கூறுங்கள்?




ஆசிரியர்: தம்பி! மிக கவனமாக கேட்டுவா ஒரு கிராஸ் மேடு இருந்தால் இதனால், இந்த நபர் உத்தியோக முறையில் திருடுவது தொழில் முறையில் அடுத்தவர்களின் வயிற்றில் அடித்து சம்பாதிப்பது வியாபாரத்தில் பொய் சொல்லி அதிக லாபம் தேடுவது இன பந்துக்களிடம் மோசடிசெய்து அதன்மூலம் பொருள்வகைகளை குவிப்பது. நண்பர்களிடம் நய வஞ்சகதன்மை கொள்வது பெண்களிடம் ஆசை வார்த்தைகளைப் பேசி அவர்களை தன் வசம் இழுப்பது பின்னால் கைவிடுவது இன்று செலவு வகைகளுக்கு எவன் தலையில் கை வைக்கலாம் என்று எண்ணுவது அடுத்தவர்கள் பார்க்கும்படி. ஆண்டவன் இடத்தில் அன்பாக இருப்பதைப் போல பகல்வேஷம் போடுவது மனைவி மக்களுக்கு .. நம்பமுடியாதவனாக இருப்பது என்றும் எப்பொழுதும் அடுத்தவர்கள் பொருள் மூலம் வாழ்க்கையை ஓட்ட வேண்டும் என்ற கெட்ட எண்ணம் கொள்வது அடுத்தவர்களை கண்டால் ஒன்றும் தெரியாதவனாகவும், தன்னிடம் யாதும் கிடையாது என்று காண்பது போல் நாடகம் நடத்துவது

நோய் நொடிகள் வந்தாலும் தன்பெகருளை இழுக்கா மல் அதிகநோய்களுக்கு உடலை ஆளாக்கி கொள்ப வராகவும் பல அட்ட காசத்தின் ஆணி வேராகவும் இருந்திடுவர் இன்னும் கிரக பேடுகள் மற்றும் நன்ருக காணப்படுவராக இருக்குபட்சத்தில் தன் பேச்சுநடத் தாலும். நடத்தையின் காரணத்தாலும் பொருளை தேடுவது தொழில் முறைகளை தன்சுய புத்தியால் நடத்துவதும் வியாபார முறைக்கு தன் கலசலப்பான பேச்சுகளால் அடுத்தவர்களை கவர்வதும் அசியல் காரியமோ அல்லது அதன் மூலம் கிடைக்கும் புகழ் பாலை தன்விகட த் தனத்தால பாதுகாத்தல். நண்பர் களையும். இனபந்துக்களையும் தன் நாவன்மையால் வெற்றி காண்பது சிறந்த மதத்தின் அகிபதியாக வும். நோய்கள் வந்தால் கவலைபடாமல் இருப்பவரா கவும் பெண்களைக் கண்டால் அதிக கவனம் கொள்ப ராகவும் மனைவி மக்களிடம் கலகலப்பாக இருப்பவரா கவும். இன்னும் தன் நல்ல எண்ணத்தால் இந்த உல கத்தில் இறுதிகாலம் வரைக்கும் இல்லை என்றுசொல் லாமல் வாழ்க்கை நடத்துபவராகவும் வாழ்த்திடுவர்.

மாணவன்; ஐயா! புதன்மேட்டில் அநேக சிறு கிராஸ் கோடுகள் உள்ளவர்களுக்கு பலாபலன்களை எந்த விதத்தில் கூறவேண்டும் என்பதை கூறுங்கள்?



ஆசிரியர்: தம்பி! அநேக சிறுகிராஸ் கோடுகள் புதன் மேட்டில் காண்பவர்களுக்கு எப்பொழுதும் அயல் நாட்டு பிரயாணத்தால் நஷ்டமும், தான் செய்யும் உத்தியோக மோ, வியாபார முறைக்கோ தொழில் முறைக்கோ பங்கம் படும்படியாக நடந்துகொள் பவராகவும் இன பந்துக்களி டமும், சிநேகிதர்களிடமும்

சதா சண்டைகொள்பவராகவும் பெண்களைதன் பலத்தால் மானபங்கப்படுத்தும், படுமோசக்காரனாக வும், தான்மட்டும் நல்லபடி இருக்கவேண்டும் என்ற தன்னலம் கொண்டவராகவும், பெரியோர் களை எப்பொழுதும் தூற்றும்தன்மைகொண்டவராக வும், பலகெட்ட செய்கையால் தன்பலத்தை இழந்த வராகவும், சொற்பகாலம் வரைக்கும் இவ்வுலகில் இருந்து சென்றிடுவர் என்று கூறப்பட்டுள்ளது.

மாணவன்: ஐயா! நட்சத்திரக்குறி புதன் மேட் டில் இருந்தால் இதனால் கிடைக்ககூடிய பலாபலன் களை கூறுங்கள்?



ஆசிரியர்; தம்பி! புதன் மேட்டில் நட்சத்திரக்குறி உள்ளவர்கள் தொழில் வகை களிலும். வியாபாரவகைகளி லும், உத்தியோக முறைகளி லும் மோசம் செய்து அதன் மூலம் காலம் கழிக்கலாம் என்று எண்ணக்கூடியவராக கவும் தன் பெற்றோரையும் சுற்றத்தாரையும், மனைவி மக்களை நம்ப முடியாதவரா கவும், பலபேர்களின் எதிர்ப் புகளை சமாளிக்கக் கூடியவனாகவும். பெண்களை வைத்து அதன் முலம் பொருள் குவித்து, தான் செல்வ சீமானாகலாம் என்று நினைப்பவனாகவும் போ திய வேலைகளை செய்ய முடியாதவனாகவும் அடுத்த வர்களை ஏமாத்தக் கூடியவனாகவும் இருந்திடுவர் இன் னும் இச்சாதகன் பலகெட்ட தொழில்கள் செய்து, அதன் மூலம் பலபேர்களின் பகைமையை வைத்துக்

கொள்பவனுகவும், நோய்கள் மூலம் பல இன்னல்களை அடையும் ஆத்மாவாகவும் உடல்குன்றி இருப்பதால் சொற்பகாலம் வாழ்க்கை நடத்துபவனுகவும் இருந்திடுவர், இதில் முக்கியமாக நல்லபடி உள்ளகையில் புதன்மேட்டில் நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் அவர் தன் தொழில் முறைகளையும், வியாபார முறைகளையும் உத்தியோக முறைகளையும், தன் குடும்ப வாழ்க்கையையும் மனைவி மக்களையும் இன் பந்துக்களையும் தன்திறமையால் நல்லபடி நடத்துவர் என்றும் அரசியலாலும் மதத்தாலும இன்னும் பல காரணங்களால் வரக்கூடிய பலவகை எதிர்ப்புகளையும் தன்சுய புத்தியால் எதிர்த்து வெற்றி காண்பவர் என்றும் சொல்லக்கூடும் எனநம்பப்படுகிறது.



மாணவன்: ஐயா! புதன் ரேகைஉற்பத்தியாகும்இடத்தில் அது ஆயுள்ரேகையைத் தொடாமல் நீளமாகவும் இந்தரேகை புதன்மேட்டின் மத்தியில் தொடாமலும்ஒரு நட்சத்திரக் குறியுடன்இருந்தால் இதனுல் ஏற்படக்கூடிய வழிவகைகள் யாவை

ஆசிரியர்: தம்பி! மேற்கூறிய கேள்விக்கு தகுந்த பதில் கொடுக்கிறேன் நீ கவனமாக கேட்டு அதைப்போல நடந்துகொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன் இவருக்கு பொன்னும் பொருளும்வந்து, அதன்மூலம் தன் மனைவி மக்களை சந்தோஷப்படுத்தக் கூடியவராகவும் அரசியல் காரியத்தால் அதிகலாபமும் வெளி நாடுசெல்வதால் இன்னும் எதிர் பார்க்க முடியாத வருமானமும், இனபந்துக்களாலும் நண்பர்களின் நல்ல எண்ணத்தாலும் இன்னும்

சொல்ல முடியாத பொருளுக்கு அதிபதியாகக்கூடிய அருமையான அந்தஸ்து உள்ளவராகவும் தன்னை சார்ந்து இருக்கும் மதத்துக்கோ அல்லது அரசியல் காரியத்துக்கோ ஏராளமான செல்வத்தை கொடுப்பார் தெய்வ பக்திமூலம் தன் குடும்ப கடைசி காலத்து வரைக்கும் இன்பமாக இருக்கவேண்டும் என்று வேண்டுவர், இன்னும் தன் செல்வத்தால் தனக்கும் தன்குடும்பத்தில உள்ளவர்களுக்கும் ஏற்படக்கூடிய நோய்நொடிகளை ஒருபொழுதில் போக்கு வார் தன்னிடம் வருபவர்களுக்கு தாராளமாக உதவி செய்து அவர்களின் அன்பை பெறுவர் என்றும் இன்னும் நீண்ட ஆயுள் உள்ளவராகவும் இருக்கக் கூடும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! நான் எத்தனை பேர்களைக் கண்டு இருக்கிறேன் ஆனால் தங்களைப் போன்றவர்களை பார்த்தது கிடையாது. குருவே கேள்வியைக் கூறுகிறேன் தாங்கள் பதில் கொடுங்கள்? புதன்மேட்டில் வட்ட வளையமான ரேகைக்குறி காணப்படின் கிடைக்கக் கூடிய நன்மை? தீமைகள் யாது?




ஆசிரியர்: தம்பி நான் பெரியவன் என்று எண்ணவில்லை, நீ அறிந்து கொள்ள வேண்டும். வல்லவனுக்கு வல்லவன் இவ்வையகத்தில் உண்டு சரிதானே! கேள்வியை கவனிப்போம் புதன் மேட்டில் வட்டவளையமான ரேகைக்குறி உள்ளவர் இன்பத்துக்காக இளம்பெண்களிடம் வம்பு செய்து தான் நினைத்தது நடக்கவில்லையே என்று நினைத்து மனவேதனை அடைக்கூடும் தான்

செய்யும் வேலைகளால் இலாபம் கிடைக்கவில்லையே, என்று நினைத்து மனவேதனை அடையக்கூடும் மற்றவர்கள் நல்லபடி இருக்கிறார்களே! நாம் அப்படி இருக்கவில்லையே என்று எண்ணுபவராகவும் அயல் நாட்டு பிரயாணத்தால் அவமானமும் சுற்றத்தார் மூலம் சுகம் கிடைக்கவில்லையே என்று எண்ணக் கூடியவராகவும் தன்மனைவி மூலம் போதிய இன்பம் கிடைக்கவில்லையே என்று நினைக்க கூடியவராகவும் கடவுளைப்பார்த்து எனக்கு ஏன் இந்தநிலை என்று வருந்துபவராகவும் உடல் நலம் கெட்டவராகவும், இன்னும் சொல்ல முடியாத வேதனைக்கு ஆளாகி அதன் மூலம் தன் வாழ்க்கையை விஷம் குடித்து போக்கிக் கொள்ளக்கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புதன் மேட்டில் சதுரக்குறி காணப்பட்டால் கிடைக்ககூடிய பலாபலன் எவை என்பதை எடுத்துக் கூறுங்கள்?



ஆசிரியர்: தம்பி! சதுரக் குறியானது புதன் மேட்டில் இருந்தால் இக்குறி உள்ள சாதகருக்கு தொழில் வகைகளில் ஏற்படக்கூடிய நஷ்டமும் வியாபார வகைகளால் உண்டாகக் கூடிய நஷ்டமும் பெண்களால் ஏற்பட விருந்த ஆபத்தும் கெட்ட செய்கையால் உண்டாக்க கூடிய நோய் நொடி வகைகளும், செல்லக்கூடிய இடங்களில் விஷஜந்துக்களால் ஏற்பட இருந்த ஆபத்தும் இனபந்துக்களால் வர இருந்த இன்னல்களும் அரசியல் காரியங்க

ளால் வரஇருந்த ஆபத்தும் கடவுளின்மேல் துவே ஷம் கொண்டு இருந்தால் வர இருந்த பெரிய ஆபத் தும் உத்தியோக முறையால் வரஇருந்த கஷ்டமும் சதுரக்குறியால் இந்தசாதகருக்கு அகன்று விடக் கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! தாங்கள் இந்த தள்ளாத வயதில் இவ்வளவு அழகாக இக்கலையைப்பற்றி கூறுவதை கண்டு என் மனம் சந்தோஷப்படுகிறது மீண்டும் கேள்வியை ஆரம்பிக்கிறேன், முக்கோணக்குறி புதன் மேட்டில் காணப்பட்டால் கிடைக்கக் கூடிய வழி வகைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! என் போன்ற தள்ளாத வயதுடையவர்கள் சும்மா இருந்து விட்டால் உன் போன்ற இளம் வயதுடைய காளைகள் இக் கலையில் முன்னேறுவது எங்ஙனம் கேள்வியை விளக்குகிறேன் புதன் மேட்டில் முக்கோணக் குறி கண்டு உள்ளவர்களுக்கு தான் இருக்கக் கூடிய மாகாண காரியத்தில் அதாவது தொழில் முறைகளிலும் உத்தியோக வகைகளிலும் இன்னும் பட்டம் பதவியால் வரக்கூடிய புகழுக்கும் கற்றத்தாரின் தூய எண்ணத்தாலும் தான்சார்ந்துஇருக்கக்கூடிய மதகாரியங்களால் வருவாயும் மனைவி மக்களாலும் குறிப்பாக பெண்களாலும் ஆண்டவன் அருளாலும் இவ்வுலகில் நீடித்துவாழக் கூடும் என்று சொல்லப்படுகிறது

மாணவன்: ஐயா! புதன்மேட்டில் வலக்குறி கண்டு உள்ளவர்களுக்கு கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் யாது?

ஆசிரியர்: தம்பி! வலக்குறி புதன்மேட்டில் கண்டு இருந்தால் வியாபார முறைகளில் மோசடியும் உத்தியோக விஷயங்களால் நஷ்டமும் இனபந்துக்களை மோசம்செய்து வாழவேண்டும் என்ற எண்ணமும் மனைவியை ஏமாத்திவிட்டு வேறு பெண்கள் மூலம் சந்தோஷப்படுபவராகவும் இக்காரியத்தால் பல இன்னல்களுக்கு ஆளாக்கப்பட்டவராகவும் கடவுளை கண்டபடி ஏசும்பண்பு கொண்டவனாகவும் இவ்வளவு அட்டகாசம் செய்துவிட்டு அதன்மூலம் மனவேதனைப்பட்டு தன் உயிரைப் போக்கிகொள்ளக்கூடுமென்றும் கூறப்பட்டுள்ளது.



மாணவன்: ஐயா! தீவுக்குறி புதன் மேட்டில் கண்டு இருந்தால் அதனால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் யாவை?

ஆசிரியர்: தம்பி! தன் மேட்டில் தீவுக்குறி கண்டு இருப்பவர்களுக்கு கல்வியும் சுய அறிவும் ஒருவாறாக உண்டு இதனால் தன் குடும்பத்தை நாளைக்கு இல்லையே என்று சொல்ல முடியாதவாறு நடத்திக்கொள்ளுவார் கடவுள் பக்தி சுமாராக உண்டு நோய் நொடிகள் வந்தாலும் பின் சென்று விடக்கூடும். மந்த சுபாவம் உள்ளவராகத்தான் கடைசி வரைக்கும் ...

லப்படுகிறது, இச்சாதகருக்கு சுமாராக ஆயுள்காலம் உண்டு என்று தெரியவருகிறது.




மாணவன்: ஐயா! இது வரைக்கும் புதன் மேட்டையும் அவை-வில் கண்டு உள்ள ரேகைகளால் உண்டாகக் கூடிய பலா பலன்களைக் கூறினீர்கள் இனி அடுத்த மேடாகிய செவ்வாய் மேட்டைப்பற்றி கூறுங்கள செவ்வாய் மேடானது எப்படி இருக்கும் என்பதை விளக்குங்கள்?

ஆசிரியர்: தம்பி! செவ்வாய் மேடானது கையில் மூன்று இடங்களில் கிரகமாக இருக்கிறது ஒன்றுபுத்தி ரேகையின் முடிவிலும் அதற்குமேல் அமைந்து இருக்கிறது இரண்டவதாக சுக்கிரமேட்டிற்கு மேல் அமைந்து இருக்கிறது, கடைசியாக அதாவது மூன்று வது கையின் மத்தியில் அமைந்து இருக்கிறது. இதை செவ்வாய்கிரகம் என்றும் அல்லது செவ்வாய் சம வெளி அல்லது செவ்வாய் ஆதிக்கம் என்றும் சொல்லக்கூடும்.

மாணவன்: ஐயா! செவ்வாய் மேடு என்பதை கூறினீர்கள் அடுத்து செவ்வாய் மேட்டில் செங்குத்தாக ஒரு ரேகை சென்று இருந்தால் அதன் மூலம் கிடைக்கக் கூடிய நன் மை தீமைகள் யாவை?




ஆசிரியர்: தம்பி! நீ நன்றுக செவ்வாய் மேட்டைப்பற்றி அறிந்து இருப்பாய் என்று நம்புகிறேன் அடுத்து செங்குத்தாக ஒருரேகை செவ்வாய் மேட்டில் உண்டாகி இருந்தால் அதன் மூலம் கிட்டக்கூடிய

பலனை கவனி இப்படி உள்ள நூர்வியாபார வகைக ளோ உத்தியோக முறைகளுக்கோ அயல்நாட்டு பிர யாணத்துக்கோ கொடுத்த பின் வாங்குவதற்கோ யாரிடமும் எதையும் பேசுவதற்கோ மதசம்மந்தமான காரியங்களில் முன்நின்று நடத்துவதற்கோ ஒருக்கா லும் பயப்படமாட்டார், தைரியமாக இருப்பார் இன் னும் சொல்லப்போனால் நோய் நொடிகளுக்கும் இன பந்துக்களால் மனவருத்தம் வரக்கூடுமே என்று பயம் கொள்ளமாட்டார். உடலை நன்கு பாதுகாத்து கடவுளின் கிருபையாலும் இவ்வுலகில் நீண்டகாலம் வாழக்கூடும்




மாணவன்: ஐயா! செவ்வாய் மேட்டில் பலரேகை முன்னும் பின் னும் அடைந்து இருந்தால் இதனால் உண்டாகக் கூடிய வழி வகைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! பல ரேகை செவ்வாய் மேட்டில் முன்னும் பின் னும் அமைந்து இருந்தால். தான் செய்யும் தொழில் வகைகளிலும்உத்தியோக முறைக ளிலும் கொடுக்கல்வாங்கலிலும் மனைவிமக்களிடமும் இன்னும் இனபந்துக்களிடமும் தனக்கு வேம்பட்ட வர்களிடமும் குறிப்பாக பல பெண்களிடமும் முரட் டுத்தனமாக நடந்து கொள்வர் என்றும் இதனால்தன் இறுதி காலத்துக்குள் இவருக்கு உயிர் போகக் கூடிய நிலைமை வந்தாலும் ஆச்சரியப்படக் கூடாது

மாணவன்: ஐயா! செவ்வாய் மேட்டில் ஒரு குறிக்கிட்ட ரேகை சென்று இருந்தால் கிடைக்க கூடிய நன்மைகள் தீமைகள்யாவை? மேலும் இன்னொரு சந்தேகம் அந்தகுறுகிட்ட ரேகை அழுத்தமாகவும் பதிந்தும் நீண்டும் இருந்தால் ஏற்படுவதுயாது?




ஆசிரியர்: தம்பி! கேள்விபெரிதென நம்புகிறேன் ஆனாலும் உன் ஆசையை நிறைவேற்றுவது என் கடமையல்லவா? சரி, கேள்வியை கவனிப்போம் செவ்வாய் மேட்டில் ஒரு குறுக்கிட்ட ரேகை கண்டு இருந்தால் இவர்செய்யும் தொழிலான விவசாயமோ, அல்லதுவியாபாரமுறையோஉத்தியோக முறையோ ஆகியவற்றால் நஷ்டம் ஏற்பட்டால் அதன் மூலம் விரோதிகள் ஆகக்கூடும் அந்த மேட்டிம் எத்தனை குறுக்கிட்ட ரேகைகள் இருக்கிறதோ அவ்வளவுக்கும் பெண்கள் மூலமும் நண்பர்கள் மூலமும் வெளி இடங்களிலும் விரோதிகள் அதிகமாகக்கூடும் இன்னும் குறுக்கிட்ட ரேகைகள் அழுத்தமாகவும் பதிந்தும் நீண்டும் இருந்தால் இவர் உயிரை போக்கக்கூடிய விரோதிகள் உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது




மாணவன்: ஐயா செவ்வாய் மேட்டில் குறிப்பிட்ட குறுக்கு ரேகை ஆரோக்கிய ரேகையை தொட்டுக் கொண்டு இருந்தால் என்ன? அந்த குறுக்கிட்ட ரேகைச் சூரிய ரேகையைத் தொட்டுக் கொண்டிருந்தால் என்ன? மேலும் அது விதி ரேகையைத் தொட்டுக் கொண்டிருந்தால் கிடைக்கக்கூடிய நன்மைகள் எப்படி இருக்குமென்பதை எடுத்துகூறுங்கள்?

ஆசிரியர்; தம்பி! நீகேட்ட கேள்வி பெரிது தான் ஆனாலும் விடை கூறுகிறேன் செவ்வாய் மேட்டில் குறிப்பிட்ட குறுக்கு ரேகையால் பெண்கள்மூலம் உடல் நலம் கெட்டும் நண்பர்மூலம் பல இன்னல்களும் சுற்றத்தவர் மூலம் சுகம் இல்லாமலும்வியாபார முறையால் மனவேதனையும் வரக்கூடும் மேலும் குறுக்கிட்ட ரேகையால்தொழில்வகைகளிலும் வியாபார முறைகளிலும் உத்தியோகமுறைகளிலும் வெளி ஊர் செல்வதாலும் வீண் அலேச்சலாலும் மத சம்மந்தமான காரியங்களாலும் நஷ்டம் ஏற்படக் கூடும் அக்குறுக்கிட்ட ரேகைகுறி விதி ரகை வரைக்கும் சென்று இருந்தால் பெண்கள் மூலமாகவும் நண்பர்கள் மூலமாகவும் குடும்பத்தில் உள்ளவர்களாலும் பட்டம் பதவிகளாலும் ஆபத்து வரக்கூடும் கடைசியாக அக்குறுக்கிட்ட ரேகைக்குறி ஆயுள்ரேகை வரைக்கும் போயிருந்தால் மனைவி மக்களுக்கும் இன பந்துக்களுக்கும் தன் உயிருக்கு சமமான நண்பர்களுக்கும் ஆபத்து வரக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! பெரிய கேள்வியை மிக அழகாக கூறிய தங்களை பாராட்டுகிறேன் அடுத்த வினாவுக்கு விடை கொடுங்கள் செவ்வாய் மேட்டில்

ஒரு குறுக்கிட்ட இரேகை இரண்டு கிளைகளோடு பதிந்து அடைந்து இருந்தால் என்ன ஏற்படும்?




ஆசிரியர்: தம்பி! செவ்வாய் மேட்டில் ஒரு குறுக்கிட்ட ரேகை இரண்டு கிளைகளோடு ஆழமாய் பதிந்து இருந்தால் பல கெட்ட செய்கையாலும்சரியாக உடலை கவனியாததாலும் பல அலைச்சல்களாலும் மது வகைகளாலும் புகை வரக்கூடிய லாகிரிவஸ்துக்களாலு த இருதய சம்பந்தமான வியாதிகள் வந்து குடும்பத்தை சரியாக நடத்த முடியாமலும் அதன்மூலம் மனவேதனை அடைந்து சீக்கிரம் மரணத்தை தேடிக்கொள்ளுவர் என்று சொல்லப்படுகிறது. குறிப்பாக இப்படிபட்டவர்கள் தெய்வத்தை சரியாக வணங்கமாட்டார்கள் என்றும் வற்புறுத்தி கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! செவ்வாய் மேட்டில் ஒரு புள்ளி இருந்தால் அதனல் உண்டாகும் நல்லவை யாவை? கெட்டவை யாவை? என்பதை கூறுங்கள்,

ஆசிரியர்: தம்பி! செவ்வாய் மேட்டில் ஒருபுள்ளி உண்டாகி இருந்தால் இவர் செய்யக் கூடிய தொழில் முயற்சிகளினால் நஷ்டம் ஏற்பட்டு அதன் மூலம் சண்டைச்சச்சரவுகள் உண்டாகி உடலின் பலபாகங்களின் வடுக்கள் உண்டாகக்கூடு மென்றும் பெண்கள் மூலம்பல வியாதிகள் உண்டாகி உடல் நலம் கெடக் கூடுமென்றும், இனபந்துக்களால் பல இன்னல்களும் சுற்றத்தார் மூலம் சுகம் இல்லாத வாழ்க்கையும்

மனைவி மக்களால் அடிக்கடி சண்டை சச்சரவுகளும் வெளி இடங்களில் பெரிய நட்டமும் அதன்மூலம் மனக்கசப்பும், சரியாக உடலை வைக்காத காரணத்தால் பலவியாதிகளும் குறைவான தெய்வீக பக்தி உள்ளவராகவும் மதத்தையும் அதை சார்ந்தவர்களையும் மதிக்காதவராயும் தன் வயதுக்கு மூத்தபெரியோரைக் கண்டால் கீழ்ப்படியாதவராயும். இவர்செய்யும் காரியங்கள் பிடிக்காமல் அதன்மூலம், நண்பர்களுக்கும் இவருக்கும் சண்டைகள் உண்டாகி இவர் உடம்பில் பலகாயங்கள் உண்டாகக் கூடும் என்றும் இன்னும் சொல்லமுடியாத வேதனைக்கு ஆளாக்கப்பட்டு சொற்பகாலமே இவ்வுலகில் வாழ்க்கை நடத்தக் கூடுமென்றும் சொல்லப்படுகிறது எதுக்கும் இருக்கும் வரைக்கும் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொண்டால் நல்லது என்றும் நினைக்கப்படுகிறது.



மாணவன்: ஐயா! ஒரு கிராஸ் கோடானது, செவ்வாய் மேட்டில் இருந்தால் இதனால் அடையும் நன்மைகள் தீமைகள் யாவை?

ஆசிரியர்: தமிபி! செவ்வாய் மேட்டில் ஒரு கிராஸ் குறி இருந்தால் தான் செய்யும் வியாபார தொழிலையும் உத்தியோக முறையையும், பெண்கள் மூலம் தான் நினைத்தது நடக்கவில்லையே என்று நினைப்பவராயும்மனைவிமக்களை துன்பப்படுத்துபவராயும் இன்னும் இவர் எக்காரியமும் செய்தாலும் பிடிவாதம் உள்ளவராகவும் இருப்பார். இதனால் இஷ்டபந்துக்களின் தூற்றுதலும் கொடுக்கல் வாங்குதலில் தகராறுகளும் கடவுளை திட்டுவதால் அதைச்சார்ந்து இருக்கும் மக்களுடன் மனஸ்தாபமும், அதன் மூலம்

இவரின் உடலுக்கு பல இன்னல்களும் வீண் அலைச் சலால் பலபொருள்கள் இழக்கக்கூடும். அதன்மூலம் நண்பர்களின் மனக்கசப்பும், இதனால் சண்டையும் சச்சரவும் உண்டாகக்கூடும்.




மாணவன்; ஐயா? செவ்வாய் மேட்டில் கம்பீரமான ஒருநட்சத்திரக் குறி காணப்பட்டால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் யாவை?

ஆசிரியர்: தம்பி! கம்பீரமான செவ்வாய் மேட்டில் ஒரு நட்சத்திரக் குறி காணப்பட்டால் இவர் நண்பர் களிடமும் இனபந்துக்களிடமும் தன்னைக்காட்டிலும் கல்வி அறிவு உள்ளவர்களிடமும் மிகவும் கொடூரமாக நடந்து கொள்ளுவார், மேலும் அடுத்தவர்கள் தொழில் முறையிலேயோ அல்லது வியாபாரமுறையிலேயோ அல்லது உத்தியோக முறையிலேயோ முன்னேற்றம் கண்டு இருந்தால் தனக்கு கிடைக்கவில்லையே என்று பொருமை கொள்ளக்கூடும் என்று கூறப்படுகிறது மேலும்இந்த நபர் இவைகள் எல்லாம் நமக்கே ஆகவேண்டும் என்று நினைத்து கொலையும் கொள்ளையும் செய்யக் கூடும்,




மாணவன்: ஐயா! தாங்கள் இதுவரைக்கும் சொன்ன விளக்கத்தின் தன்மையை உற்று நோக்கினேன். அடுத்து சதுரக்குறி செவ்வாய் மேட்டில் காணப்பட்டால் கிடைக்கக்கூடிய வழிவகைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! செவ்வாய் மேட்டில் சதுரக்குறி இருந்தால் அவர்

தன் சுய அறிவாலும், தான்செய்யக்கூடிய தொழில் முறைகளிலும் வியாபார வகைகளிலும் உத்தியோக முறைகளிலும் ஒருவாறு முன்னேற்றம் காணக்கூடும் பெண்கள் மூலம் வருவாயும் சுற்றத்தார் மூலம்போதிய வருமானமும் மனைவிமக்கள் மூலம் சந்தோஷமும் மதத்தில் அதிககவனமும் செலுத்துவர் தன் நல்ல செய்கையால் இவ்வுலகில் நீண்டகாலம் வாழ்க்கை என்ற வண்டியை ஓட்டுவார் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! செவ்வாய் மேட்டில், வட்டவளையமான இரேகைக்குறி கண்டு உள்ளவர்களுக்கு எந்த விதத்தில் பலன்களைக் கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! நாம் நினைப்பதுபோல் சொல்லக்கூடாது. அவர்களுக்கு ரேகைக்குறிகள் எப்படி அமையப்பெற்று இருக்கிறதோ அப்படியே சொல்ல வேண்டும் அதாவது அனுசரித்து சொல்ல வேண்டும். சரி, இனி கேள்விக்கு வருவோம் வட்ட வளையமான ரேகைக்குறி செவ்வாய் மேட்டில் கண்டு இருந்தால் தான் செய்யும் தொழில் முறைகளிலும் வியாபார முறைகளிலும் உத்திரயோகமுறைகளிலும் நஷ்டம் ஏற்படக்கூடும் என்றும் இன்னும் பெண்கள் மூலம் பல இன்னல்களும் அயல்ஊர் பிரயாணத்தால் எதிர்பாராத ஆபத்தும்நண்பர்கள்மூலம்பலதொல்லைகளும் தான் சார்ந்து இருக்கும் கட்சியோ அல்லது மதமோ இவைகளால் உயிருக்கு உலைவைக்கும் செய்கைகளும் நடக்கும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! செவ்வாய் மேட்டில் முக்கோணக்குறி கண்டு இருந்தால், அவைகள் மூலம் கிட்டக் கூடியது நல்லவையா? அல்லதுகெட்டவையா?

ஆசிரியர்: தம்பி! முக்கோண குறி செவ்வாய் மேட்டில் உள்ளவர்கள் தன் திறமையாலும் உடல்நலத்தாலும் பெரியோர்களின் ஆசிர்வாதத்தாலும் நல்ல எண்ணத்தாலும் ஒரு உத்தியோகத்தில் அமருவார். அதன்பின் தன் சாமார்த்தியத்தால் படிப்படியாக உயர்ந்து பலபேர்கள் ஆச்சரியப்படக்கூடிய உயர்ந்த பதவியை வகிக்ககூடும் தன் மனைவி மக்களை மிக அக்கரையோடு ஆதரிப்பார் இன்னும் இனபந்துக்களில் உயர்ந்தவராக கருதப்படுவார் வீண்விரயம் செய்ய மாட்டார் எதையும்தன் நேர்மை என்ற கண்ணோடு கவனிப்பார். ஆண்டவன் அருளால் ஆயுள்காலம் நீடித்து இவ்வுலகில் பலஇன்பங்கள் அடையக்கூடும் என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! தெள்ளம் தெளிவாக விடை கூறினீர்கள் மிக்க சந்தோஷப்படுகிறேன், இனி அடுத்த கேள்விக்கு விடை கூறுங்கள் வலைக்குறி செவ்வாய் மேட்டில் கண்டு இருந்தால் அதனால் அடையும் நன்மைகள் தீமைகள் எவை என்பதை எடுத்துக் கூறுங்கள்.

ஆசிரியர்: தம்பி! நான் என்ன தமிழ் புலவனா சர்வசாதாரணமானவன் தானே அதைப் பற்றி நீ ஏனப்பா புகழவேண்டும்; சரி, வினாவுக்கு

விடை யளிக்கிறேன், நன்ருக கேட்டுவா. இப்படி உள்ளவர்கள், பெண்கள் மூலம் இன்பம் கிடைக்கவில்லையே என்றும் வீண் ஆலேச்சலால் பலதொல்லைகளுக்கும், கட்சி சம்மந்தமாக பலதொல்லைகளும் நான்தான் பெரியவன் என்றமனப்பான்மைகொண்டவராகவும் இக்காரியங்கள் மூலம் கொலை பாதங்களுக்கு அஞ்சமாட்டார்கள் என்று கூறப்படுகிறது.




மாணவன் : ஐயா! சுக்கிரமேட்டில் இரண்டு அல்லது மூன்று நீண்ட ரேகைகள், கட்டைவிரலின் இரண்டாவது அங்குலாஸ்திக்கருகில் காணப்பட்டால் அதனுல் கிடைக்கக் கூடிய பலாபலன்கள்யாது? என்பவை தகூறுங்கள்.

ஆசிரியர்: தம்பி! இப்படி ரேகைகள் உள்ளவர்கள்தான் செய்யக்கூடிய தொழில்கள் மீதுநம்பிக்கையற்றவர்களாகவும் பெண்கள் மீது கவனக்குறைவுஉள்ளவராகவும், இனபந்துக்களிடம் கோபமாக நடந்துகொள்பராகவும், தனக்கு உதவி செய்தவர்களை நன்றிமறந்த நயவஞ்சகனுக இருப்பார். கடவுள் பக்தி குறைவுள்ளவராகத்தான் காணப்படுவார்.

மாணவர் : ஐயா! சுக்கிர மேட்டில் குறுக்குட்ட ரேகைகள் அழுத்தமாக பதிந்திருந்தால். இவருக்கு கிடைக்கக் கூடிய நன்மைதின்மைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! நான் சொல்லும் கேள்வியின் பதிலை நன்ருக கேட்டு அதன்படி இக்கலையை கற்றுக்கொள் குறுக்கிட்ட ரேகைகள் அழுத்தமாகப் பதிந்திருந்தால் இவர்

செய்யும் உத்தியோக முறைகளிலும் வெளி நாட்டு வியாபார முறைகளிலும் மனவேதனைப்படக் கூடிய நஷ்டங்களும், வீண் அலைச்சலால் அதிக பணம் நஷ்டமும் நண்பர்களின் துவேஷமும் கடவுள் பக்தி சுமாராக உள்ளவராகவும் இருப்பார் அழுத்தமாக அதாவது பள்ளமாக இரேகைகள் இருந்தால் தன் வாழ்க்கைக்கு முக்கியமாக வேண்டிய மனைவியையோ அல்லது பொருளையோ இழக்கக்கூடும் இப்படி ஏற்பட்டவுடன், இவர் மனது சொல்ல முடியாத வேதனைக்கு, உட்பட்டு முன்னைக் காட்டிலும் கஷ்டப்படக்கூடும், என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! நீங்கள் சொல்லுவதைப்போலவே தான் மிக கவனமாக கேட்டு வருகிறேன். அடுத்தகேள்வியைக்கூறுகிறேன். சுக்கிர மேட்டில் வலைக்குறிகண்டுஇருந்தாலும் இதனால் அடையக்கூடிய வழிவகைகள் யாவை சுக்கிரமேடு கடினமாக இருந்தால் அதனால் ஏற்படக்கூடிய நல்லது கெட்டது எவைகள்?

ஆசிரியர்: தம்பி! சுக்கிரமேட்டில் வலைக்குறி கண்டு இருந்தால்இவர்தான் செய்யக்கூட்டிதொழில் வகைகளில் தனக்கே அதிகலாபம் கிடைக்க வேண்டும் என்ற எண்ணமும் அடுத்தவர்கள் அழகுள்ள பெண்களை திருமணம் செய்து இருந்தால் அதைக் கண்டு ஆசைபடக் கூடியவராகவும் தன் மனைவி அழகு இல்லாததை கண்டு அவளை துன்பப்படுத்தக் கூடியவராகவும், இனமக்களிடம் எப்பொழுதும் சண்டை சச்சரவுகள் செய்து கொண்டு இருக்ககூடியவராகவும் இருப்பார் வீண் செலவுகள் செய்துவிட்டு பின் வருந்த கூடியவராகவும் அரசியல் காரியங்களில்

தலையிட்டு அதன்மூலம் தோல்வி யடையக்கூடியவ ராகவும் இருப்பார் மேலும் தான் சார்ந்து இருக்கும் கட்சியோ அல்லது மதமோ பெரிதென பேசுவார். ஆ.வே இப்படிப்பட்டவர்களை சுயநலவாதி என்று கூறலாம், தெய்வீகத் தன்மை சிறிதளவு உண்டு. இரண்டாவதாக சுக்கிரமேடு கடினமாக இருந்தால், எல்லாச்செல்வத்துக்கும் தானே அதிபதி ஆகவேண்டும் என்ற எண்ணமும் தன்னைக்காட்டிலும் அடுத்தவர்கள் முன்னுக்கு வரக்கூடாது என்ற நினைப்பும் தன்மனைவிமக்களை தூற்றக்கூடியவராகவும் இருப்பார் என்றும் நோய் நொடிகள் வரக்கூடும் என்றும் கூறப்படுகறது.




மாணவன்: ஐயா! சுக்கிர மேட்டில் பட்டுப்படாத புள்ளி காணப்பட்டால் அதனுல் அடையக் கூடியது இன்பமா? அல்லது துன்பமா? இரண்டாவதாக சுக்கிர மேட்டில் கறுப்பு புள்ளி காணப்பட்டால் அது எதைக்குறிக்கும்?

ஆசிரியர்: தம்பி! இக்கேள்வியைக்கேட்ட உனக்கு வெட்கமும் வேதனையும் வரக்கூடும்! அதைப்பற்றி நாம் கவலை படக்கூடாது, உள்ளதை ஒளிக்காமல் கூறவேண்டும் பட்டும் படாதபுள்ளி சுக்கிர மேட்டில் கண்டு இருந்தால் பல ஆண்டு காலமாக தான் நினைத்து வந்த அன்புக்காதலி தனக்கு கிடைக்கவில்லையே என்ற ஏக்கமும், இந்த ஏக்கத்தின் மூலம் மனவேதனைப்பட்டு தன் தொழில் வகைகளையும் உத்தியோக வகைகளையும் வியாபாரவகைகளையும் இழக்கக்கூடும், இதைப் பார்த்த இன பந்துக்கள் இகழ்ந்து பேசக்கூடும் நன்

பர்கள் நட்பை உடைத்துக் கொள்ளுவார்கள். இவர் ஈடுபட்டு இருக்கும் கட்சிக்கு தோல்வி ஏற்பட்டால் அதனுல் அவமானம் ஏற்படும். இக்காரணங்களால் இவர் உடலை சரியாக வைத்துக்கொள்ளாத காரணத்தால் பல வியாதிகளுக்கு ஆளாகுவார்.

இன்னும் இச்சுக்கிரமேட்டில் கறுப்பு புள்ளிஉண்டாகி இருந்தால் இவர்பெண்கள் மூலம் பலவியாதிகளுக்கும், குடி அதாவது கள் சாராயம் இன்னும் புகை சம்மந்தமான பீடி சிகரெட்டு சுருட்டு முதலியவைகளாலும், இருதய சம்மந்தமான நோய் நொடிகள் உண்டாகக்கூடும் தன் இல்வாழ்க்கை சரிவர நடத்த முடியாதவராகவும் கடவுள்பக்தி குறைந்தவராகவும் அதன்மூலம் சொற்பஆயுள் உள்ள ஆசாமியாகவும் இருக்கக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டில் ஒற்றைக் கிராஸ்காணப்பட்டால்இதனுல் கிடைக்கக்கூடிய நன்மை? தீமைகள் யாவை

ஆசிரியர்: தம்பி! உற்று கவனிக்குப்படி கேட்டுக் கொள்ளுகிறேன் ஒற்றைக்கிராஸ்சுக்கிரமேட்டில் கண்டு இருப்பவர்களுக்கு நேர்மையை கைக் கொள்ளவேண்டும் என்ற எண்ணமும் தன்னை அடுத்தவர்கள் இவர் நல்லவர் என்று சொல்ல வேண்டும் என்ற நினைப்பும் தன்னை தேடிவந்தவர்கள் தன்னுல் இயன்ற உதவியும் அடுத்தவர்கள் பொருளின் மீது ஆசை கொள்ளாதவராகவும், ஆண்டவன் கொடுத்தது போதும் என்ற நினைப்பும் தன் நல்ல நடத்தையால் தேகத்தை நன்ருக வைத்துக் கொள்பவராயும் அதன்மூலம் நீண்டகாலம் இவ்வுலகின் இன்பதுன்பங்களை அனுபவிக்கும் நபராக காட்சியளிப்பார் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! மத்தியில் ஒரு நக்ஷத்திரக் குறிசுக்கிர மேட்டில்காணப்பட்டால் இந்த நபர்களுக்கு எவ்வகையில்பலா பலன்களை கூறவேண்டும்?




ஆசிரியர்: தம்பி! சுக்கிர மேட்டில் ஒருநட்சத்திரக்குறி உள்ளவர்கள் தன் விவசாயத் தொழிலையோவியாபாரத் தொழிலையோ அல்லது உத்தியோக முறையையோ தன் உயிருக்கு உயிர் நண்பர்களின் நல்ல எண்ணத்தால் நடத்தி வருவார். இன்னும் நண்பர்களால் அரசியல் மேதைகள் அறிமுகமாகக்கூடும். இன்னும் நண்பர்களால் வெளி நாட்டு வியாபாரம் நல்ல வருமானம் கொடுக்கக்கூடும் இவைகள் மூலம் தன்மனைவி மக்கள் சந்தோஷமாக இருக்கக் கூடும் ஆனல் எதிர்பாராத விதமாக இவர் நண்பர்கள் எவராவது இறக்கக்கூடும் அதைக்கேட்ட இவர் சொல்ல முடியா வேதனைக்கு உட்படடு உடல்நலம் குறைபக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன் : ஐயா! சுக்கிர மேட்டில் இரண்டாம் அங்குலாஸ்திக் கருகில் ஒரு நக்ஷத்திரக்குறி இருந்தால் இதனல் ஏற்படும் வழி வகைகள் யாவை மேலும் அச் சுக்கிரமேட்டில் ஒரு பெண்ணுக்கு இரண்டாம் அங்குலாஸ்தி இணைப்பில் இரட்டைச்சிறு ரேகைகள் மற்றொரு ரேகையால் குறுக்கிட்டு இருந்தால் இதனல் அடையக்கூடிய பலாபலன்களைக் கூறுங்கள்?




ஆசிரியர்: தம்பி ஒரு நட்சத்திரக்குறி இரண்டாம் அங்குலாஸ்திக் கருகில் சுக்கிரமேட்டில் இருந்தால் தன் மனைவியைப்பற்றி இனபந்துக்கள்

அவன் நடத்தை கெட்டவன் என்று சொல்லக்கூடிய சொற்களை தன்காதால் கேட்பது ஒருசில பணம் படைத்தவர்கள் தன்மனைவியைப் பரிகாசம் செய்வதை தன் கண்ணால் பார்ப்பது மேலும் தன் மனைவி, நோய் நொடிகளால் கஷ்டப்பட்டு அதன்மூலம் பல பண நஷ்டம் ஏற்படுவது சதாகவலையோடு இருக்கும் மனைவின் மேல்கோபம் கொள்வது இக்காரணங்களால் இல்வாழ்க்கை துன்பமாக கூறுதிவரைக்கும்முடியும் என்று கூறப்பட்டுள்ளது. இரண்டாவதாக ஒரு பெண்ணுக்கு இரண்டாம் அங்குலாஸ்தி இணைப்பில் இரண்டு சிறு ரேகைகள் மற்றொரு ரேகைக் குறியால் குறுக்கிட்டு இருந்தால் தொழில் வகைகளிலும் உத்தியோக முறைகளிலும் வெளிநாட்டு வியாபாரத்தால் அதிகவருமானமும் அரசியல் காரியங்கள் பட்டம் பதவிகளும் இனபந்துக்களின் அன்பும் நண்பர்களின் நட்பும் கடவுள் பக்தியும்பார்த்தவர்கள்பண்பு உள்ளவர் என்று சொல்லக்கூடிய அந்த அன்புக்கணவன் மனைவியை விட்டு பிரிந்து விடுவார் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! எனது கேள்விக்கு பதில் கேட்க கேட்க இனிமையாக இருக்கிறது ஆகையால் அடுத்த கேள்வியைக் கூறுகிறேன் பதில் தாருங்கள் ஒரு நட்சத்திரக் குறி சுக்கிர மேட்டின் அடிவாரத்தில் காணப்பட்டால் அவர்களுக்கு எவ் விதத்தில் பதில் கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! நம்முடைய தாய் மொழியாகிய தமிழ் உலக மொழிகளுக் கெல்லாம் முதன்மையானது ஆகையால் தான் இனியாக இருக்கிறது என்று எண்ணுகிறேன் சரி பதில் கூறுகிறேன் கவனமாகக் கேட்

டுத் தெரிந்துகொள் அடுத்தவர்கள் பார்த்து ஆ
யம் படத்தக்க வெளிநாட்டு பிரயாணத்தால் அ
வருமானமும் அரசியல் சம்மந்தமான காரியங்கள
மதிப்பும் இனமக்களின் இன்பமான பேச்சுக்ச
மதத்தில் அதிக பற்றும் அதிக தெய்வீக பக்தி
உடையவராக இருப்பார் ஆனால் ஒரு பெண்ண
சேர்க்கையால் மேற்கண்ட செல்வங்கள் எல்ல
சென்று விடக்கூடும் அதனால் பார்த்தவர்கள்
ரை பரிகாசம் செய்வார்கள் என்று சுக்கிர மேட்ட
அடிவாரத்தில் உள்ள ஒரு நட்சத்திரக்குறி குறி
றது. ஆனால் பெண்கள் சேர்க்கையில்லாமல் இ
தால் செல்வங்கள் யாவும் இருக்கும் பார்த்தவர்
மதிப்பும் கொடுப்பார்கள் தெய்வீக தன்மையும் வ
கூடும் என்று மேலும் வற்புறுத்தி கூறப்படுகிறது




மாணவன்: ஐயா! சுக்கிர மே
டின் அடிவாரத்தில் ஒரு நட்சத்தி
குறியும் புத்திரேகை சந்திர மேட்ட
நீண்டு தொங்கி இருந்தாலும் இ
களால் ஏற்படக்கூடிய நன்மை
தீமைகள் எவை? என்பதை
கூறுங்கள்,

ஆசிரியர்: தம்பி! புத்திரே
சந்திர மேட்டில், நீண்டு தொங்கியிருந்தாலும் சுக்
மேட்டின் அடிவாரத்தில் ஒரு நட்சத்திரக்குறியும் க
டுள்ளவர்கள் சிந்தனை இல்லாமல் விவசாயம் உத்தியே
கம், வியாபாரம் முதலியவைகள் செய்வது ஆ
அதில் நஷ்டம் ஏற்படுவது காரணங்கள் இல்லாம
இளம் பெண்களிடம் பேசுவது அதனால் பல இன்
களுக்கு ஆளாவது பெரியோர்கள் சொல்வதை கே
காமல் இருப்பது இதன் மூலம் பல தொல்லை

உண்டாகுவது மனைவி மக்களை சரிவர கவனிக்காமல் இருப்பது பல வியாதிகளால் வேதனைப்படுவது. அதைப் போக்க பணத்தை பலவாறாக செலவுசெய்வது இன்னும் குடிவகைகளாலும்பல பணம் காலியாவது. தெய்வத்தை சரிவர வணங்குவதில்லை. ஆகையால் இவர் தன் சுயபுத்திஇல்லாதகாரணத்தால் தன் இல் வாழ்வை பாழ்படுத்திக் கொண்டவராக கருதப்படுவார் என்று தெரியவருகிறது.




மாணவன் : ஐயா! சுக்கிர மேட்டில் வட்டக்குறி கண்டு இருந்தால் இதனால் ஏற்படக்கூடிய நன்மைகள்? தீமைகள் எவை என்பதைக் கூறுங்கள்,

ஆசிரியர்: தம்பி! வட்டக்குறி சுக்கிர மேட்டில் கண்டு இருந்தால் இவர்பெண்கள் விஷயத்தாலும் பலலாகிரி வஸ்துக்களாலும் குடிபோதைகளாலும் கெட்ட நண்பர்களின் சேர்க்கையாலும் தேகநலம் குன்றி பலவிதநோய்களுக்கு ஆளாக்கப்பட்டு அதன் மூலம் தன் செல்வத்தை இழந்து, பார்த்தவர்கள் கேலி பேசிக்கூடிய நிலைமையில் இருப்பார்கள் என்று தெரிய வருகிறது.

## புதன் ரேகை

மாணவன்: ஐயா! புதன்ரேகை என்றால் என்ன? இதனால் ஏற்படக்கூடிய பலாபலன்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! சந்திர மேட்டிலிருந்து, சுண்டு விரலுக்கு அடியில், உள்ள மேட்டை நோக்கிச் சென்று இருக்கும் ரேகைக்கு புதன் ரேகை எனப்படும். புதன் ரேகையால், தேக நலமும், நல்ல ஜீரண சக்தி உடையவராகவும் இருப்பார். ஞாபசக்தியுடையவராகவும் செல்வம் உள்ளவராகவும் இருப்பார் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புதன் ரேகை பின்னப்பட்டுத்துண்டு, துண்டாய் அமைப் பெற்றவர்களின் தன்மையாது?




ஆசிரியர் : தம்பி! புதன் ரேகை பின்னப்பட்டு, துண்டு துண்டாய் அமையப் பெற்றவர்கள், புத்திக்குறைவால். செய்யும், தொழில் வகைகளிலும், வியாபார வகைகளிலும், உத்தியோக முறைகளிலும் நஷ்டங்களும் கஷ்டங்களும் ஏற்படக் கூடும்.




மாணவன்: ஐயா ! புதன் ரேகை அகன்று, பள்ளமாக இருந்தால், அதனுல் ஏற்படக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகை அகன்று, பள்ளமாக உள்ளவர்கள், தைரியமில்லாதவர்களாகவும், செய்யும் எவ்வேலைகளிலும் கவனம் இல்லாதவராகவும்சதாகவலை கொண்டவராக

வும். அதன் மூலம் குடும்பத்தில் சந்தோஷம் இல்லா தவராகவும் வாழக்கூடும்.



மாணவன் : புதன் ரேகையும், ஆயுள் ரேகையும் சேர்ந்து இருந்தால் அவைகளால் ஏற்படுவது யாது?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகையும் ஆயுள் ரேகையும் சேர்ந்து, காணப்படும் நபர்கள், நண்பர்களாலும், பெண்கள் சேர்க்கையாலும் குடிபோதையாலும், பலவித (கடுமையான) நோய்களுக்கு உள்பட்டவராக இருக்கக் கூடும் இதனல் வீண்சச்சரவுகள் குடும்பத்தில் உண்டாகக் கூடும் என்று கூறப்படுகிறது.



மாணவன் ஐயா! புதன் ரேகை வளைந்து வளைந்து இருந்தால் ஏற்படக் கூடிய நன்மைகள் தீமைகள்யாது?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகை வளைந்து வளைந்து அமையப் பெற்றவர்கள் பித்தம் சம்மந்தமான பொருள் வகைகளை, உட்கொள்ளுவதால், பித்த ஜுரம்,மலேரியா மஞ்சக்காமாலை முதலிய நோய்கள் உண்டாகி சொல்லமுடியாத மனவேதனைப்படுவார்கள் என்றுகூறப்படுகிறது



மாணவன்: ஐயா; புதன் ரேகை ஒரே அளவில் சிறுத்தும் பெருத்தும் இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகை ஒரே அளவில், சிறுத்தும் பெருத்தும் அமையப்பெற்றவர்கள்தேகம்நன்ருக இருந்து கொண்டே வரும், ஆனல் திடீரென்று ஜீரணக்குறைவு உண்

டாகி, பலதொந்தரவுகள் உண்டாகும், அதன்மூலம் குடும்பத்தில் சந்தோஷம் இராது, என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! புதன் ரேகை, ஏணி போலப்படிப்படியாய் இருந்தால் ஏற்படும் நன்மை, தீமைகள் எவை?

ஆசிரியர்: ஐயா! புதன் ரேகை ஏணி போல் படிப்படியாய் உள்ளவர்கள், மர்மசம்மந்தமான வியாதிகளால் கஷ்டப்படக்கூடும் அதன் மூலம் பசி இல்லாத்தன்மை, வாத சுரம் முதலியவைகளால்செல்ல முடியாத தொல்லைகள் ஏற்படக் கூடும் என்று தெரிகிறது.




மாணவன்: ஐயா! புதன் ரேகையில் குறுக்கிட்ட ரேகை அழுத்தமாக இருந்தால் அதன்மூலம் கிடைக்கக் கூடிய பலாபலன்கள்? எவை?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகையில் குறுக்கிட்ட ரேகை அழுத்தமாக உள்ளவர்கள், செய்யும் வேலைகளில் நஷ்டங்களும் ஏற்படக்கூடும் அதன் மூலம் குடும்பத்தில், சண்டையும், சச்சரவும் உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! புதன் ரேகையின் கிளை. குருமேட்டை நோக்கிச்சென்று இருந்தால் அதன் மூலம் கிட்டக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகையின் கிளை, குருமேட்டை நோக்கிச் சென்று இருக்கும் நபர், தன்பேச்சு திறமையால் சிநேகிதர்களையும், மற்றவர்களையும், மடக்கி விடுவார், இதன் மூலம்,

இவர் தன்னை கௌரவப்படுத்திக் கொண்டு அதன் மூலம், பொன்னும், பொருளும், பெயரும் தேடக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! புதன்ரேகையின் கிளை, புத்தி ரேகையோடு சென்று இருந்தால் அதன் மூலம் கிட்டக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்; தம்பி! புதன் ரேகையின் கிளை. புத்தி ரேகையோடு சென்று இருக்கும் நபர் மனதைரியம் உள்ளவர்கள் கலைகளில், தன் கல்வியால் முன்னுக்கு வரமுடியும். பார்த்தவர்கள், இவரைக்கண்டு பணிவன்போடு நடந்து கொள்ளுவார்கள். தன்னுடைய குடும்பத்தை நன்ருக நடத்திக் கொள்ளுவார் என்று தெரிகிறது.

தெய்வீக பக்தி அதிகம் உண்டு இரக்கத்தன்மை அதிகம் உண்டு இவருக்கும்வயதில் மூத்தவர்களை கண்டால், மரியாதையாக நடந்து கொள்ளுவார். தேக நலத்தால், இவ்வுலகில் நீண்ட ஆயுள்காலம் உள்ளவராக வாழக்கூடும்.

## விதி ரேகை




மாணவன்: ஐயா! விதி ரேகை என்ருல் யாது? அது எப்படி அமைந்து இருக்கும் என்பதை எடுத்துக் கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகையின் இறுதியிலும், சந்திரமேட்டினின்றும் உற்பத்தியாகிறது இந்த ரேகை சனிமேடு வரை, அல்லது, அறை குறைவாகவும் அமையப் பெற்று: இருக்கும் இதனுல்தான் இந்த ரேகையை' விதிரேகை என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகை ஆயுள் ரேகைக்குறியுடன் சுக்கிர மேட்டிலிருந்து உற்பத்தியாகி, சனி மேடு வரைச் சென்று இருந்தால் இவைகளால் ஏற்படக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகை, ஆயுள் ரேகைக்குள்ளீடான, சுக்கிர மேட்டிலிருந்து. உற்பத்தியாகி சனி மேடு வரைச் சென்று இருக்கும் சாதகருக்கு, இன பந்துக்களாலும், நண்பர்களாலும் சிறந்த செல்வத்துக்கு. ஆளாகி, சிறந்தபெயர் பெற்றவராக வாழக் கூடும் என்று கூறப்படுகிறது. ஆயுள்காலம் சுமாராக உண்டு.




மாணவன்: ஐயா! விதிரேகை கையில் மத்தியிலிருந்துஉற்பத்தியாகி சனிமேடு வரை சென்று இருந்தால் அதனுல் ஏற்படக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகை மத்தியில் உண்டாகி சனிமேடு வரை சென்று இருக்கும் நபர் தன் சொந்த அறிவால். அடுத்தவர்கள் கண்டு ஆச்சரியப்படத்தக்கநிலேமையில்,எல்லாவகையிலும் முன்னேறி வாழ்க்கை நல்லபடி நடத்துவார்,




அதன்றி விதிரேகை மெல்லியதாக உள்ளவர்கள். தொழில் துறையிலும் வியாபார வகையிலும் உத்தியோக முறைகளிலும் அதிகலாபம் தேடுவார்கள், தன்திறமையால் எக்காரியங்களேயும் சுலபமாக சாதித்துக் கொள்ளுவார்கள்தங்களுடைய வாழ்க்கை மிகவும் நல்லபடி பாது காத்துக்கொள்ளு

வார்கள். இதைப்பார்த்தவர்கள், இவ ரைப்போல் நாமும் இருக்க வேண்டும். என்று எண் ணுவார்கள் தேகநலத்தாலும், தெய்வீகபக்தியாலும் இவ்வுலகில் நீண்டகாலம் வாழக்கூடும். விதிரேகை தடித்து இருந்தால் தான் செய்யும் சகலதொழில் வகைகளும், நஷ்டம் ஏற்படக்கூடும். இனபந்துக்களா லும், நண்பர்களாலும் வெறுக்கப்படுவார். குடும்பத் தில், அடிக்கடி சண்டையும் சச்சரவும், உண்டாகக் கூடும். இதனால் நிம்மதி கிடையாது வாழ்க்கையில் என்று கூறலாம், விதிரேகையில், துண்டுபட்டு, புள்ளி கிராஸ், சங்கிலி முதலியவைகள் கண்டு உள்ளவர்கள் இவர் செய்யும் தொழில்முறையில் எதிர்பாராத நஷ் டங்களும், உற்றார், பெற்றோர் யாவரையும் வெறுக்கக் கூடியவராகவும், மனவேதனை அதிகம் உள்ளவராக வும் இருப்பார் என்று சொல்லப்படுகிறது.

விதிரேகை எந்த நிறமாக இருக்கிறதோ, அவ்வ ளவு ரத்த ஓட்டத்தை கவனிக்கவேண்டியது அவசிய மில்லை என்று. சொல்லப்படுகிறது. மேற்கண்டவருக்கு சாஸ்திரம் சொல்லக் கூடியவர்கள், கூட்டியும், குறைத்தும், காலநிலையை அனுசரித்தும் கூறலாம் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகையில் கூற்றம் குறைகள், கண்டு இருந்தால் இவைகளால் ஏற்படும் நல்லது கெட் டது, யாவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் குற்றம், குறைகள், பலவிதமாக இருக்க கூடும் சிறுவயதில் காணப்படும் குறை கள், அனுபவிப்பதிற்கில்லை என்று லும் அவைகள் நோய் நொடிகளாக மாறி விடக்கூடும். இன்னும் பெற்றோர்களின் நிலை யையும் குறைக்கும் விதிரேகை ஆரம்பகாலத்தில் குற்

றம் உள்ளதாக இருந்தாலும், தொடர்ந்த விதிரேகை செம்மையாக இருந்தால், கஷ்டங்கள் ஏற்பட்டு, பின் சென்று விடக்கூடும் பின் காலத்தில் இப்படிபட்டவர்கள் நல்லநிலைமையில் இருப்பார்கள்என்று சொல்லப் படுகிறது



மாணவன்: ஐயா! விதிரேகையில் தீவுக்குறிக்கண்டுள்ளவர்களின் தன்மைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் தீவுக்குறிகண்டு இருக்கும் சாதகர் ஆரம்பத்தில் நல்லபடியாக இருந்தாலும் பிற்காலத்தில் சொல்லமுடியாத தொல்லைகளுக்கு ஆளாக்கப்படுவார் இவர்கள் எத்தொழில் வகைகளிலும் முன்னுக்கு வரமுடியாது என்று கூறப்படுகிறது. இன்னும் இத்தீவுக்குறி பெண்கள் கையில், கண்டு இருந்தால், நெறி, தவறிநடப்பவள் என்றும், இவளைல்யாவரும் தூற்றுவார்கள். என்றும் இதன் மூலம் மனவேதனைபடக்கூடும் என்றும் கூறப்படுகிறது.

கடைசியாக, குழந்தைகளின் கையில் தீவுக்குறி கண்டு இருந்தால் பெற்றோர்களின் செல்வநிலையை சீர்குலைக்கும் என்று கூறப்படுகிறது.



மாணவன்: விதிரேகையின் ஆரம்பத்தில், தீவும் ஆயுள் ரேகை ஆரம்பத்தில், அகன்று விரிந்து, சங்கிலி, வெட்டுகளை அல்லதுதீவு ஏதேனும் இருந்தால் ஏற்படும் நன்மைகள், தீமைகள் எவை?

ஆசிரியர்; தம்பி! விதிரேகையின் ஆரம்பத்தில் தீவும், ஆயுள்ரேகை, ஆரம்பத்தில் அகன்று விரிந்து

சங்கிலி, வெட்டு கிளை அல்லதுதீவு உள்ளவர்கள் பெண்கள் மூலமாகவும், குடிபோதைகள் மூலமாகவும் தேகநலம் கெட்டு பலவித தொல்லைகளுக்கு ஆளாக்கப்படுவார்கள், இன்னும் செய்யும் தொழில் வகையில், கவனக்குறைவால் வருமானம் குறைந்து கொண்டு வரும் இக்காரணங்கள் மனவேதனை அடைந்து, குடும்பத்தை சரிவர நடத்தமாட்டார் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகையில் தீவும், புத்திரேகையின் ஆரம்பத்தில் சிக்கலான குறிகள் இருந்தால் ஏற்படும் நன்மைகள் எவை? சுக்கிர மேட்டின் மேல் பாகத்தில் ஒரு நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடியவைகள் யாவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் தீவும் புத்திரேகையின் ஆரம்பத்தில், சிக்கலானகுறிகள் கண்டு உள்ளவர்கள் எக்காரியங்கள் மேலும் ஆசை கொள்ள முடியாத மனம் படைத்தவராகவும் தேகநலம் குன்றிக்கொண்டே வரும்பொருள் வகைகள் சீர்குலைந்து வரும் இதனால்வாழ்க்கையில் நிம்மதி கிடையாதுஇன்னும்சுக்கிர மேட்டின மேல் பாகத்தில் ஒரு நட்சத்திரக்குறி உள்ளவர்கள் சிறுவயதில் பெற்றோர்களை இழப்பார்கள். சிறுவயதில் சொல்லமுடியாத வறுமைக்கு ஆளாதுவார்கள். நல்லகாலம்வரும் பொழுது எல்லாம் நீங்கி சந்தோஷமாக இருக்கக் கூடும்.

மாணவன் : ஐயா! விதிரேகையில் குறுக்கிட்ட துண்டு ரேகைகள் இருந்தால் அதனால் உண்டாகக் கூடியவைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! விதிரேகையின் குறுக்கிட்ட துண்டு, ரேகைகள் இருந்தால் அப்படி உள்ளவர்கள் கால அளவால் நன்மை, தீமைகள் அடைவார்கள் எவ்வளவுக்கு பதிந்து காணப்படுகிறதோ அவ்வளவுக்கு கடுமையான கஷ்டங்கள் உண்டாகக் கூடும் குறுக்கிட்டதுண்டு ரேகை (மங்கலாக) மெல்லியதாக பட்டும் படாததுமாக இருந்தால், தடைகள் சென்று விடக் கூடும். இருந்தாலும் மனதுக்கு அடிக்கடி கஷ்டங்கள் ஏற்படக்கூடிய காரியங்கள் நடந்து கொண்டு இருக்கும் குறுக்கிட்ட துண்டு ரேகை விதிரேகையை இரண்டாக வெட்டுமாயின், தொழில் வகைகளுக்கு ஆபத்து வரக்கூடும். உத்தியோகம், ஏதாவது காரணத்தால் சென்று விடக்கூடும் வெட்டுபட்டு விதிரேகை இணைப் புப்பட்டால் வெகு கஷ்டத்தின் மேல் சீர்படும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! விதிரேகை துண்டு, துண்டாய் அமைந்து இருந்தால் ஏற்படுவது யாது? மேலும் விதிரேகையில், இடைவெளி பெரிதாக இருந்தால்அதனுல் உண்டாகக் கூடிய நன்மை தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! விதிரேகை துண்டு துண்டாய் உள்ளவர்கள் சகலத்திலும், சொல்லமுடியாத கஷ்டங்கள் ஏற்படுவது நன்ருக தெரியும். மேலும் விதிரேகையில் இடை வெளி பெரியதாக உள்ளவர்கள். வருமானத்தில் வருமானம் கிடைக்காமலும், செய்யும் காரியங்கள் யாவும் தோல்வியாகவும் இதனுல்மனவேதனைப்பட்டுக் கொண்டு இருப்பார், என்று சொல்லப் படுகிறது.




மாணவன்: ஐயா! துண்டுபட்டவிதி ரேகைகளின், இடைவெளியின் பக்கத்தில் ரேகை இருந்தாலும் சதுர மான இணைப்பு இருந்தாலும் ஏற் படக் கூடியவைகள் நன்மையா, தீமையா?

ஆசிரியர்; தம்பி! துண்டுபட்ட, விதி ரேகைகளின் இடைவெளியின் பக்கத்தில், ரேகைஇருந்தாலும் சதுர மான இணைப்பு உள்ளசாதகருக்கு. தான் செய்யும். எல்லாத்தொழில் முறைகளிலும் நஷ்டம் ஏற்படக் கூடும் இதனால் மனம் வேதனைப்படும் குடும்பத்தில் சந்தோஷம் இருக்காது ஆனால், மனம் தளராமல் இடைவிடாது முயற்சிசெய்தால் இவர் மறுபடியும் முன்னுக்கு வரமுடியும், ஆனால் எல்லோரும் அப்படி இருக்க முடியாது ஏதோ, ஒரு சிலபேர்கள் தான்முன் னுக்கு வரமுடியும் மற்றவர்கள் வாழ்க்கையை பாழ்ப டுத்திக் கொண்டு, இவ்வுலகில் நடமாடுவார்கள் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! விதிரேகை ஒழுங்காகவும், மெல்லிய தாகவும், தடித்தும் முடிச்சு விழுந்தும் இருந் தால், அவைகளால் உண்டாகக் கூடிய நல்லது கெட்டது யாவை?




ஆசிரியர்: தம்பி!விதிரேகை ஒழுங் காக, மெல்லியதாக சென்று இருக் கும் சாதகர் தன் கவனக்குறைவால் கால தாமதம் ஏற்பட்டு பலகஷ்டங் கள் ஏற்பட்டு மனவேதனைப்படுவார், மேலும் தடித் தும் முடிச்சு விழுந்து இருக்கும் ரேகை உள்ளவர்கள் செய்யும் காரியங்கள் எல்லாம் தடங்கள் ஏற்படக்

கூடும் சந்தோஷமாக இருக்க முடியாது என்று தெரிகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகை பாம்புபோல் வளைந்து வளைந்துஇருந்தால் ஏற்படக் கூடியவைகள் யாது?

ஆசிரியர்: தம்பி விதிரேகை பாம்பு போல வளைந்து. வளைந்து இருக்கும் சாதகர் புதிய தொழில் வகைகளில் ஈடுபடுவதைக், குறிக்கும் என்று கூறப்படுகிறது வளைந்து போகும், ரேகை மெல்லியதாகவும் தடித்து இருக்கும் சாதகருக்கு நஷ்டமும் கஷ்டமும் ஏற்படக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகையின் அடிமட்டத்தில் உற்பத்தியாக முப்பத்தைந்து அல்லது முப்பத்தாறும் வயதில் புத்திரேகையில் நின்று விடுமாயின் ஏற்படக்கூடியது யாவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகை கையின் அடிமட்டத்தில் உற்பத்தியாகி முப்பத்தைந்து அல்லது முப்பத்தாறும் வயதில் புத்திரேகையில் நின்றுவிடும் நபருக்கு மற்றவருமானங்கள் நன்று விடக்கூடும் அதிர்ஷ்டம் என்பது இவருக்கு கிடையாது இனபந்துக்களாலும், நண்பர்களாலும் மனைவி, மக்களாலும் சொல்லமுடியாத கஷ்டங்களும் நஷ்டங்களும் அடையக்கூடும் இதன்மூலம் பலவேதனை பட்டு, உடல்நலம் குன்றி பலவித வியாதிகளுக்கு உட்பட்டு அடுத்தவர்களின் தயவால் தன்குடும்ப வாழ்க்கையை நடத்துவார் தெய்வீகத் தன்மை சுமாராக உண்டு, குறைந்த ஆயுள் காலம் உள்ளவராக இவ்வுலகில் வாழக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா; விதிரேகையில் மேல்நோக்கியும் கீழ்நோக்கியும் சிறு ரேகைகள் கிளைகளாக சென்று இருந்தால் அதனால் ஏற்படும் பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் மேல் நோக்கிச்சென்று இருக்கும் கிளைகளால் செய்யக்கூடிய காரியங்கள் யாவும் வெற்றி அடையக்கூடும் தேக நலத்தையும் சுறு சுறுப்புத் தன்மையும். கொடுக்கும் கிளைகண்ட காலத்தில் மிக பெயர் பெற்றகாரியங்கள் செய்யக்கூடும், இரண்டாவதாக விதிரேகையில் கீழ்நோக்கிச் சென்றுஇருக்கும் கிளைகளால் அடிக்கடி தோல்வியும், தைரியமற்றதன்மையையும் பலவித இன்னல்களும் இடைஞ்சல்களும் ஏற்பட்டு மனவேதனை உண்டாகி குடும்பத்தில் சந்தோஷமற்ற தன்மையை எடுத்துக்காட்டும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! விதிரேகையில் குறுக்கிடும் ரேகையால் ஏற்படுவது யாது? மேலும் குருமேட்டிலுள்ள நட்சத்திரக் குறியிலிருந்து, ஒரு சந்தர்ப்பரேகை விதிரேகையை குறுக்கிட்டு சென்று இருந்தால் அதனால் ஏற்படக் கூடியவைகள் யாவை?




ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் குறுக்கிடும் ரேகையால் பலவித இன்னல்களும் இடஞ்சல்களும் இருக்கிறது. ஆனால் இதை நன்முக ஆராய்ந்து கூறும் திறமை வேண்டும். அப்பொழுது குற்றங்களை குறைத்து கூறலாம் இரண்டாவதாக குருமேட்டிலுள்ள நட்சத்திரக் குறியிலிருந்து

ஒரு சந்தர்ப்பரேகை விதிரேகையைக் குறுகிட்டு சென்று இருக்கும் சாதகர் அடுத்தவர்கள் செல்வத்தின்மேல் ஆசை கொள்ளமாட்டார் தன் செல்வம் போதும் என்று எண்ணுவார் என்று சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா! விதிரேகையைச் சுற்றி பல சந்தர்ப்ப ரேகைகள் சூழ்ந்து இருந்தால் அவைகளால் ஏற்படும் நன்மைகளும், தீமைகளும் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையைச் சுற்றி பலசந்தர்ப்ப ரேகைகள் சூழ்ந்து இருக்கும் சாதகருக்கு சகல தொழில்களிலும். வருமானம்கிட்டும் ஆனல் ஒரு சில அசம்பாவிதங்கள் ஏற்படக்கூடும் அதைக்கண்டு பயப்படக் கூடாது என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! விதி ரேகை மெல்லியதாயிருந்து செல்வாக்குரேகைகள் பதிந்து அழுத்தமாக இருந்தால் உண்டாகும் பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகை மெல்லியதாயிருந்து செல்வாக்கு ரேகைகள் பதிந்து அழுத்தமாக இருக்கும் நபருக்கு செல்வங்கள் குவியும் இதனுல் பெயரும் புகழும்கிட்டும் நோய் நொடிகள் இல்லாமல் இருப்பார் குடும்பத்தைநன்முக பாதுகாத்துக் கொள்ளுவார் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகைகள் விதிரேகையை யொட்டியேசென்று இருந்தாலும் ஏற்படும் பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்குரேகைகள் விதிரேகையை யொட்டி இருக்கும் நபருக்கு பக்கத்துணையாக இனபந்துக்கள் இருப்பார்கள் இதனால் அவர்கள் வாழ்க்கையில் தடங்கல் வந்தாலும், தைரியத்தை கைவிடாமல் எடுத்த எக்காரியங்களையும் முடித்தே திருவார்கள் குடும்பத்தில்சந்தோஷமாகவாழக்கூடுமென்றுகூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகை ஒரு கால அளவில் நின்று மற்றொரு ரேகையை தொடர்ந்து இருக்குமேயானால் உண்டாகும் பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகை ஒரு கால அளவில் நின்று மற்றொரு ரேகையை தொடர்ந்து இருக்கும் சாதகர் இடம் விட்டு இடம் செல்லக் கூடும் இதனால் குடும்பத்தில் சண்டைகளும், சச்சரவுகளும், கொடுக்கல் 'வாங்கலில் தகராறுகளும் அதன் மூலம் பல தொல்லைகளும் ஏற்படக் கூடும் என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகையில் குறுக்கிட்ட சில ரேகைகள் இருந்தால் அதனால் ஏற்படும் பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் குறுக்கிடட சில ரேகை உள்ளவர்கள், தன் சுற்றத்தார்கள் மூலம்

கிடைக்கக்கூடிய வருமானத்து மூலம் கஷ்டங்களும் நஷ்டங்களும் ஏற்படக்கூடும் இதனால் இல்வாழ்க்கையில் இன்பம் இருக்கமுடியாது என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா. விதிரேகையில் நீண்ட குறுக்கிட்டரேகைகள் இருந்தால் இதனால் உண்டாகும் நன்மைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையில் நீண்ட குறுக்கிட்ட ரேகைகள் உள்ளவர்கள் தனக்கு எவ்வளவு கஷ்டங்களும் நஷ்டங்களும். வந்தாலும் மனதை தளரவிடாமல், அவைகளை எதிர்த்து போராடி வாழ்க்கையில் வெற்றி அடைவார் தெய்வீகபக்தியும், தேசநலம் உள்ளவராகவும் இருந்திடுவர் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா. புத்தி ரேகையிலிருந்து சந்தர்ப்பரேகைகள், விதிரேகையில் குறுக்கிட்டுச் சென்று இருந்தால், அதனால் கிடைக்கும் பலாபலன்கள் எவை?

ஆசிரியர்; தம்பி! புத்திரரேகையிலிருந்து சந்தர்ப்பரேகைகள். விதிரேகையில் குறுக்கிட்டுச் சென்று இருக்கும் சாதகர் தன் அறிவில்லாத்தன்மையால் சகல தொழில் முறையும் தடங்கல் ஏற்படும் வீண் அலேச்சலால் பணநஷ்டம் ஏற்படக்கூடும், இவருக்கு சுயபுத்தி இல்லாத காரணத்தால், இவர் வாழ்க்கையில்சொல்லமுடியாத கஷ்டங்கள் ஏற்படக்கூடும் என்று சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா! இருதயரேகை யின் சந்தர்ப்ப ரேகைகள் விதிரேகை யில் குறுக்கிட்டு இருந்தால் அதனுல் ஏற்படுவது யாது?

ஆசிரியர் : தம்பி! இருதயரேகை யின் சந்தர்ப்பரேகைகள் விதிரேகை யில் குறுக்கிட்டு இருக்கும் நபருக்கு காதல் சம்மந்தமான காரியங்களால் தொழில் வகைகளும், உத்தியோக முறைகளும் வியாபார வகைகளும், தடை ஏற்படும் இன்னும கையில் உள் ள காசு வகைகள் கரையும். இத னுல் பலவித நோய் நொடிகள் உண்டாகி தேகநலம் குறையும் வீட்டில் சண்டையும் சச்சரவும் உண்டா கும் இவைகளால் கொடுக்கல் வாங்களில் தகரா று கள் ஏற்படும் மனவேதனே அதிகமாக இருக்கும், தெய்வீகத் தன்மைஉண்டு சுமாராக ஆயுள் காலம், இவரின் திறமையைப் பொருத்து இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா ! விதிரேகையி லிருந்து ஒரு கிளே குரு மேட்டை நோக்கி சென்று இருந்தால். அத னுல் உண்டாகக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையிலி ருந்து ஒரு கிளே குரு மேட்டை நோக்கி சென்று இருக்கும் நபருக்கு ஆசையின் காரணமாக தன் கௌர வத்தாலும், தன் காரியத்தை முடித்துக்கொள்ளுவார் இப்படி உள்ளவர்கள் இந்த ராஜ்யத்தின் தலைவராக வோ, அல்லது, மந்திரியாகவோ. அல்லது உயர்ந்த உத்தியோகஸ்தராகவோ, வரக்கூடும் நீண்டகால ஆயுள் உள்ளவர் என்றும் கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! விதிரேகையின் கிளை ஒன்று சூரியமேட்டை நோக்கி சென்று இருந்தால் அதனால் ஏற்படக் கூடிய நன்மை தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! விதிரேகையின் கிளை ஒன்று சூரியமேட்டை நோக்கி சென்று இருக்கும் நபர் சித்திரம்வரை தல் நாடகம் சினிமா ஆகியவைகளில் நடிப்பது அதன் மூலம் பெயரும் புகழும் ஏற்படக்கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! விதிரேகையின் கிளை ஒன்று குருமேட்டையும் மற்றொன்று சூரியமேட்டையும் நோக்கி சென்று இருந்தால் அதனால் ஏற்படும் நன்மைகள் தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! விதிரேகையின் கிளை ஒன்று சூரியமேட்டையும், மற்றொன்று குருமேட்டையும் நோக்கி சென்று இருக்கும் நபர் செல்வம் பெயர் புகழ் கீர்த்தி ஆகிய எல்லா அம்சங்களையும் கொண்டவராக வாழக்கூடும் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! விதிரேகையின் கிளை ஒன்று புதன்மேட்டை நோக்கிச் சென்று இருந்தால் அதனால் உண்டாகக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்; தம்பி! விதிரேகையின் கிளை ஒன்று புதன்மேட்டை நோக்கிச் சென்று இருக்கும் நபர் தொழில்வகைகளில் அதிக செல்வாக்கு உள்ளவராகவும், சாஸ்திர ஆராய்ச்சியில் அதிக

அக்கரை உள்ளவராகவும் இருப்பார். சிறந்த அறிவு டையவராகவும் இருப்பார் என்று கூறப்படுகிறது.

## செல்வாக்கு ரேகை




மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகைகள் என்றால் என்ன? இன்னும் செல்வாக்கு ரேகைகளின் தன்மை என்ன?

ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகையை வளைத்துக்கொண்டும், சுக்ரமேட்டில் பலரேகைகளும் இருந்தால் அவை கள் செல்வாக்கு ரேகைகள் என்று சொல்லப்படும். இந்த செல்வாக்கு ரேகைகளால் சினேகிதர்மூலம் நல்லவரும்படி வரக் கூடும், அதன் மூலமாக சந்தோஷமாக இருக்கக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! குறுக்கிடாமல் நேர்நிற்கிற ரேகைகளால் கிடைக்கக் கூடிய காரியங்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! நேர்நிற்கின்றத் தனரேகைகளாயின்சர்வ சாதாரண மானவர்களுக்கு இருக்காது பணக்கா ரர்களுக்கும் நாட்டின் அரசருக்கும் இருக்கக்கூடும் ஆகையால் இப்படி உள்ளவர்கள் மனதில் தோன்றிய எண்ணங்களை உடனே செய்து முடிக்கக்கூடும், இன் னும் இப்படி உள்ளவர்கள் தேகத்தை நன்றாக பாது காத்துக்கொண்டு இவ்வுகில் நீண்ட ஆயுள் காலம் உள்ளவராக வாழக்கூடும் என்று கூறப்படுகிறது,



மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை உண்டாகும் இடத்தில் விரிந்தும் பதிந்தும், பின்மெல்லியதாகவும் இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடியவைகள் நன்மைகளா?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை உண்டாகும் இடத்தில் விரிந்தும் பதிந்தும் பின் மெல்லியதாகவும் இருந்தால் இப்படி உள்ளவர்கள் முதலில் அதிக செல்வாக்காக இருந்தவர் என்றும், பின் அவை நாளாக நாளாக செல்வம் குறைந்து அதிகசஷ்டப்படுவதைக் குறிக்கக்கூடும் என்றும் கூறப்படுகிறதுஇன்னும் ரேகைபடர்ந்துமங்கிப்போய் இருந்தால் அதனால் பலன்கள் ஒன்றும் கிடையாது என்று கூறலாம்.



மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை உண்டாகும் இடத்திலும் கடைசியிலும் நன்ருக பதிந்தும் நடுவில் மெலிந்தும் பங்கலாய் இருந்தால் அதனுல் அடையக்கூடிய நன்மைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை உண்டாகும் இடத்திலும், கடைசியிலும் நன்ருக பதிந்தும் நடுவில் மெலிந்தும் பின் மங்கலாய் இருக்கும் நபருக்கு முதன் முதலில் உற்றநண்பர்களால் நல்லவருமானமும், பின் வருமானம் இல்லாமலும், மத்தியிலிருந்து அதிகவருமானமும் நண்பரிடம் அதிக ஆசை உள்ளவராகவும் இருப்பார் என்று சொல்லப்படுகிறது,



மாணவன்: ஐயா! ஆயுள் ரேகையை அடுத்து ஒரு சிறிய செல்வாக்கு ரேகை நட்சத்திரக்குறியுடன் இருந்தால் அவைகளால் உண்டாகக்கூடியவைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகையை அடுத்து ஒரு சிறிய செல்வாக்கு ரேகை நட்சத்திரக்குறியுடன் இருக்கும் நபர் தன் இளம் வயதில் தாய் தந்தையரை இழக்கக்கூடும். இதனால் இவர்சொல்ல முடியாத வறுமையால்வாழ்க்கையை நடத்தமுடியும் இவர் பிற்காலத்தில் தன்திறமையால் முன்னுக்கு வர முடியும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை ஆரம்பத்தில், மெல்லியதாய் பிறகு நன்றாக அமைந்து இருந்தால் அதனால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை ஆரம்பத்தில் மெல்லியதாய் பிறகு நன்றாக அமைந்து இருந்தால் இதனால் இச்சாதகர் ஒருவர்பின் ஒருவராக நண்பர்களை தேடுவார் அவர்களின் உதவியாலும், தன் திறமையாலும் முன்னுக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை குற்றம் நிறைந்துள்ளதாயிருந்து அதனருகில் செல்வாக்கான செவ்வாய் ரேகை அமைந்து இருந்தால் கிடைக்கக் கூடிய பலா பலன்கள் எவை?




ஆசிரியர்; தம்பி! ஆயுள்ரேகை குற்றம் நிறைந்துள்ளதாய் அதனருகில் செல்வாக்கான செவ்வாய்ரேகை அமையப் பெற்ற சாதகர் பலகெட்ட சேர்க்கையால் உடல்பாதிக்க கூடும் ஆனாலும் உற்ற உறவினரால் உதவி புரியக்கூடும் இதன்மூலம் இவர் முன்னுக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகை ஆரம்பத்தில் பின்னப்பட்டு அந்த அளவுக்கு சுக்கிர மேட்டில் செல்வாக்கு ரேகை படர்ந்து இருந்தால் இவைகளால் அடையக் கூடியவைகள் யாது?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகை ஆரம்பத்தில் பின்னப்பட்டு அந்த அளவுக்கு சுக்கிரமேட்டில் செல்வாக்கு ரேகை படர்ந்துஇருக்கும் சாதகர் இளவயதில்பலவித நோய்கள் கண்டு பின் இவர் தருமகாரியங்கள் செய்தால் அந்நோய்கள் சென்றுவிடக்கூடும் அதன்பின் இனபந்துக்களாலும் நண்பர்களாலும் உதவிபெறக்கூடும், இதன் மூலம் இவர் இவ்வுலகில் நல்லநிலைமையில் இருக்கக்கூடும்.

இன்னும் இச்சாதகர் அறிந்து கொள்ளவேண்டியது, சுக்கிரமேட்டிலுள்ள செல்வாக்கு ரேகைமேல் நோக்கி ஆயுள் புத்திரேகையில் குறுக்கிட்டு சென்று இருந்தால் இவர்செய்யும் தொழில் வகைகளிலும் மற்ற காரியங்களிலும் தடங்கல் ஏற்படக்கூடும் என்று கூறப்படுகிறது.

இரண்டாவதாக இரண்டு மூன்று செல்வாக்கு ரேகைகளை குறுக்கிட்டு மற்றோர் செல்வாக்கு ரேகை

ஆயுள்ரேகை வந்துசேர்ந்தால். புத்தம் புதிய ஒருவரால் உதவிபெறக்கூடும், அதன் மூலம் இவர் முன்னுக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! குறுக்கிட்ட பல ரேகைகளாலும் ஆழப்பதிந்த ரேகைகளாலும் அடையக்கூடிய நன்மை தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! குறுக்கிட்ட பல ரேகைகளால் தான் சிந்தித்தசெயல்கள் சீர்படாமலும் அதன்மூலம் மனவேதனை அடையக்கூடும் என்றும் ஆழப்பதிந்த ரேகையால் தன் வாழ்க்கையில் மறக்கமுடியாத காரியங்களால் சங்கடத்தை அடையக்கூடும் என்றும், இதன்மூலம் சதாகவலையோடு இருப்பார்என்றும். வாழ்க்கையில்சந்தோஷம் இருக்காது என்றும், துணிந்து கூறமுடியும் என்று கூறப்படுகிறது, தெய்வீக பக்தி ஒருவாறாக உண்டு எனலாம்.

மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகைகள் இருந்தும் ஒருவர் முன்னுக்கு வரமுடியாத காரியம் யாது?




ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை இருப்பதால், இன மக்களாலும்நண்பர்களாலும் உதவிபெறமுடியும் ஆனால் பல குறுக்கிடட சிறு ரேகைகளால் அவைகள் எல்லாம் தடங்கல் ஏற்படும், ஆகையால் இப்படி உள்ளவர்கள் சிந்தித்த காரியங்கள் செய்து முடிக்க மாட்டார்கள் என்று தெரிகிறது.




மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டில் அநேக செல்வாக்கு ரேகைகளின் மேல்பல குறுக்கிட்ட ரேகைகள் சென்று வலைபோல் இருந்தால் அதனால் அடையக் கூடியது நன்மையா? தீமையா?

ஆசிரியர்; தம்பி! சுக்கிர மேட்டில் அநேக செல்வாக்கு ரேகைகளின் மேல் குறுக்கிட்ட ரேகைகள் சென்று தலைபோல் காணப்பட்டால், இச்சாதகர் நினைத்த காரியங்களையும், சிந்தித்த காரியங்களையும். முடிக்க முயல்வார். ஆனால்பல அசந்தர்ப்பங்களால் அவைகள் நின்று விடக்கூடும் இதன்மூலம் வாழ்க்கையில் சண்டையும் சச்சரவுகளும் உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை வளைந்து ஆயுள் விதிரேகைகளைக் குறுக்கிட்டுசந்திர மேட்டுக்குச் சென்று இருந்தால் அவைகளால் ஏற்படுவது யாது?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை வளைந்து ஆயுள் விதிரேகைகளைக் குறுக்கிட்டு சந்திரமேட்டுக்குச் சென்று இருக்கும் சாதகர் செய்யும் செயல்கள் தடங்கலால் நின்று விடக்கூடும் இதன் மூலம் தான் செய்த காரணம்தாம் தடங்கல் உண்டாகிறது என்று நினைத்து மனவேதனைப்படுவார் என்று தெரிகிறது,

## இருதய ரேகை

மாணவன்: ஐயா! இருதயரேகை இறுதி முனை குருமேட்டில் நின்று இருந்தால் அதனால் அடையக்



கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! இப்பொழுது நாம ஆராயக் கூடிய ரேகையாவது வேறு ரேகையாகும் ஆகையால் அதையும் இதையும் சேர்த்து ரேகையைப் பார்க்கக்கூடாது, தனித்தனியேபார்த்து பலாபலன்களைக் கூறவேண்டும் சரி இனி இவ்ரேகையைப்பற்றி ஆராய்வோம். இருதய ரேகை இறுதி முனை குருமேட்டில் நின்றுள்ளவர்கள் தன்னுடைய செல்வங்களை தன் அளவுக்கு வைத்துக்கொண்டு மீதியை தருமம் செய்து விடுவார் ஏழைஎளியவர்களைக் கண்டால் இரக்கப்பட்டு அவர்களுக்கு தன்னால் இயன்ற உதவி செய்வார் எவரிடமும்அன்பான வார்த்தைகள் பேசுவார் ஒருவருக்கு தன் அன்பைக்காட்டி விட்டால் அதைதன் இறுதி காலம் வரைக்கும் கடை பிடிப்பார் இன்னும் இவருக்கு கஷ்டங்கள் எவ்வளவு வந்தபோதிலும் தன்னுடையஅன்பை விடமாட்டார். பார்த்தவர்கள் அதிசயிக்கத் தக்க நிலையில் நடந்து கொள்ளுவார். கடவுள்மீது ஏராளமான நம்பிக்கைவைத்திருப்பார் நோய் நொடிகளைப் போக்கி தேகத்தை ஆரோக்கியமாக வைத்து இவ்வுலகில் நீண்டகாலம் உயிர்வாழக்கூடும் என்று சொல்லப்படுகிறது, இவர்களின் ரேகைகளைப் பார்ப்பவர்கள் சந்தோஷப் படக்கூடும் என்று தெரியவருகிறது.

மாணவன்: ஐயா! இருதயரேகையின் இறுதிசனி மேட்டுக்கும் குருமேட்டுக்கும் மத்தியில் மேல்நோக்கிச் சென்று இருந்தால் அதனால் அடையக் கூடிய பலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! இருதயரேகை யின் இறுதி சனி மேட்டுக்கும் குரு மேட்டுக்கும் மத்தியில் மேல் நோக்கிச் சென்று இருந்தால் இப்படிப்பட்டவர்கள் சிறந்த அறிவாளியாகாமல் ஆசை மிகுதி உள்ளவராகவும் மற்றவர்களிடம் பாசம் உள்ளவராகவும், அடுத்தவர்கள் தனக்கு உதவி செய்யக்கூடும் ஆகையால் நாம் அவர்களுக்கும் உதவி செய்யவேண்டும் என்று எண்ணமாட்டார். இன்னும் மற்றவர்களின் பேச்சைக் கேட்டு அதில் மயங்கிவிடமாட்டார் அறியாமையால் எக்காரியங்களையும் செய்யமாட்டார் இவர் இவ்வுலகில் தன் சிறந்த அறிவால் முன்னுக்குவர முடியும் என்றுகூறப் படுகிறது.

மாணவன்: ஐயா! இருதயரேகை சனிமேட்டிலும் சுக்கிரமேடு செழித்தோங்கி ரேகையும் சிவந்து இருந்தால் அதனால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! இருதயரேகை சனிமேட்டுக்குப்போயிருந்தால் இதனால் இவர் தான் போகக்கூடிய காரியத்தால் ஆதாயமுமன்பும் கிடைக்கக் கூடும் சுக்கிரமேடு செழித்தோங்கி சிவந்து இருந்தால், இவர் விரும்பும் பெண்மூலம் அதிக லாபமும், அடுத்தவர்களிடம் அன்பும் பெரியோர்களைக் கண்டால் மதிக்கும் பண்பும் ஆண்டவன் இடத்தில் அதிக பக்தியும் கொண்டவராக இருப்பார் இருந்தாலும் சுயபுத்தி சரிவர வேலை செய்யாது இதனால் அடிக்கடி மனவேதனைப் படக்கூடும், பின் பனைவி

மக்களால் அவைகள் அனைத்தும் சென்றுவிடக் கூடும் என்று கூறப்படும்.



மாணவன்: ஐயா! இருதய ரேகை மூன்று கிளைகளுடன் இருந்தால் அதனால் ஏற்படக்கூடிய பலாபலன்கள் எவை? இவைகளில் கட்டைவிரல் பலத்தும் புத்திரேகை மெல்லியதாகவும் இருந்தால் அவைகளால் உண்டாகக்கூடிய நன்மை தீமை எவை? கடைசியாக இருதயரேகை மூன்று கிளைகளுக்கு மேல் ஏற்பட்டால் இதனால் கிடைக்கக்கூடிய நல்லது கெட்டது எவைகள்?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகை மூன்று கிளைகளாக இருந்தால் அதனால் உடல் நலம் விவேகம் அன்பு ஆகிய தன்மைகளைக் கெடுக்கும் மூன்றுகிளைகளில் எவை நன்றாக பதிந்து இருக்கிறதோ அவைகளால் நல்லபடி இருக்கக்கூடும் என்று காட்டப்படுகிறது. மேலும் இவர்கள் தங்கள் புத்தியால் நல்ல தொழில் முறைகளையும், உணர்ச்சி ஊட்டக்கூடியக் காரியங்களையும் இன்னும் எதிர்பாராத லாபங்களும் கிடைக்கும் என்றும் கூறப்படுகிறது இன்னும் இருதயரேகையின் கிளைகள் மூன்றுக்குமேல் இருந்தால் எதிர்பாராத லாபங்களும் இனபந்துக்களின் நல்லுறவும் ஏற்படும் இருதயம் சுத்தமாக இருக்கும் அடுத்தவர்களிடம் அன்பாக நடந்து கொள்ளுவார், பெரியோர்களின் வார்த்தைகள் கேட்டுநடப்பார், தெய்வீகத்தன்மை கொண்டவராகவும் இவ்வுலகின் இன்ப துன்பங்களை அனுபவிப்பவராகவும் இருப்பார் அடுத்துவர்களைக்கேட்டு தன்வாழ்க்கையை கெடுத்துக் கொள்ளக்கூடியவர் இல்லை என்பதை நன்றாக இவர் கையில் உள்ள ரேகைகள் காட்டுகிறது என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! இருதயரேகை இறுதி தாழ்ந்து புத்திரேகை சமமாய் அமைந்தால் அதனுல் கிடைக்கக் கூடியகாரியங்கள் எவை? சிலசமயங்கள் இருதயரேகை புத்திரேகையோடு பொருந்தி யிருந்தால், அவைகளால் கிடைக்ககூடிய நன்மைகள் தீமைகள் என்ன? இன்னும் இருதயரேகையைக் காட்டிலும் புத்திரேகை நன்ருக அமைந்து இருந்தால் அவைகள் உண்டாகும்பலாபலன்கள் எவை? இவையிரண்டும் சமமாக இருந்தால் அவைகளால் கிடைக்கக்கூடிய இன்ப துன்பங்கள் எவை? கடைசியாக புதன்மேட்டில் அல்லது சனிமேட்டில் இருதயரேகை சிறிதாக காணப் பட்டால் அவைகள் மூலம் கிடைக்ககூடிய நல்லது கெட்டது என்ன என்பதை கூறுங்கள்?

ஆசிரியர்; தம்பி! கேள்வியைச் சரவர தெரிந்து கொள் ஏனென்ருல் இக்கேள்வி பெரிய கேள்வி என்று எண்ணுகிறேன் சிற்சிலசமயம் இருதயரேகையும் புத்திரேகையும் பொருத்தமாக இருந்தால் இவர் தன் சுய புத்தியால் இவருடைய சுய அறிவை பலகாரணங்களில் விருத்தி செய்துகொள்ளுவார், இதனுல் இக்காரணத்தைமுன்விட்டு இவருக்கு உயர்ந்த பதவி ஸ்தானங்கள் கிடைக்கக்கூடும் எக்காரணத்தையும் நன்ருக ஆழ்ந்து சிந்தனை செய்யக்கூடும் என்று கூறப்படுகிறது இன்னும் இருதயரேகை நன்ருக சுத்தமாக இருந்தால் மேற்கண்ட பலன்களையே கூற வேண்டும், இரண்டும் சம அந்தஸ்துடன் காணப்படின் போட்டி மனப்பான்மை உண்டாகக்கூடும்: காரணமாக எக்காரியங்களையும் செய்வார். இறுதியாக புதன் மேட்டிலாவது. சனி குருமேடுகளிலாவது இருதயரேகை மிகச் சிறியதாய்க் காணப்பட்டால், இவர்கள் செய்யக்கூடிய ... முறைகளிலும்

வெளிநாட்டு வியாபாரங்களிலும் தன் சொந்த விவசாயத் தொழில்களிலும் மிகுந்த ஏமாற்றமான நஷ்டங்களும், நண்பர்கள்: இன்பந்துக்கள் இவர்களின் கோபங்களும் மனைவிமக்கள் ஆகிய பெற்ருேர்களின் மனக்கசப்பும் உண்டாகும் இவைகளின் மூலம் இவர் மனவேதனைப்பட்டு பல கெட்ட வழிகளில் செல்லக் கூடும் அடுத்தவர்கள் மீது இரக்கங் கொள்ளமாட்டார் தெய்வீகபக்தியை முன்னைக்காட்டிலும் குறைத்துக் கொள்ளுவார் ஆகையால் இவர்களின் பலாபலன்களை கிரகமேடுகளின் நிலைமைகளைக் கொண்டு ஆராய்ந்து சொல்ல வேண்டும்,




மாணவன்: ஐயா! புதன் மேட்டில் இருதயரேகை உற்பத்தியாகி குறுக்கு தடைகள் இல்லாமல் நேரே குரு மேட்டைக் கடந்து இறுதி வரைக்கும்சென்றிருந்தால்கிடைக்கக் கூடிய நன்மை தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புதன் மேட்டில் இருதயரேகை உற்பத்தியாகி குறுக்கே தடைகள் இல்லாமல் நேராக குரு மேட்டைக் கடந்து கடைசி வரைக்கும் சென்றிருந்தால் இவர்கெட்ட குணமுடையவராகவும்எளிதில் அடுத்தவர்களை காக்காய் பிடிப்பவர்களாகவும் தான் விரும்பும் செல்வங்கள் கிடைக்கவில்லை என்ருல் மனவேதனைப் பட்க்கூடியவராகவும் இருதயம் சுத்தமில்லாதவராகவும் எதையும் சிந்தனை பண்ணுமல் செய்யக்கூடியவராகவும் புத்தி இல்லாத தன்மையும் அதன் மூலம் பைத்தியக்காரராகவும், எவ்வேலையும் நினைத்த மாத்திரம் செய்யக் கூடியவராகவும் இருப்பார். இருதயரேகை முன்னிலும்நன்கு பதியாமல் மிக மெல்லியதாகக் காணப்பட்டாலும் சந்திரமேடு பலமாக யிருந்தாலும் முன் கோபம் உள்ளவராகவும்

அவசரக்காரராகவும் ஆராயுந்தன்மை இல்லாதவராகவும், மிருகங்களின் குணம் கொண்டவராகவும், பெண்களை கீழ்வாகப்பேசக் கூடியவராகவும், இன்னும் பல இனனல்கள் செய்யக்கூடியவராகவும், குறைந்த காலம் வாழக் கூடியவராகவும் இருந்திடுவார் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! இருதயரேகை தாழ்ந்து புத்திரேகைக்கு கீழ்படிந்து சென்று இருக்கும் நபர்களுக்கு எவ்வகைகளில் பலன்களைக் கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! மேற்கண்டரேகை உள்ளவர்களுக்கு தைரியம் இல்லாத தன்மையும் சுய நலபுத்தியும் தானே எல்லாச் செயல்களையும் அடைய வேண்டும் என்ற கெட்ட எண்ணங்களும் தன்னைக் காட்டிலும் எவரும் முன்னுக்கு வரக்கூடாது என்ற நினைப்பும் தன் மனைவியை அடக்கி வாழ முடியாதவராகவும், பல தீய செய்கைகள் செய்யக்கூடியவராகவும், உடல் நலம் கெட்டு அதன் மூலம் பலநோய் நொடிகள் வந்து கஷ்டப்படச்கூடியவராகவும், தெய்வத்தன்மை குறைந்தவராகவும், இருப்பார் என்று கூறப்படுகிறது, ஆனால் இப்படி சொன்னால் பலன் கூறும் ஆசிரியர் அவர்களின் திறமையை பொறுத்தது என்று மேலும் வற்புறுத்திக் கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! இருதயரேகை உற்பத்தியில் புத்திரேகையில் கலந்துபின் தனித்தனியாக சென்று விடுமாயின் அதனால் அடையக்கூடிய பலாபலன்கள்




எவை? மேலும் இருதயரேகை குறுக்கிட்டுச்சென்றால் அவைகளால் கிடைக்கூடிய நன்மைகள்? எவைகள்?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகை உற்பத்தியில் புத்திரேகையில் கலந்து சென்றுகொண்டிருந்தால் தன்வாழ்க்கையில் அடையவேண்டிய இன்ப துன்பங்களை இழந்து அதன் மூலம் பல இன்னல்களை அடைந்து புத்திக் கூர்மையும் இழந்து வாழக்கூடும் இன்னும் இருதயரேகை குறுக்கிட்டுச் சென்றிருந்தால் உயர்வு தாழ்வு என்ற மனப்பான்மை கொண்டவராக வாழக்கூடும்.

மாணவன்: ஐயா! இருதயரேகையில் புத்திரேகை குறுக்கிட்டுச்சென்றிருந்தால் அவைகளால் கிடைக்கக்கூடிய பலாபலன்கள் எவை? இன்னும் இருதயரேகையில் புத்திரேகை குறுக்கிடும் இடத்தில் பள்ளமாகப் பதிந்து இருந்தால் அவைகளால் கிட்டும் நல்லது கெட்டது எவைகள்?




ஆசிரியர்: தம்பி! நீ சொன்ன அக்கேள்விக்கு பதில் கொடுக்கிறேன், கவனமாகக் கேட்டுத்தெரிந்து கொள், இருதயரேகையில் புத்திரேகை குறுக்கிட்டு சென்றிருக்கும் நபருக்கு இருதயநோய் மூளைக்குழப்பம் கைகால் இழத்தல் பெண்களால் கெட்டவியாதி, அவைகளால் பலதொல்லைகள் இனபந்துக்கள் தூற்றுதல், வீண்செலவுகள். அதன்மூலம் கொடுக்கல், வாங்குதலில் சண்டை சச்சரவுகள் ஆகிய பல கார

ணங்களால் இவருடைய உயிருக்கே ஆபத்து ஏற்ப டக்கூடும் என்று கூறப்படுகிறது. இன்னும் இருதய ரேகை புக்திரேகை குறுக்கிடும் இடத்தில்பள்ளமாகப் பதிந்து இருந்தால் திடீரென்று தொழில் முறைகளி லும் உத்தியோக முறைகளிலும் வியாபார வகைகளி லும் நஷ்டம் உண்டாகக்கூடும் அதன் மூலம் பல நோய்நொடிகள் உண்டாகி மனவேதனைப்பட்டு தன் வாழ்க்கையே துன்பமாக ஆக்கிக்கொள்ளுவார் என்று இலருக்கு எந்த சமயத்திலும் உயிர் போகவேண்டிய பல சந்தர்ப்பங்கள் வரக்கூடும் என்றும் கூறப்படு கிறது.




மாணவன்: ஐயா! சந்திரமேட்டில் இருதயரேகை உற்பத்தியாகி மேல் நோக்கி குருமேட்டுக்குச் சென்றிருந் தால் இவைகளால் கிடைக்கக்கூடிய பலாபலன் எவை? மேலும் இருதய ரேகை இதர முக்கியரேகைகளை விட மெல்லியதாக இருந்தால் அவைக ளால் உண்டாகக்கூடிய நல்லது கெட்டது யாவை?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகை சந்திரமேட் டில் உண்டாகி மேல் நோக்கி குருமேட்டுக்குச் சென் றிருந்தால் அவைகள் உள்ளவர்கள், அடுத்தவர்கள் சகலத்திலும் முன்னேறிவிட்டார்கள் நாம் முன்னேற வில்லை என்ற கெட்ட எண்ணமும் மனதில் எப்பொ ழுதும் வஞ்சக தன்மையும் அதன் மூலம் பலஇன்னல் களுக்கு ஆளாக்கப்பட்டவராகவும் இரக்கத் தன்மை யில்லாதவராகவும் அவைகளால் இனமக்களின் தூற் றுதல்களுக்கு பாத்திரமாகவும் தன் வாழ்நாள் முழு வதும் துன்பம்கொண்டவராகவும்இருந்திடுவர்என்று கூறப்படுகிறது மேலும் இருதயரேகை (இன்னும்)

இதர முக்கிய ரேகைகளைவிட மெல்லியதாகக் காணப் பட்டால் இவர்கள் புத்திமங்கிய தன்மையும், வஞ் சக எண்ணத்தையும் இரக்க மற்ற தன்மையும். அடுத்தவர்களைககண்டு பொருமை கொள்ளுவதும் அதன்மூலம் மனவேதனைப்பட்டு பலநோய் நொடி களுக்கு ஆளாக்கப் பட்டவராகவும், தன் வாழ்க் கையை எப்பொழுதும் துன்பமாக ஆக்கிக்கொள்ளு வார்கள் என்றும் கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! இருதயரேகை சங்கிலிபோல் புதன்மேட்டில் உற்பத் தியாகி சூரிய மேட்டளவில் மெல்லிய தாகிப் பிறகு சனிமேட்டில் அகன்று பதிந்துபிறகு நன்றாகப் பதிந்து ஒழுங் காகச் சென்றால் அடையக்கூடியபலா பலன்கள் எவை என்பதை எடுத்துக் கூறுங்கள்? இருதயரேகை நன்கு பதிந் தும் சிவந்தும் இருந்தாலும் அவைக ளால் உண்டாகக்கூடிய நன்மை தீமைகள் எவை? இன்னும் இருதயரேகையில் மஞ்சள் நிறம் கண்டு இருந்தால் அவைகளால் என்னஏற்படும்? கடைசி யாக இருதய ரேகைகளில் சின்னஞ் சிறுரேகைகள் இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடிய பலா பலன்கள் எவை?

ஆசிரியர்; தம்பி! இருதயரேகை சங்கிலிப்போல் புதன் மேட்டில் உற்பத்தியாகி சூரியமேட்டில் மெல் லியதாக பிறகு சனிமேட்டில் அகன்றும். பதிந்தும் பிறகு நன்றாக சிவந்தும் இருந்தால் இவர்கள் ஆயுள் காலம் நன்றாக இருக்குமா, அல்லது கெட்டு இருக் குமா என்பதை அளந்து கூறமுடியும் என்று இங்கு கூறப்பட்டுள்ளது. இருதயரேகை நன்கு பதிந்து சிவ

இருக்கும் சாதகருக்கு மனத்திடமும், தளரா ஊக்கமும் இன்னும்பல அதிசயகாரியங்கள் செய்யக்கூடியவர் என்று தெரியவருகிறது.

இருதயரேகையில் மஞ்சள் நிறம் கண்டு உள்ளவர்கள் அடிக்கடி மயக்கம் அடைவதும், பித்தம் உள்ள நோய்களால் கஷ்டப்படுவது அதன் மூலம் மனவேதனைப்பட்டு தன் கையிலுள்ள பொருள் வகைகளை இழந்து வாழக்கூடும் என்று கூறப்படுகிறது,

இறுதியாக இருதயரேகையில் குறிகள்உண்டாகி இருந்தால் அவைகள் மூலம் பல கெட்ட வழிகளுக்கு செல்லக் கூடியவர் என்பதை குறிக்கும் என்று தெரிகிறது.



மாணவன்: ஐயா! இருதயரேகையின் இறுதிமுனை கிளையாய் குரு மேட்டை நோக்கிச் சென்றிருந்தால் அதன் மூலம் கிடைக்கக் கூடியபலாபலன்கள் எவை?

ஆசிரியர்; தம்பி! இருதய ரேகை கடைசி முனை கிளையாய் குருமேட்டை நோக்கிச் சென்றுருக்கும் நபருக்கு செல்வந்தராக இருக்கக் கூடிய தன்மை இல்லை ஆனுல் நடுத்தரமாக இருக்கக்கூடிய தன்மையுண்டு மேலும் போதிய கல்வி அறிவு உண்டு அதன்மூலம் இவர் உயர்ந்த பட்டம் பதவிகளை வகிக்கக்கூடும், இரக்கத்தன்மை உண்டு. அடுத்தவர்களின் செல்வத்தின் மேல் ஆசை கொள்ள மாட்டார் தான் சார்ந்துஇருக்கும் மதமோகட்சியோவளரதன்ஞல் இயன்ற உதவிகள் செய்யக்கூடும் கெட்டவழிகளில் செல்லமாட்டார், ஆகையால் உடலை நன்ருக பாது காத்துக்கொண்டு இவ்வுலகில் அதிகநாட்கள் வாழக்கூடும்,



மாணவன்: ஐயா! சனிமேட்டில் இருதயரேகையின் கிளை சென்றிருந்தால் உண்டாகக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை? மேலும் கையின் மத்தியபாகம் மேடாக இருந்தால் நல்லது கெட்டது எவை என்பதைஎடுத்துக் கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! இருதய ரேகையின் கிளை சனிமேட்டில் சென்றிருந்தால் இவர் நன்கு நடிக்கும் திறமை யுள்ளவராகவும் அழகுள்ளவராகவும், மேலும் மேலும் சிறந்தபெயர் கொண்டவராகவும் வாழக்கூடும் என்று கூறப்படுகிறது, இன்னும் கையின் மத்தியபாகம் மேடாகஉள்ளவராகவும் அவைகளால் பெருமை தக்க நிலைமையிலுள்ள பதவிகளும் விவசாயம் முதலிய தொழில் வகைகளும் செய்து அதன்மூலம் லாபத்தையும் பெறக்கூடும். சாந்தம் பொறுமை இரக்கத்தன்மை கொண்டவராகவும் இருந்திடுவார், நோய் நொடிகள் இல்லாதவராகவும் தெய்வீக பக்தி உள்ளவராகவும், இவ்வுலகின் இன்பதுன்பங்களை அனுபவிக்கக்கூடியவராகவும் வாழ்ந்திடுவார் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! சூரிய மேட்டை இருதய ரேகையின் கிளை நோக்கிச் சென்றிருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்கள் எவை? இன்னும் கையின் கடைசியான மூன்றும் பகுதிமேடாயிருந்தால் அவைகளால் உண்டாகக் கூடிய நல்லது, கெட்டது எவை?

ஆசிரியர்: தம்பி! இருதய ரேகை

யின் கீழே சூரியமேட்டை நோக்கிச் சென்றிருந்தால் அவர் தான் நல்லபடியிருக்கும் நிலைமையை மனக் கண்முன் நிறுத்தி ஆச்சரியப்படுவார் சித்திரம் முத லியவைகளைக் கண்டு ஆச்சரியப்படக்கூடும் என்று கூறப்படுகிறது. இன்னும் கையின் கடைசியானமூன் றுபகுதி மேடாகயிருக்கும் சாதகர் நல்லபடி ஆடை களையும் ஆபரணங்களையும் அணியும் ஆசாமிகளையே விரும்புவார் என்றும் கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! இருதயரேகை யின் கிளை புதன்மேட்டை நோக்கிச் சென்றிருந்தால் அடையக் கூடிய பலாபலன்கள் எவை? இன்னும் கை யின் மத்தியபாகம்மேடாக இருந்தால் அவைகளால் கிடைக்கக்கூடிய நல்ல வைகள் எவை? கெட்டவைகள் எவை

ஆசிரியர்: தம்பி! இருதய ரேகை யின் கிளை புதன்மேட்டை நோக்கிச் சென்றிருக்கும் சாதகருக்கு செல்வம் அதிகம் உள்ளவு ராக காணப்படுவார் தன்பேச்சுத் திறமையால் அடுத் தவர்களை மயக்கி விடுவார் ஆகையால் இவரை சிறந்த பேச்சாளராகவும், பேருப்புகழும் பெற்றவராகவும், அதன்மூலம் தன்வாழ்க்கையை நல்லபடி நடத்திக் கொள்வார் என்றும் சொல்லப்படுகிறது இவர்கையின் மத்தியபாகம் மேடாயிருந்தால் சரித்திரம் சாஸ்திரம் இன்னும் பலகலைகளில் தேர்ச்சியுடையவராகவும் இருப்பார். அதன்மூலம் தன் வாழ்க்கையை நல்லபடி நடத்திக் கொள்வார் என்று கூறப்படுகிறது. கடைசி யாக கையின் கீழ்பாகம் மேடாகயிருந்தால், உத்தி யோக முறைகளிலும் வியாபார முறைகளிலும், அதிக லாபம் கிடைக்கக்கூடியவராகவும் பெயர் உள்ளவரா கவும், நோய் நொடிகள் இல்லாதவராகவும் வாழக் கூடும்.

மாணவன்: ஐயா! இருதயரேகையில்குறுக்கிட்ட சிறு ரேகைகள் பதிந்து காணப்பட்டால் அவைகளால் அடையக்கூடிய நன்மை தீமை யாவை? குறுக்கிட்ட ரேகைகள் பட்டும்படாததுமாக இருந் பலா பலன்கள் எவை? குறுக்கிட்ட ரேகை குறிகள் தோன்றி, மறைவதாயின் இவைகளால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை? சூரிய மேட்டுக்கு நேராகத் தோன்றும். ரேகை குறியால் கிடைக்கக் கூடிய நல்லது கெட்டது எவை என்பதை எடுத்துக் கூறுங்கள்?




ஆசிரியர்: தம்பி! இருதயரேகையில் பல குறுக்கிட்ட சிறுரேகைகள் பதிந்து இருந்தால், இவர் தன் செல்வத்தை நோய் நொடிகள் மூலம் உண்டாகக் கூடிய வியாதிகளுக்கு செலவு செய்யக்கூடும் இதனால் அவரின் வாழ்க்கை துன்பகரமாக இருக்கக் கூடும். குறுக்கிட்ட ரேகைகள் பட்டுபடாததுமாக இருந்தால் இனபந்துக்களால் பல இன்னல்கள் உண்டாகக் கூடும் குறுக்கிட்ட ரேகைக் குறிகள் தோன்றி மறைவதாக இருந்தால் இருதய சம்மந்தமானநோய் நொடிகள் உண்டாகி தன் பொருள்களை இழக்கக் கூடும். சூரியமேட்டுக்கு நேராகத்தோன்றும் ரேகைக் குறி எப்பொழுதும் வீண் அலைச்சலாலும், வெளி இடங்களுக்கு செல்வதிலும் நண்பர்கள் மூலமாகவும் பெண்களாலும் கடுமையான ஆபத்து உண்டாகக் கூடும் என்று கூறப்படுகிறது இதை சாஸ்திரம் சொல்லும் ஆசிரியர் திறமையால் கூட்டியும், குறைத்தும் சொல்லக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! இருதயரேகையில் தீவுகள் காணப்பட்டால் அதனுல் அடையக்கூடிய பலாபலன்கள் எவை ரேகையில் சிறு புள்ளிகள் இருந்தால் அவைகளால் கிட்டக்கூடிய நன்மைகள் எவை? தீமைகள் எவை? தீவு அகன்று பதிந்திருந்தால் அவைகளால் உண்டாகக்கூடிய நல்லது கெட்டது எவை?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையில் தீவுகாணப்பட்டால் பலகெட்ட நடத்தையால் பலநோய் நொடிகள் உண்டாகி அதன் மூலம் தன்செல்வங்களை இழக்கக் கூடும். தீவுபெரியதாக இருந்தால் கஷ்டம் அதிகமாக வரக்கூடும். ரேகையில் சிறுபுள்ளிகள் உண்டாகி இருந்தால் அதனுல் அவ்வளவு கஷ்டம் ஏற்படாது, தீவு அகன்று பதிந்துமிருந்தால் மிகக் கேடாவதாகும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! இருதயரேகையில் சிறுபுள்ளிகளோ, அல்லது பெரியபுள்ளிகளோ கண்டுஇருந்தால் அவைகளால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை? புள்ளிமேல் காணப்படும், சிறுகுறிகளால் உண்டாகக் கூடிய நன்மையும் தீமையும் யாவை?



ஆசிரியர்; தம்பி! இருதயரேகையல் சிறு துண்டு பட்டு இருந்தால் பல தேக சம்மந்தமான வியாதிகள் உண்டாகும். இவைகளில் பெரிய புள்ளியாக இருந்தால் அதிக கஷ்டத்தையும் சிறு புள்ளியாக இருந்தால் சுமாரான கஷ்டத்தையும் கொடுக்

கும் புள்ளிமேல் சிறுகுறிகள் கண்டு இருந்தால் இவை களால் சொல்லமுடியாத கஷ்டங்களும் எதிர்பாராத பகைமைகளும் அதனுல் திடீரென்று பல தொல்லை களும் உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! இருதயரேகை துண்டு பட்டு ஒருமுனை குருமேட்டை நோக்கிப் போயிருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலா பலன்கள் எவை?

ஆசிரியர்; தம்பி! இருதயரேகை துண்டு பட்டுஒரு முனை குருமேட்டை நோக்கிச்சென்று இருந்தால் இப்படி உள்ளவர்கள் மது வினுலும் லாகிரி வஸ்துக்களாலும் தன் உடலை கெடுத்து அதன் மூலம் பல வியாதிகள் உண்டாகிபின் பணங் களை கண்டபடி செலவுசெய்து பின் மன வேதனைப்பட்டு இல்வாழ்க்கை மேல் வெறுப்பு கொண்டவராகவும் இருக்கக் கூடும்.




மாணவன்: ஐயா! இருதயரேகை அடுத்தடுத்துத் துண்டுபட்டு இருந் தால் அவைகளால் கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! இருதய ரேகை அடுத்தடுத்துத் துண்டுபட்டு இருக் கும் சாதகருக்கு பலகெட்ட செய்கை யால் தேகநலம் குன்றி அதனுல் பல வியாதிகளுக்கு உட்பட்டு பணங்களை கண்ட படி செலவு செய்து கடையாக தன் வாழ்க் கையை பாழ்படுத்திக்கொண்டு வாழக்கூடும் என்று கூறப்படுகிறது.






மாணவன்: ஐயா! இருதயரேகை இரண்டு துண்டாகி பிற்பகுதியின் முன் புத்திரேகையில் படிந்துவிடுமானல் அவைகளால் உண்டாகக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! இப்படி உள்ளவர்களுக்கு இருதயரேகை பிரிந்த பின் காலங்களில் பல கஷ்டங்கள் உண்டாகக்கூடும் இதனுல் வாழ்க்கை சீர்குலையும் என்று கூறப்படுகிறது




மாணவன்: ஐயா! இருதயரேகையின் பிற்பகுதியின் இறுதிபுத்திரேகையைக் குறுக்கிட்டுச் சென்று இருந்தால் அவைகளால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையின் பிற்பகுதியின் இறுதி புத்திரேகையை குறுக்கிட்டுச் சென்று இருந்தால் இவர்களுக்கு மூளை சம்மந்தமான வியாதிகள் உண்டாகி அடிக்கடி ஒவ்வொரு குணம் உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! இருதயரேகை புத்திரேகையோடு சந்திக்கும் இடத்தில் ஒருநட்சத்திரக்குறி காணப்பட்டால் அவைகளால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகை புத்திரேகையோடு சந்திக்கும் இடத்தில் ஒரு நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் இவருக்கு மூளை சம்பந்தமான வியாதிகளும் அதனுல் உயிருக்கு ஆபத்து உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! இருதயரேகையின் மத்தியில் ஒரு நட்சத்திரக்குறி காணப்பட்டால் அவைகளால் கிடைக்கக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையின் மத்தியில் ஒரு நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் அந்தகாலம் மரணம் ஏற்படக்கூடிய சூழ்நிலை உண்டாகலாம் அல்லது இருதயசம்மந்தமான பலவியாதிகள் உண்டாகி அதனல் பணம் செலவாகி, பின்மனம் சொல்லமுடியாத வேதனைப்பட்டு அதனுல் இல்வாழ்க்கை துன்பகரமாகமுடியக் கூடும் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! இருதயரேகை துண்டுப்பட்டு அதனுல் தனித்து இருந்தால் அவைகளால் அடையக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை? என்பதை எடுத்துக் கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி இருதய ரேகை துண்டுபட்டு இருந்தால் அதனுல் பலகெட்ட நடத்தையால் உடல் நலம்குன்றி அதனுல்பல நோய்களுக்கு ஆளாக்கப்பட்டவராக இருக்கக்கூடும் பிறகு அந்தநோய் பலமருந்துகளின் உதவியாலும் நல்ல எண்ணத்தாலும் படிப்படியாக குணமாகக்கூடும்.

மாணவன்: ஐயா! இருதயரேகை துண்டுபட்ட விடத்தில் பாதுகாப்புரேகைஇருந்தால் அவைகளால் உண்டாகக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகை துண்டு பட்ட விடத்தில் பாதுகாப்பு ரேகை உள்ளவர்களுக்கு எவ்வளவு நோய் நொடிகள் வந்தாலும் பின் சென்று விடக்கூடும் ஆகையால் இவர்கள் அவைகளைப்பற்றி கவலைப் படக்கூடாது







மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை என்பது யாது என்பதை எடுத்துக் கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! சுக்கிர மேட்டை வளைந்துஇருப்பதும் சரியான முறைப் படி அமைந்து இருப்பதும் தான் ஆயுள் ரேகை எனப்படும்.

மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை குருமேட்டில் உற்பத்தியாகி இருப்பதால் உண்டாகக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை குருமேட்டில் உற்பத்தியாகி இருக் கும நபருக்கு வியாபார முறைகளி லும், உத்தியோக முறைகளிலும் அதிக செல்வம் கிடைக்கக்கூடும் தனக்கு ஏற்படும் சந்தர்ப்பங்களை நழுவவிடாமல் இருப்பார் என்றும் தன் இனபந்துககளையும் நண்பர்க ளையும் அதிக கவனமாக கருதுவார் தேகத்தை சரி யாக வைத்துக்கொள்ளுவார். இதனல் வியாதிகள் இவரிடம் வராது, பெரியோர்களைக் கண்டால் கீழ்ப்



படிந்து நடந்து கொள்ளுவார், நீண்ட ஆயுள் உள்ள வர் என்று துணிந்து கூறலாம். மேலும் சனி ஆதிக் கம் உள்ளவராக இருப்பார் என்றால் தேகதத்துவ ஆராய்ச்சி உள்ளவராகவும், வைத்திய முறையில் சிறந்தவராகவும் இருக்கக்கூடும் என்று கூறப்படு கிறது.



மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை சுக்கிர மேட்டில் கட்டை விரலை நெருங்கி இருந்தால் அதன்மூலம் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! சுக்கிரமேட்டில் ஆயுள் ரேகை கட்டை விரலை நெருங்கி இருக்கும் சாதகர் பெண் ஆசை அற்றவராகவும், இரக்கத்தன்மை இல்லாத வராகவும், எக்குணங்களும் இவரிடம் கிடையாது. குழந்தை பாக்கியமும் இவரிடம் கிடையாது மேலும் ஆயுள் ரேகை நீளமாக இருந்தால் ஆரோக்கியம் இல் லாதவராகவும் அதன்மூலம் பல தொல்லைகள் ஏற் படக்கூடும் என்றும் ஆயுள் காலத்தைப்பற்றி அதிகம் கூறமுடியாது என்றும கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா ஆயுள் ரேகை சுக்கிரமேட்டை நான்கு வளைவாகச் சுற்றிக்கொண்டு இருந்தால் அவைகளால் கிடைக்கும் காரியங்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! சுக்கிர மேட்டை ஆயுள் ரேகை நன்கு சுற்றி வளைந்து இருந்தால் இப்படி உள்ளவர்கள் அழகுள்ளவராகவும் பெண்கள்மேல் அதிகம் மோகம் கொண்டவராகவும் இருக்கக்கூடும் இப்படி உள்ளவர்கள் இளம் வயதில் திருமணம் செய்து கொள்ளுவார்கள் என்றும் செல்வம் வேண்டிய அளவு சேர்த்துக்கொண்டு தன் வாழ்க்

கையை யாதொரு குறையும் இல்லாமல் நடத்தி வருவார். இவர்களைக் கண்டவர்கள் மரியாதையாக நடந்து கொள்ளுவார்கள் தன்னுடைய செல்வாக்கால் யாதொரு நோய்கள் இல்லாமல் தன்தேகத்தைபாது காத்துக் கொள்ளக்கூடும் தெய்விகத்தன்மை உடையவராகவும் இருப்பர், தன்னால் இயன்றளவு எளியவர்களுக்கு உதவி செய்வார் போதுமான ஆயுள் காலம் உண்டு என்றும் துணிந்து கூறமுடியும்.

மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை அகன்று சின்னஞ்சிறு துண்டுரேகைகள் சேர்ந்து இருந்தால் அவைகளால் அடையும் பலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகை அகன்று சின்னஞ்சிறு துண்டுரேகைகள் சேர்ந்துஇருக்கும் நபர் தைரியம் இல்லாதவராகவும் நோய் நொடிகள் வந்தால் அதை எதிர்த்து போராட சக்தியற்றவராகவும் நரம்பு. கண், மூளை ஆகிய சம்மந்தமான வியாதிகள் அடிக்கடி வரக்கூடும் தன்னம்பிக்கையை இழந்தே விடுவார் இவர் அடுத்தவர்களின் தயவால் காலம் கழிக்க முடியும் சதாசோம்பல் குணம் இவரிடம் இருக்கும், இவர் தன் வாழ்க்கையை நடத்த முடியாதவராகவும். சொற்ப ஆயுள் காலம் உள்ளவராகவும் இருக்கக்கூடுமென்று கூறப்படும்.

மாணவன்: ஐயா! ஆயுள்ரேகை ஏணிப்படி போல அமைந்து இருந்தால் அதனால் கிடைக்கக் கூடியவைகள் நன்மையா? தீமையா?



ஆசிரியர்; தம்பி! ஆயுள்ரேகை ஏணிப்படி போல் அமையப் பெற்ற நபர் அடிக்கடி வியாதிகளால் கஷ்டப்படுவர் மனவேதனை அடையக்

கூடும் தொழில் வகைகளின் மேல் கவனம் செலுத்த மாட்டார் இக்காரணங்களால் தன்குடும்பத்தின்மேல் வெறுப்பு கொள்ளுவார் மேலும் ரேகைதுண்டுகளாக அடுககப்பட்டு ஒரே ரேகையைப்போல காணப்படுவதால் மேலும மேலும் கஷ்டங்கள் வந்து கொண்டே இருக்கும் என்று கூறப்படுகிறது,



மாணவன்: ஐயா! மெல்லிய ஒரு ரேகைகளால் ஆக்கப்பட ஆயுள் ரேகையால் அடையும் நன்மைகளும் தீமைகளும் எவை?

ஆசிரியர்; தம்பி! மெல்லிய இரு ரேகைகளால் ஆக்கப்பட்ட ஆயுள் ரேகை உள்ளவர்கள் சுறுசுறுப்பு இல்லாதவராகவும் நரம்பு வியாதிஉள்ளவராகவும், கற்பனை சக்தி இல்லாதவராகவும் மனவேதனை உடையவராகவும், அதன்மூலம் பலதொல்லைகளுக்கு ஆளாக்கப்பட்டவராகவும், இதனல் குடும்பத்தில் சந்தோஷம் இல்லாதவராகவும் சொற்ப ஆயுள் உள்ளவராகவும் இருக்கக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை சங்கிலி போல் இருந்தால் அவைகளால் அடையக் கூடியபலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகை சங்கிலிபோல் அமையப் பெற்றவர்கள் செய்யும் தொழில் வகைகள் தடங்கல் ஏற்படும். மனவேதனை அடையும்படி மறுபடியும் நோய் வகைகள் வரக்கூடும் இக்கையில் சிறிய காத ரேகை ஒழுங்காகஅமைந்து இருந்தாலும் அதிக கஷ்டத்தை கொடுக்காது இவரின் உடலில் சரியாக இரத்தம் ஓடாது இதன் மூலம் பயங்கர ஆபத்து வரக்கூடும். ஆயுள்ரேகை

உடலின் ஆரோக்கியத்தை கெடுப்பதால், குற்றமும் குறைகளும் காணக்கூடும் எதற்கும் முன் ஜாக்கிரதை யாக நடந்து கொள்வது நல்லது என்று வற்புறுத்திக் கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! ஆயுள் ரேகையில் அடுத்தடுத்து குறுக்கிட்டமெல்லிய ரேகைகள் கண்டு இருந்தால் அதன் மூலம் அடையக்கூடிய நல்லது கெட்டது எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகையில் அடுத்தடுத்துக் குறுக்கிட்ட மெல்லிய ரேகை மற்ற ரேகைகளை வெட்டித் துண்டாக்காது கண்டிருந்தால் சிறு வியாதிகள் வந்து பின் அகன்று விடக்கூடும். குறுக்கிட்ட ஒருசில ரேகைகள் சுக்கிரமேட்டில் இருப்பதால் நோய் நொடிகள் உண்டாகும் பொழுதுமனவேதனை அடையக்கூடும் குறுக்கிட்ட ரேகைகுறி அழுத்தமாக இருந்தால் கடுமையான ஜுரத்தைக் குறிக்கும் குறுக்கிட்டகுறி சிவந்து இருந்தால் அதன் மூலம் ஜுரத்தை மட்டும் குறிக்கும். எப்படியும் பல இன்னல்கள் வந்து போகக்கூடும் என்று தெரியவருகிறது.




மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டிலிருந்து ஒருரேகை ஆயுள்புத்தி இருதயம் இம்மூன்று ரேகைகளையும் குறுக்கிட்டு சனிமேட்டிலுள்ள நக்ஷத்திரக் குறியை நோக்கி இருக்குமாயின் அதனால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! மேற்கண்ட ரேகை உள்ளவர்கள் சனியின் கோளாறினால் பலவித நோய்கள் உண்டாகக்கூடும். அதனால் மனவேதனை அடையக்கூடும் வீண் அலைச்சலால் பண நஷ்டம் ஏற்படக்கூடும் இனபந்துக்களின் மனமாற்றமும் நண்பர்களிடத்தில் துவேஷமும் ஏற்படக்

கூடும் குடும்பத்தில் அடிக்கடி சண்டையும் சச்சரவு களும் உண்டாகக்கூடும் என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! உள்ளங்கையில் சிலரேகையில் உற்பத்தியாகி ஆயுள் ரேகைகள் தொடுவதோடு நின்று விட்டால் அவைகளால் ஏற்படக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையில் சில ரேகைகள் உற்பத்தியாகி ஆயுள ரேகையைத் தொட்டுக் கொண்டு இருக்கும் சாதகர் அடிக்கடி நோய் நொடிகள் மூலம், தேகநலம் கெட்டவராகவும். தின மும் மனக்கவலையுடையவராகவும் குடும்பத்தில் சந் தோஷம் இல்லாதவராகவும், வீண் செலவு செய்ய கூடியவராகவும் தெய்வீகத் தன்மை குறைந்தவராக வும் இருக்கக்கூடும் ஆனுல் ஆயுள் ரேகையில் புள்ளி கண்டுள்ளவர்கள் மிகவும் வேதனைப்படுவார்கள்.

மாணவன்: ஐயா! ஆயுள்ரேகைப் புள்ளியிலி ருந்து மேல் சந்திரமேட்டை நோக்கிய ஒருரேகை இருந்தால் அவைகளால் கிடைக்கக்கூடிய நன்மை தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகை புள்ளியிலிருந்துமேல் சந்திர மேட்டை நோக்கிய ஒரு ரேகை வலைக்குறி கண்டு இருப்பவர்கள் கெட்ட செய் கையால் வயிற்று சம்மந்தமான நோய்கள் வரக்கூடும் இக்காரணங் களால் தொழில் முறைகளிலும் உத் தியோக வகைகளிலும் வியாபார முறைகளிலும் தடஙகல் ஏற்படும். இதனுல் குடும்பத்தில் சண்டைகளும் சச்சரவுகளும் ஏற்படும் இதனுல் மனவேதனைப்பட்டு நோய்நொடி கள் உண்டாகக்கூடும் என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! ஆயுள் ரேகைப் புள்ளியிலிருந்து ஒருரேகை இருதய ரேகையிலுள்ள புள்ளி அல்லது தீவுக் குறியைக் குறிக்குமாயின் அதனால் கிட்டக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகைப் புள்ளியிலிருந்து ஒருரேகை இருதய ரேகையிலுள்ள புள்ளியை குறிக்குமாயின் அவர்கள் மார்பு சம்மந்தமான வியாதிகள் உண்டாகக்கூடும் அதன்மூலம் மனவேதனை அடைந்து பொருள் வகைகளை இழக்கக்கூடும் குடும்பத்தில் சண்டை சச்சரவு உண்டாகக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! ஆயுள்ரேகை புள்ளியிலிருந்து ஒருரேகை சனிமேட்டிலுள்ள ஒரு கிராஸ் குறியைக் குறித்தால் அவைகளால் அமையக்கூடிய நன்மை தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகைப் புள்ளியிலிருந்து ஒருரேகை சனிமேட்டிலுள்ள ஒருகிராஸ் குறியைக் குறிக்கும் சாதகருக்கு தான் செய்யும் தொழில் வகைகளும் வெளிநாடு வியாபாரங்களிலும் எதிர்பாராத நட்டம் ஏற்படக்கூடும். பெண்களால் திடீரென்று கஷ்டம் ஏற்படக்கூடும் பலவித நோய்நொடிகள் உண்டாகி அதன்மூலம் பணநஷ்டம் ஏற்படக்கூடும். மனவேதனை அடைந்து குடும்பத்தை சரிவர நடத்த முடியாதவராகவும் தெய்விகத் தன்மை இல்லாதவராகவும் தன் வாழ்க்கையை பாழ்படுத்திக்கொண்டு இவ்வுலகில் வாழமுடியும் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை துண்டு படுவதாக இருந்தால் அதனால் அடையக்கூடியவை யாவை? துண்டு பட்டுள்ள சமவெளியாக இருந்தால் அதனால் கிடைக்கக் கூடியவைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை துண்டுபடுவதாக இருக்கும் சாதகருக்கு எதிர்ப்பு வரக்கூடும். இதனால் இவர் செய்யும்தொழில் வகைகளுக்கு தடங்கள் ஏற்படக்கூடும் இதனால் குடும்பத்தில் சந்தோஷம் இராது. இன்னும் துண்டுபட்டு சமவெளியாக இருந்தால் கஷ்டங்கள் வரக்கூடும் பின் அவர் தன் திறமையால் அவற்றை சமாளிக்கக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை துண்டுகண்டவிடத்து பாதுகாப்புக் குறி இருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை கண்டவிடத்து பாதுகாப்புக்குறி கண்டுள்ளவர்கள் தான்செய்யும் தொழில் வகைகளிலும் வியாபார முறைகளிலும் உத்தியோக முறைகளிலும், நன்மை ஏற்படக்கூடும். இனபந்துக்களாலும் நண்பர்களாலும் வருமானம் வரக்கூடும். தெய்வீகத் தன்மை உடையவராகவும் இருக்கக்கூடும் கட்சியோ மதமோ ஆகியவற்றில் அதிகம் பற்றுடையவராகவும் இருக்கக்கூடும் இவருக்கு ஆபத்துவராது என்றுசொல்லக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! ஆயுள் ரேகை துண்டு பட்ட விடங்களில் அகன்ற சமவெளி காணப்பட்டுள்ள நபருக்கு கிடைக்கக் கூடிய நன்மை திமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை துண்டு பட்டவிடங்களில் அகன்ற சமவெளி உள்ளசாதகர் வெளி இடங்களில் செல்வதால் பகையும் கொடுக்சல் வாங்கலில் தகராறுகளும் அதன்மூலம் பகைமையும் இன்னும் பெணகள் சேர்க்கையால் பலவித நோய்களுடம ஆபத்துக்களும் வரக்கூடும். ஆகையால் இப்படி உள்ளவர்கள், குறை ஆயுள் காலம் உள்ளவர்களாக இவ்வுலகில் வாழக்கூடும் என்று சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா! துண்டுபட்ட ஆயுள் ரேகை உள் முகமாக வந்து காணப்பட்டால் அவைகளால் ஏற்படுவது யாது? மேலும் ஆயுள்ரேகை கொக்கி போல வளைந்து இருந்தால் அதனுல் ஏற்படும் நல்லது கெட்டது யாவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை துண்டு பட்டு உள்முகமாக வளைந்து இருக்கும் நபருக்கு உத்தியோக முறையிலும் இனபந்துக்களாலும் நண்பர்களாலும் வீண் அலைச்சலாலும் சொல்ல முடியாத நஷ்டங்களும் கஷ்டங்களும் உண்டாகும். மேலும் ஆயுள்ரேகை கொக்கிபோல் வளைந்து இருக்கும் நபர் குடிவகைகளிலும் லாகிரி வஸ்துக்களாலும் பலவித நோய்களுக்கு ஆளாக்கப்பட்டு இருப்பார் இவர் பிழைப்பது கஷ்டம் என்று சொல்லப்படுகிறது



மாணவன்: ஐயா! ஆயுள் ரேகையில் நெருக்கமாகத் துண்டுபட்டு காணப்பட்டால் அவைகளால் ஏற்படுபவைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகையில் நெருக்கமாகத் துண்டுபட்டு காணப்பட்ட நபர் சகல தொழில்வகைகளில் பொருள்கள் சேர்க்கக்கூடும்.

ஆனால் அவைகளை கெட்டவழிகளில் செலவுசெய்து பலநோய் நொடிகள் உடலில் உண்டாகக் கூடும். இப்படி உள்ளவர்கள் வாழ்க்கையில் தேக ஆரோக்கியமாக இருக்க முடியாது என்று திட்ட வட்டமாக சொல்லமுடியும்.



மாணவன்: ஐயா! துண்டு பட்ட ஆயுள் ரேகை பெரிதும் சிறிதுமாக இருந்தால் உண்டாகக் கூடியவைகள் யாவை? இன்னும் ஆயுள் ரேகை சிறிது தூரம் துண்டு துண்டாக நன்கமைந்து நீண்டும் காணப்பட்டால் இதனல் அடையக் கூடியவைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! துண்டுபட்ட ஆயுள்ரேகை பெரிதும் சிறியதாக உள்ளவர்கள் பலகெட்ட சேர்க்கையால் பலவித நோய்கள் உண்டாகலாம் இதனல் குடும்பத்தில் பலவித சண்டைகளும் சச்சரவுகளும் உண்டாகக் கூடும். இக்காரணங்களால் மனவேதனையோடு குடும்பத்தை நடத்துவார் என்று தெரியவருகிறது. மேலும் ஆயுள்ரேகை துண்டு துண்டாக நன்கமைந்து நீண்டுஇருந்தால் நோய்நொடிகள் குறைந்து கொண்டு வரும் மனதில் நல்ல எண்ணங்கள் தோன்றும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்; ஐயா! பாசம் அல்லது ஐக்கியரேகைகள் என்றால் என்ன?




ஆசிரியா: தம்பி! கையின் வெளிப்பாகத்திலும் கண்டு அமையப்பெற்று இருக்கும் ரேகை பாசம் அல்லது ஐக்கிய ரேகைகள் என்று சொல்லப்படும் இந்த ரேகை ஒருசில பேர்களின் கையில் தெரியாது இன்னும் ஒரு சில பேர்களின் கையில் இந்தரேகை சக்திவாய்ந்ததாக இருக்கும். இந்த ரேகையை நன்றாக ஆராய்ந்து பார்த்தால், பல விஷயங்கள் தெரியக்கூடும். கை ரேகை நிபுணர்கள் இதை நன்றாக ஆராய்ந்த பின்பே பலா பலன்களை கூறுவார்கள் என்று தெரிய வருகிறது.

மாணவன் : ஐயா! பாசரேகை உண்டாகும் இடத்தில் நான்கு துண்டுகள் இருந்தால் அதனால் ஏற்படும் நன்மைகள் தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! பாசரேகையிற் நான்கு துண்டுகள் இருக்கும் நபர். தன் மனதில் நினைத்த ஒரு பெண்ணை பின் மணப்பர். ஆனால் அவைகள் மூலம் வரும் இன்னல்களை தாங்கிக் கொள்ளுவார் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! பாசத்தில் முதல் ரேகைக்குப் பின் அதே மாதிரியாகவும் சமமாகவும் நன்கு பதிந்த ரேகை காணப்பட்டால் அதனால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?



ஆசிரியர்; தம்பி! பாசத்தின் முதல் ரேகைக்குப்பின் அதேமாதிரியாயும் சமமாயும் நன்குபதிந்தரேகை காணப்பட்டால் நபர் பணத்துக்காக முதல் மனைவி இருக்க, இரண்டாம் திருமணம் செய்து கொள்ளக்கூடும் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா! பாசரேகைஉற்பத்தியில் அழுந்தியும் பிறகு படிப்படியாய் மெலிவுற்று ஒடுங்கி இருந்தால் அதனால் கிட்டக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! பாசரேகை உற்பத்தியில் அழுந்தியும் பிறகுபடிப்படியாய் மெலிவுற்று ஒடுங்கி இருக்கும் நபர் முதலில் ஆசை அதிகமாயும் அதன்மூலம் பல இன்னல்களை அடையக்கூடும், பின்னால் படிப்படியாய் அப்பாசங்களும், இன்னும் தான் என்ற கர்வங்களும் குறையும் பின்னால் சர்வ சாதாரணமாகவே இருக்கக் கூடும் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! பாசரேகைஉற்பத்தியில் மெலிந்தும் பிறகு படிப்படியாய் நன்குபதிந்து காணப்பட்டால் அடையும் காரியங்கள் யாது?

ஆசிரியர்: தம்பி! பாசரேகை உற்பத்தியில் மெலிந்தும் பிறகு படிப்படியாய் நன்குபதிந்தும் இருக்கும் சாதகர் தன் ஆசையை நிறைவேற்ற காதல் விஷயங்களில் அதிக கவனம் செலுத்துவார் என்று கூறப்படுகிறது. இன்னும் கவனிக்க வேண்டியவைகள் பாசரேகையில் தீவு காணப்பட்டவர்கள் தன் வாழ்க்கையில் கஷ்டங்களையும் நஷ்டங்களையும் அனுபவிக்கக்




கூடும் இன்னும் பாசரேகையில் அதிகத் தீவுகள் காணப்பட்டவர்கள் கலியாணம் நல்லபடி செய்து கொள்ளுவார்கள் ஆனல் இருவர் மனமும். ஒருமித்திராத காரணத்தால் குடும்பத்தில் அடிக்கடி சண்டையும், சச்சரவுகளும் உண்டாகக்கூடும் இதைப் பார்த்தவர்கள் இவர்களை இகழ்ந்து பேசுவார்கள்.

மாணவன்: ஐயா! பாசரேகையில் கிராஸ் கண்டு இருந்தால் அடையும் இன்னல்கள் யாது? பாசரேகையில் நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் ஏற்படுவது இன்பமா துன்பமா? இறுதியாக பாசரேகையில் கிளை ஒன்று சூரியமேடுவரைச் சென்று ஒரு நட்சத்திரக் குறியைச் சந்திக்குமாயின் ஏற்படுவது என்ன?

ஆசிரியர்: பாசரேகையில் கிராஸ் கண்டு இருப்பவர்கள் மனைவி மக்கள் இனபந்துக்கள், நண்பர்கள். ஆகிய எல்லோர்களிடமும் சதா சண்டையும், சச்சரவுகளுடன் இருப்பார்கள் எனக் கூற வேண்டும்.




பாசரேகையில் நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் இப்படிப்பட்டவர்களின் எதிரிகள் திடீரென்று மரணமாகக்கூடும் அதன்மூலம் இச்சாதகர் நிம்மதியாக வாழக்கூடும் என்று கூறப்படுகிறது பாசரேகையின் கிளை ஒன்று சூரிய மேடுவரைச் சென்று ஒரு நட்சத்திரக்குறியுடன் காணப்படும் நபர்பெயரும்புகழும் அறிவும் ஆற்றலும் கொண்டஒருவரை காதலிக்கக்கூடும் இதன்மூலம் இவர்கள் வாழ்க்கை இன்புற்று இருக்கக்கூடும் தேக நலத்தையும் நன்ருக பாதுகாத்துக்கொள்ளுவார்கள் தெய்வீகபக்தி அதிகம் உண்டு.

அடுத்தவர்களை கண்டு, அவர்கள் நல்லபடி இருக்கிறார்களே என்று பொறுமை படமாட்டார்கள் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்; ஐயா! பாசரேகையின் கடைசிஇரண்டு கிளையாகசென்று இருந்தால் ஏற்படுவது யாது? இன்னும கிளை மிக நெருங்கி மெல்லியதாக இருந்தால் ஏற்படுவது என்ன?

ஆசிரியர்: தம்பி! பாசரேகையின் கடைசிஇரண்டு கிளையாக சென்று இருக்கும் நபர், முன்செய்த பாவங்களுக்காக கணவனும் மனைவியும் பிரிந்து வாழவேண்டும். இதன்மூலம் பாசகுறைவும் பல, இன்னல்களும் ஏற்படக்கூடும். ஆனால் கிளை மறையும் பொழுதுஇந்த இரண்டு பேர்களும் ஒன்றாக கூடி முன்னைக்காட்டிலும், இன்பமாக வாழக்கூடும், மன வேதனையால் வாடுவார்கள். இதன் மூலம் குடும்பத்திலும், நண்பர்களிடமும், மனச்சச்சரவுகளும், சண்டைகளும் உண்டாகக் கூடும். ஆனல் பிற் காலத்தில் இவைகள் எல்லாம் நீங்கிவிடக்கூடும்.




மாணவன்; ஐயா! பாசரேகை இறுதி, பல கிளைகளோடு குஞ்சம் போல இருந்தால் அடையக் கூடியவைகள் யாவை?

ஆசிரியர் : தம்பி! பாசரேகை இறுதி, பல கிளைகளோடு குஞ்சம் போய் அமையப்பெற்றவர்கள் மனைவி மக்களையும் பிரிந்து வாழக் கூடும். இப்படி இருப்பதால்மன நிம்மதி கிடையாது மனநோய் அதிகமாக இருக்கும். பார்த்தவர்கள் பரிகாசம்செய்வார்கள்இதைப்பார்த்து இவர் மனம் முன்னைவிட அதிக கஷ்டப்படும் இப்படியாக இல்வாழ்க்கையை வெறுத்து விடுவார் என்றும் கூறப்படுகிறது






மாணவன்: ஐயா! பாசரேகையின் சிறு கிளைகள் இருதயரேகையை நோக்கிச் சென்று இருந்தால் அதன் மூலம் அடையக் கூடியபலாபலன்கள் எவை? இன்னும் பாசரேகையில் சிறு கிளைகள் மேல் நோக்கிச் சென்று இருந்தால் அதன்மூலம் அடையக்கூடிய காரியங்கள் யாது?

ஆசிரியர்: தம்பி! பாசரேகையில் சிறுகிளைகள் இருதயரேகையை நோக்கிச் சென்று இருக்கும் நபர்வாழ்வில் தொழில் வகைகளிலும் நஷ்டங்கள் ஏற்படக்கூடும் இன்னும் சொல்ல முடியாத வேதனைகளுக்கு ஆளாக்கப்படுவர் என்று சொல்லலாம்.

பாசரேகையின் சிறுகிளைகள் மேல் நோக்கி இருக்கும் நபர்தொழில் வகைகளிலும் வியாபார வகைகளிலும் அதிகபேராசை கொள்ளுவார். இதன் மூலம் இவர் வாழ்க்கையில் சொல்ல முடியாத துயரங்களையும் நஷ்டங்களையும் இனுபவிக்கக்கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! பாசரேகைதுண்டு பட்டுக் காணப்படில் கிடைகக கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! பாசரேகை துண்டு பட்டுக்காணப்பட்டாலும்இவர்சொல்லமுடியாத வேதனைக் குட் படுவர் அதன்பின் துண்டுபட்ட ரேகைக் குறி கூடும்பொழுது இவர் நன்ருக வாழ்க்கையில் முன்னுக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! பாசரேகையின் இறுதி கொக்கி போல் வளைந்திருக்குமாயின் கிடைக்கக் கூடிய காரியங்கள் யாது?

ஆசிரியர்: தம்பி! பாச ரேகையில் இறுதி கொக்கி போல் வளைந்திருக்கும் நபர் மனைவியைப் பிரித்து வாழக் கூடும். இதன்மூலம் இவர் சொலல முடியாத தொல்லைகளுக்கு ஆளாக்கப்படுவாரென்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! சுக்கிர மேட்டிலிருந்து ஒரு நீண்டரேகை பாசரேகையில் குறுக்கிட்டு இருந்தால் அதனுல் கிடைக்கக் கூடிய காரியங்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! சுக்கிரமேட்டிலிருந்து ஒரு நீண்ட பாசரேகையில் குறுக்கிட்டு இருக்கும் நபருக்கு இனபந்துக்களால் ஆசையும் பாசமும் அற்றுபோகக்கூடும். அதன் மூலம் இவர் வாழ்க்கையில் சொல்ல முடியாத இடையூறுகள் ஏற்படக் கூடும் என்று கூறப்படுகிறது இறுதியாக அவரின் பலாபலன்களை கூட்டியும் குறைத்தும் சொல்லக் கூடும் என்று நம்பப்படுகிறது.



# சூரியரேகை

மாணவன் : ஐயா ! சூரியரேகை என்றால் என்ன? இதன் தன்மைகள் யாது? என்பதை விபரமாக விளக்குங்கள்?




ஆசிரியர்: தப்பி! ஆயுள்ரேகைக்கு அருகிலும் சந்திரமேட்டில் உற்பத்தியாகி மோதிர விரலுக் கடியிலுள்ள ரேகைக்கு சூரியரேகை என்று சொல்லப்படும் இப்படி ரேகை உள்ள நபர்கள் தன் சுய அறிவால் உத்தியோக முறையிலும், வெளிநாட்டு வியாபாரத்திலும் முன்னுக்கு வரக்கூடும். இவர் எப்பொழுதும் அடுத்தவர்கள் ஆச்சரியப்படத்தக்க நிலைமையில் நடந்து கொள்ளுவார்கள் என்று சொல்லப்படுகிறது.

மாணவன்: ஐயா; புத்திரேகைக்கு கீழ் சூரியரேகை உண்டாகி இருதய ரேகையை குறுக்கிட்டு சென்று இருந்தால் அதனால் அடையக் கூடியவைகள் யாது?




ஆசிரியர்: தப்பி! சூரியரேகை புத்தி ரேகைக்கு கீழ் உண்டாகி இருதய இரேகையை குறுக்கிட்டு சென்று இருக்கும் நபர் முதலில் பெண்களாலும் இன்பந்துக்களாலும் உற்ற நண்பர்களாலும் சொல்லமுடியாத தொல்லைகள் அடைந்து இருப்பார். பின்தன் அறிவால் யாவரும் கண்டு அதிசயப்படத் தக்கதொழில் வகைகளும் வியாபார முறைகளிலும முன்னுக்கு வருவார் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! சூரிய ரேகையானது இருதய ரேகைக்கு மேல் சூரிய மேட்டுக்குச் சென்றிருந்தால் அவைகள் மூலம் கிடைக்கக்கூடிய காரியங்கள் யாது? என்பதை சொல்லுங்கள்.

ஆசிரியர்; தம்பி! சூரியரேகையானது இருதய ரேகைக்குமேல் சூரிய மேட்டுக்குச் சென்று இருக்கும் நபர், தன்னுடைய கல்வித்திறமையால் உத்தியோகமுறையிலும் தன் அறிவுத்திறமையால் தொழில்வகைகளில் அதிக செல்வாக்கு உள்ளவராக இருப்பார் இன்னும் பட்டம்பதவிகளும் இவரைத்தேடி வரக்கூடும் தன் வாழ்க்கையை நல்லபடி நடத்திக் கொள்ளுவார் என்று கூறப்படுகிறது.

மாணவன் : ஐயா! விதிரேகை இல்லாத இடத்தில் சூரியரேகை மட்டும் அமைந்திருந்தால் அதன் மூலம் கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! விதிரேகை இல்லாத இடத்தில் சூரியரேகை அமையப்பெற்றவர்கள் தங்களுடைய திறமையால் செய்யும் தொழில் வகைகளிலும் வியாபார முறைகளிலும் முன்னுக்கு வரமுடியும், ஆனால் சிறிது காலம் சூரியரேகை மறைந்து விட்டால் தைரியத்தை கைவிடாமல் முன்னால் சேர்த்து வைத்து இருந்த செல்வத்தின் மூலம் வாழ்க்கையை நடத்தக் கூடும் என்று சொல்லப்படுகிறது.




மாணவன்: ஐயா! சூரிய ரேகையானது ஆயுள் ரேகையிலிருந்து சந்தர்ப்ப ரேகையைப் போல் உண்டாகி சாயலாக சூரியமேட்டுக்குச் சென்று இருக்கும் நபர் அடையும் பலன்யாது?

ஆசிரியர்: தம்பி! அன்னவருக்கு திடீரென்று வெளி நாட்டு வியாபாரத்தாலும் பெண்களாலும் நல்லவருமானத்தைக் கொடுக்கும். இதன்மூலம் இவர் தன் குடும்பத்தையும் இனபந்துக்களையும் எல்லோரும் கண்டு ஆச்சரியப்படத்தக்க நிலைமையில் நல்லபடி வைத்துக் கொள்ளுவார். தேகநலத்தாலும், தெய்விக பக்தியாலும் நீண்ட கால ஆயுள் உள்ளவராக இவ்வுலகில் வாழக் கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன் :ஐயா! சூரியரேகைபோல் விதிரேகையில் கிளை சூரியமேட்டை நோக்கிச் சென்று இருந்தால் அதனால் கிடைக்கக் கூடிய காரியங்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! சூரியரேகைபோல் விதிரேகையின் கிளை சூரியமேட்டை நோக்கிச் சென்று இருக்கும் நபருக்கு இந்த ரேகையாம் நஷ்டம் ஏற்படக்கூடும் ஆகையால் இதனால் ஒன்றும் பிரயோசனம் கிடையாது இது சந்தர்ப்பரேகையே ஆகும் என்றாலும் இந்த நபர் தன் திறமையால் பிற்காலத்தில் நல்ல நிலைமைக்குவரக் கூடும் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! சூரியரேகை சந்திரமேட்டில் உற்பத்தியாகி சூரிய மேட்டுக்குச் சென்று இருந்தால் அவைகள் மூலம் கிடைக்கக் கூடிய நன்மைகள் தீமைகள் யாவை?

ஆசிரியர்: தம்பி! சூரியரேகையானது சந்திர மேட்டில் உற்பத்தியாகி சூரியமேட்டுக்குச் சென்று



இருக்கும் நபர். தன் செல்வங்களை தனக்கும் வைத்துக் கொண்டு பிறருக்கும் கருமம் செய்யக்கூடும் இன்னும் இப்படி உள்ளவர்கள் கவிபாடும் திறமை யுடையவராகவும் அதன் மூலம் புகழும் பொருளும் குவியக் கூடும் என்றும் தேகநலம் கெடாத வராகவும் பெரியோர்களைக்கண்டால் போற்றக் கூடியவராகவும், அவர்களின் சொல்கேட்டு நடப்பவராகவும், அதிக மதப்பற்றுடையவராகவும் தான் என்ற கர்வம் இல்லாதவராகவும் இருக்கக்கூடும். நீண்டகாலம் இவ்வுலகில் இன்பங்களை அனுபவிக்கக்கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன் ; ஐயா! சூரியரேகை நன்ருக பதிந்து இருந்தால் அதனுல் அடையக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர் : தம்பி! சூரியரேகை நன்ருக அமைந்துள்ள சாதகர் திடமான நெஞ்சுரம் கொண்டவராக இருப்பார். தன்னுடைய சுய அறிவுத் திறமையால் செய்யும்தொழில் வகைகளிலும் முன்னுக்கு வர முடியும். சிறந்த கல்வியால் உயர்ந்த பதவிகள் வகிக்கக்கூடும். இவர் தன்வாழ்க்கையில் நல்லபடி இருக்கக்கூடும். என்று கூறலாம்.



மாணவன் : ஐயா! சூரியரேகையில் தீவுக்குறி காணப்பட்டால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர் : தம்பி! சூரிய ரேகையில் தீவுக்குறி காணப்பட்ட சாதகர் தன் செல்வத்தையும் செல்வாக்கையும் இழக்கக் கூடும் இப்படி உள்ளவர்கள் செல்வங்களை எப்படி சேர்த்தாரோ அதை போல் சென்று விடக்கூடும் இன்னும் கடன் வாங்க அஞ்சமாட்டார் என்றும் தெய்வீகபக்தி குறைந்தவர் என்றும் வீண் அலைச்சலும் வீண்பணவிரயங்களும் செய்வார் என்று கூறப்படுகிறது.

9

மாணவன் : ஐயா! சூரியரேகையில் அடுத்தடுத்து தடங்கள் ரேகைகள் குறுக்கிட்டுச் சென்று கொண்டிருந்தால் அவைகள் மூலம் கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் என்ன?

ஆசிரியர் : தம்பி! சூரியரேகையில் அடுத்தடுத்து தடங்கல், ரேகைகள் குறுக்கிட்டு நட்சத்திரக்குறி இருக்கும் சாதகர் செய்யும் தொழில் வகைகளும் வியாபார முறைகளிலும், உத்தயோக முறைகளிலும், தடங்கல் ஏற்படும். இதனால் மன வேதனைப்பட்டு குடும்பத்தில் ஒரே குழப்பமாக இருக்கும் என்று சொல்லப்படுகிறது.

10

மாணவன் : ஐயா! சூரிய ரேகையில் ஆங்காங்கு புள்ளிகாணப்பட்டால் அவைகளால் ஏற்படக்கூடிய பலாபலன்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! சூரியரேகையில் ஆங்காங்கு புள்ளி காணப்பட்ட சாதகர் செய்யும் தொழில் வகைகளும், அடிக்கடி தொல்லைகள் ஏற்படக் கூடும் இதன்மூலம் இவரின் கீர்த்தியும் புகழும் கெடக் கூடும் விரோதிகள் அதிகமாகக்கூடும் கவலை அதிகமாகக்கூடும் பெரும்புள்ளிகள் கண்டு இருந்தால் பெரும்பாலும் கீர்த்திகள் யாவும் சென்றுவிடக்கூடும் இதனால் சந்தர்ப் ரேகைகள் சேர்ந்து இருந்தால் இவைகள் யாவும் சென்று நல்ல நிலைமைக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது. தெய்வீக பக்தி உண்டு இரக்கத்தன்மையும் இரண்டு தேகநலத்தால் இவ்வுலகில் நீண்டகாலம் இன்ப துன்பங்களை அனுபவிக்கக்கூடும் என்றும் கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! சூரியரேகை துண்டு துண்டுகளாக இருந்தால் அதன் மூலம் கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர் : தம்பி! சூரியரேகை துண்டு துண்டுளாக இருக்கும் நபர் செய்யும் தொழில் வகைகள் எல்லாம் தடங்கள் ஏற்படும் இதன் மூலம் முன்னுக்கு வரமுடியாது. இவரின் ஆசைகள் எல்லாம் நிறைவேறுது இவர் ஒரு சிறிய காரியத்தைக்கூட தன்னால் செய்ய முடியாது இந்த குறுக்கிட்ட ரேகைகளில் இணைப்பு சேர்ந்து இருந்தால் இவர் நல்லபடி முன்னுக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது.



மாணவன் : ஐயா! சூரியரேகையில் கடைசியில் நட்சத்திரக்குறி காணப்பட்டால் அதன்மூலம் அடையக் கூடியவைகள் யாது?

ஆசிரியர்: தம்பி! சூரியரேகையின் இறுதியில் நட்சத்திரக்குறி கண்டு இருக்கும் நபர், திடீரென்று ஒருவருடைய செல்வத்துக்கு அதிபராகலாம் தவறினல் புகழும், பெரும் உயர்வும் சிறந்த நடிகராகவும் பேச்சாளராகவும் இருப்பார் இதைப்பார்த்தவர்கள் இவரிடம்மரியாதையாகநடந்து கொள்ளுவார்கள் இவர் தேக நலத்தாலும் நல்ல எண்ணத்தாலும் தெய்வீகபக்தியாலும் நீண்ட காலம் இவ்வுலகில் வாழக்கூடும் என்று கூறலாம்.




மாணவன்: ஐயா! சூரியரேகையில் இரண்டு நட்சத்திரக்குறி கண்டு இருக்கும் நபருக்கு, ஏற்படக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! சூரிய ரேகையிலிரண்டு நட்சத்திரக்குறி உள்ளவர்கள் சிறந்த கல்விமானுகவும் திறமையால் உயர்ந்த பதவிகள் வகிக்கக்கூடும் நாட்டின் தலைவராகவும், மந்திரியாகவும், வரக்கூடும் இவரின் புகழும் நாளுக்கு நாள் ஏறிக்கொண்டே போகும். நீண்டகாலம் செல்வத்துடனும் இவ்வுலகில் சந்தோஷமாக மனைவி மக்களோடும், நண்பர்களோடும், வாழக்கூடும் என்று கூறலாம். சூரியரேகையின் உற்பத்தியிலும் இறுதியிலும் இரண்டு நட்சத்திரக்குறி இருந்தால் பிறந்தது முதல் ஆயுள் காலம்வரைக்கும் செல்வச்சீமானுக வாழக்கூடும் என்று கூறவேண்டும்.






மாணவன்: ஐயா! சூரியரேகையின் இறுதியில் ஒரு தடை ரேகை பதிந்து காணப்பட்டால் அதன் மூலம் கிடைக்கக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! சூரிய ரேகையின் இறுதியில் ஒரு தடை ரேகை பதிந்து காணப்பட்டால் முன்னுக்கு வரமுயலுவார் ஆனால் பல இடையூறுகள் வந்து முன்னேற்றத்தை தடை செய்யும், அதன் மூலம் சொல்லமுடியாத வேதனைப்படுவார் என்று கூறப்படுகிறது.

மாணவன் : ஐயா! சூரியரேகையின் கடைசியில் ஒருகிராஸ் இருந்தால் அதன்மூலம் கிடைக்கக்கூடிய பலாபலன்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! சூரிய ரேகையின் கடைசியில் அந்த குறிகண்டு இருந்தால் இப்படி உள்ளவர்கள் தவறான வழிகளில் சென்று பொருள் வகைகளை இழக்கக் கூடும் இதன் மூலம் தேக நலம் கெட்டு பல நோய் நொடிகளுக்கு ஆளாக்கப்படுவர் இனபந்துக்களும் நண்பர்களும் இவர்களை வெறுக்கக் கூடும். இதனால் இவர் தன் வாழ்க்கையை வெறுத்து ஆயுள்காலம் இவ்வுலகில் வாழக் கூடும்.




மாணவன்: ஐயா! சூரியரேகையின் இறுதி மூன்று கிளைகளோடு ஒரு நட்சத்திரக்குறி இருந்தால் அதன்மூலம் கிடைக்கக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! சூரியரேகையின் இறுதி நுனி மூன்று கிளைகளோடு நட்சத்திரக்குறிகண்டு இருக்கும் நபர் தன்னுடைய திறமையால் யாவரும் கண்டு

ஆச்சரியப்படத்தக்க நிலைமையில் முன்னுக்கு வர முடியும் மனைவியும் மக்களும் இனபந்துக்களும் எவரிடமும் மிக மரியாதையாக நடந்து கொள்ளுவர்கள் செய்விசுபக்தியாலும் தேகநலத்தாலும்நீண்டகாலம் இவ்வுலகில் வாழக்கூடும் என்று கூறப்படுகிறது

மாணவன் : ஐயா! சூரியரேகையின் கிளை இதர மேட்டுக்குச் சென்று இருந்தால் அதன்மூலம் கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! சூரிய ரேகையின் கிளை இதரமேட்டுக்கு சென்று இருக்கும் நபர் நி ழ்ச்சி காலத்தில் நல்ல நிலைமையில் இருப்பார் மக்கள் தலைவராகவும் சிறந்த கல்வியாளுக வும் இருப்பார் இரக்கத் தன்மையுடையவர் செல்வத்தால் கொர்வமுடையவராக இருக்க மாட்டார் உடலை நன்ருக வைத்துக்கொண்டு இவ்வுலகில் வாழக்கூடும்.

# புத்தி ரேகை

மாணவன்: ஐயா! புத்திரேகை குருமேட்டின் அடிவாரத்தில் உற்பத்தியாகி ஒழுங்காய் அமைந்து இருந்தால் அதனுல் கிடைக்கக்கூடிய பலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகை, குருமேட்டின் அடிவாரத்தில் உற்பத்தியாகி ஒழுங்காய் அமைந்து

இருந்தால் இச்சாதகர் விவசாயம் உத்தியோகம் முத லியவைகளில் அதிக செல்வம் உள்ளவராக இருப் பார். இவர் இரக்கத் தன்மை கொண்டவராகவும் அதன்மூலம் தருமம் செய்யக்கூடியவராகவும் வாழ்ந் திடுவார் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! தம்பி! புத்திரேகை சிறியதாக அமைந்து இருந்தால் அதனுல் கிடைக்கக்கூடிய பலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சிறியதாக அமையப்பெற்ற சாதகர் சோம்பல் உள்ளவராகவும் அறிவு இல்லாத காரணத்தால் பல இடஞ் சல்களும் பலகெட்ட செய்கையால் உடல் நலம் கெட்டு அதன்மூலம் நோய் நொடிகள் உள்ளவராகவும் இல்வாழ்க்கையை சரிவர நடத்த முடியாமல் பல இன்னல்களுக்கு ஆளாக்கப்பட்டவராக வாழ்ந்திடுவார் என்று கூற லாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகையும் ஆயுள் ரேகையும் ஒரே அளவில் சிறியதாக அமைந்து இருந் தால் அவைகளால் கிட்டக்கூடிய நல்லது கெட்டது எவைகள்?

ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகை யும் புத்திரேகையும் ஒரே சமயம் சிறியதாக அமைந்து இருந்தால், தொழில் வகைகளிலும் உத்தி யோக முறைகளிலும் வியாபார வகைகளிலும் நஷ்டம் உண்டாகக் கூடும் நண்பர்களாலும் இனபந் துக்களாலும் பல கஷ்டங்கள் ஏற் பட்டு அதன்மூலம் மனவேதனைப் பட்டு சொற்ப ஆயுள்காலம் உள்ளவராக வாழக் கூடும்.



மாணவன்: ஐயா! குறுகிய புத்திரேகையின் இறுதியில் ஒரு நட்சத்திரக்குறி இருந்தால் அதனால் கிடைக்கக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! குறுகிய புத்தி ரேகையின் இறுதியில் ஒரு நட்சத்திர குறி கண்டு இருக்கும் சாதகர் மரணம் எப்பொழுது அருகிலே இருக்கும் மேலும் இவர்களுக்கு மூளைக் குழப்பம் உண்டாகும் அதன் மூலம் தொல்லைகளுக்கு ஆளாக்கப்பட்டவராகவும் ஆயுள் காலம் குறைவாக உள்ளவராகவும் வாழ்ந்திடுவர் தெய்வ பக்தி சுமாராக உண்டு என்றுகூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகை உற்பத்தியிலிருந்து நேரே செல்லுகிறதா அல்லது வளைந்து சென்று இருந்தால் அதனால் கிட்டக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை உற்பத்தியிலிருந்து நேரே செல்லுகிறதா என்பதை அறிந்து அப்படி உள்ள சாதகர் இளம் வயதில் எதுவும் புத்தி இல்லாதவராகவும் அதன் மூலம் பல இன்னல்கள் அனுபவித்த கடைசி காலத்தில் ஒருவராக தன் வாழ்க்கையை நடத்திச் செல்லக்கூடும். என்றும் இவனும் தன்னம்பிக்கை அற்றவராகவும் இரக்கம் இல்லாதவராகவும் இனபந்துக்களையும் பெரியோர்களையும் நண்பர்களையும் கவனித்தும் பின் கவனிக்காதவர் போல நடந்து கொள்ளுவார் என்றும் தெய்பத்தை சரிவர வணங்குவதில்லை என்றும் இன்னும் சொல்ல முடியாத இன்னல்கள் அனுபவிக்கக்கூடும் என்று கூறப்படுகிறது




மாணவன்: ஐயா! புத்திரேகை உற்பத்தியில் ஆயுள்ரேகையுடன் சம்மந்தமில்லாமல் இருந்தால்

அவைகளால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திர ரேகை உற்பத்தியில் ஆயுள்ரேகையோடு சம்மந்தமில்லாமல், இருக்கும் சாதகர் தன் அறிவால் தன்னுடைய தொழிலாகிய விவசாயத்தையோ உத்தியோகத்தையோ வியாபாரத்தையோ நல்லபடி விருத்தி செய்து கொள்ளுவார்கள் தன் திறமையால் அடுத்தவர்களிடம் அன்பாக நடந்து கொள்ளுவார்கள் பெரியோர்களைக் கண்டால் அவர்களுக்கு மதிப்பு கொடுப்பார் என்றும் தன்னுடைய மதர்மா, அல்லது கட்சியோ வளர தன்னால் இயன்ற உதவி செய்வார், தன்னுடைய தேகத்தை சுகாதார முறைப்படி பாதுகாத்துக்கொள்ளுவார் தெய்வீகத்தன்மையுள்ளவராகவும் வாழ்ந்திடுவார், நீண்டகாலம் இவ்வுலகில் வாழ்வார் என்று தெரியவருகிறது.

மாணவன்: ஐயா! சிலர் கையில் புத்திரேகை குருமேட்டில் உற்பத்தியாகி இருந்தால் அவைகளால அடையக்கூடியது யாது? என்பதை எடுத்துக் கூறுங்கள்?




ஆசிரியர்: தம்பி! சிலர்கையில் புத்திரேகை குருமேட்டில் உண்டாகி இருக்கும் நபருக்கு மக்களை ஒன்று கூட்டு அவர்கள் மூலம் தலைவர் என்ற பட்டத்தை பெறக் கூடும், இவர்கள் சதா சிந்தனை செய்துகொண்டே இருப்பார்கள் அடுத்தவர்களின் செல்வத்தின்மேல் ஆசை கொள்ளமாட்டார்; தன்னுடையமக்கள்நலமே தன்னுடைய நலம் என்று கருதக் கூடியவராகவும் இருப்பார் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! புத்திரேகை ஒரு கிளை குருமேட்டை நோக்கிச் சென்று இருந்தால் அதனால் கிட்டக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை உற்பத்தியில் ஒருகிளை குருமேட்டை நோக்கிச் சென்று இருக்கும் சாதகர் நல்ல செல்வசீமானாகவும் பெண்கள் மூலம் முதலில் நஷ்டமும் பின் அதிக லாபமும் பெறக் கூடியவராகவும், தேகநலம் குன்றாது குறையாது வாழக்கூடியவராகவும் தன்கல்வி அறிவாலும், பணத்தாலும் அரசியல் காரியங்களாலும் உயர்ந்த பதவிகள் வகிக்கக் கூடியவராகவும் தெய்வீகத் தன்மை அதிகம் கொண்டவராகவும் வாழக்கூடும் என்று சொல்லப்படுகிறது



மாணவன்: ஐயா! புத்திரேகை உற்பத்தியில் ஆயுள் ரேகையைத் தொட்டு நேரே கையில் குறுக்கே சென்று இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடிய நல்லது கெட்டது எவை?

ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகை உற்பத்தியில் ஆயுள் ரேகையைத் தொட்டு நேரே கையில் குறுக்கே சென்று இருக்கும். சாதகர் தன் அறிவாலும் தன்னுடைய அனுபவத்தினாலும் வெற்றி அடையக் கூடிய காரியங்களில் ஈடுபடுவார், காரியங்கள் செய்யும்பொழுது அவசரப்படாமலும் ஆத்திரப்படாமலும் செய்து முடிப்பார். இவர் எண்ணத்தை பணம் படைத்தவர்களால் ஒன்றும் செய்யமுடியாது, வீண் சண்டைகளுக்கோ, சச்சரவுகளுக்கோ செல்லமாட்டார், யாரிடமும் மரியாதை

யாக நடந்து கொள்ளுவார். ஆகையால் இப்படிப் பட்டவர்கள் இடையூறு இல்லாமல் வாழ்க்கை நடத்துவார்கள்.

மாணவன்: ஐயா! புத்திரேகை சனிமேட்டை நோக்கிச் சற்று வளைந்து போயிருந்தால் அவைக ளால் அடையக்கூடிய நன்மை தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சனி மேட்டை நோக்கிச் சற்று வளைந்து போயிருக்கும் சாதகருக்கு சனி பகவான் பிடித்து விட்டான் என்று சொல்லக்கூடும். நன்மையும் தீமையும் சனிபகவான் அருளைச் சார்ந்து இருக்கிறது இப்படி உள்ள வர்கள் முதலில் தவறுதல்கள் செய் யக்கூடும் பின்னுல் நன்மைகளும் கிட்டக்கூடும் தன் னுடைய அறிவாலும் முன்னுக்கு வரமுடியும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகையில் போல் வளைந்து இருந்தால் இதனுல் அடையும் தீமைகளும் நன்மைகளும் எவை என்பதை எடுத்துக்கூறுங்கள்?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் போல் வளைந்து இருக்கும் சாதகருக்கு கற்பனை சக்தி அதிகம் என்ருலும் தன்னுடைய அனுபவத்திலுலும் வாழ்க்கை நடத்தக் கூடும் கற்பனை சக்தியும் அனுபவமும் ஒன்றுக்கு ஒன்றுமாருக இருந் தால் அதனுல் வாழ்க்கை சீர்கேடு அடையக் கூடும் என்று கூறப்படுகிறது இன்னும் இச்சாதகர் தொ ழில் வகைகளில் வெளிநாட்டு வியாபார முறைகளி லும் இனபந்துக்களின் நல்ல எண்ண உதவியாலும் நண்பர்களின் நல்ல செய்கையாலும் தேக நலம் நல்ல படி இருப்பதாலும் தெய்வீகபக்தியாலும் இவர் தன்

வாழ்க்கையை நல்லபடி நடத்தமுடியும் இதைகண்டவர்கள் ஆச்சரியப்படவும் முடியும் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகை சிறுத்து இருந்தால் அதனால்கிட்டும் நன்மைகள் தீமைகள் எவை? மேலும் புத்தரேகையின் இறுதி சனிமேட்டை அடைவது இன்பமா? அல்லது துன்பமா?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சிறுத்து இருக்கும் சாதகர் எக்காரியத்தையும் பிரியமில்லாமல் செய்வார், அதன் மூலம் தோல்வி கிட்டக்கூடும் பின் மனவேதனை அடையக்கூடும். ஆயுள் காலம் குறைவாகவே காணப்படுவார். ஆகையால் இவர்களைப்பற்றி அதிகம் சொல்லக்கூடாது இன்னும் புத்தி ரேகையின் இறுதி சனி மேட்டை நோக்கித் திருப்பியிருந்தால், இவர்கள் அடிக்கடி நோய் கண்டு மனம் வேதனை அடையக்கூடும் நகங்கள் குழல் பாய்ந்து இருக்கும் கைகள் மஞ்சள் நிறமாகவும் இருக்கும் இவைகளால் பல தொல்லைகளும் துயரங்களும் அடையக்கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகை மேல் நோக்கி சனிமேட்டில் குஞ்சம் போல் இறுதியும் தோன்றுமாயின் அவைகளால் அடையும் நன்மை தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகை மேல் நோக்கி சனிமேட்டில் குஞ்சம் போல் இறுதியில் இருக்கும் சாதகர் தன் மனதில் தோன்றும் எண்ணங்களை நினைத்து மனவேதனை அடையக்கூடும். இதனால் தேக நலம் குன்றி பலநோய்களுக்கு ஆளாக்கப் படலாம் என்றும் பல அபாயமான

வியாதிகள் வரக்கூடும் இதைப்பார்த்து இவர்களின் எதிர் காலத்தை கணிக்கலாம் என்று தெரிய வரு கிறது.



மாணவன்: ஐயா! புத்திரேகை சூரியமேட்டை நோக்கித் திரும்பி யிருந்தால் அந்த கிரகத்துக்குள்ள நன்மை தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சூரியமேட்டை நோக்கித் திரும்பி யிருந்தால் அந்த கிரகத்துக்குள்ள நன்மை தீமைகள் பல உண்டாகும் புத்திரேகை சுபாவமான பாதையில் நின்றும் விலகி செல்வதனுல் பல குறைகளைக் குறிக்கும். ஒருவழி யிலிருந்து வேறுவழிக்கு மனம் திரும்புவது தான் கிரகச் சார்பாகும் இது பாச பந்தத்தில் ஏற்படும் சிக்கலைக் குறிக்கும் சுருங்கச் சொல்லில் மாதரின் ஆசைவலையில் சிக்குவதாகும் என்று சொல்லப் படுகிறது.




மாணவன்: ஐயா! புத்திரேகை இருதயரேகையைத் தொட்டுக்கொண்டு இருக்குமாயின் அதனுல் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை இருதய ரேகையைத் தொட்டுக்கொண்டு இருந்தால் அவைகளால் சுய அறிவு உள்ளவராகவும் குற்றம் குறைகள் கண்டுபின் அதையே செய்ய ஆசைப் படுவார் தன்னடக்கத்தை இழந்து ஆவேசத்தால் செய்யத்தகாத காரியங்கள் செய்வார் இதனுல் பல இன்னல் அடைந்து அதன் மூலம் தன் வாழ்க் கையை பாழ்படுத்திக் கொள்ளுவார் என்று கூறப் படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகை இருதயரேகையைக் கடந்து சூரியமேட்டுக்குச் செல்லுமாயின், அதனால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் யாது என்பதை எடுத்துக் கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை இருதய ரேகையைக் கடந்து சூரியமேட்டுக்குச் சென்று இருந்தால் மனவேதனை அடைந்து கொண்டு இருப்பார், இப்படி இருப்பதால் பலவித நோய்கள் உண்டாகி அதன் மூலம் பணவகைகள் நஷ்டம் ஏற்படக்கூடும் இக்காரணங்களால் குடும்பம் ஒரே குழப்பமாக இருக்கக் கூடும் இன்னும் இனபந்துக்களால் மனவேற்றுமையும், நண்பர்களால் மனக்கசப்பும் உண்டாகக்கூடும் இவர்கள் குறைந்த ஆயுள் காலம் உள்ளவராகவாழ்ந்திடுவர் என்று கூறப்படுகிறது. மேலும் மேற்கண்ட இருரேகைகளின் சந்திப்பில் ஒரு நட்சத்திரக்குறி இருந்தால் அவைகளால் கடுமையான ஆபத்தைக் குறிக்கும்.

மாணவன்: ஐயா! புத்திரேகை புதன் மேட்டை நோக்கிச் சென்று இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடிய பலாபலன்கள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகை புதன் மேட்டை நோக்கிச் சென்று இருக்கும் சாதகருக்கு தானே பணவகைகள் சேர்க்கவேண்டும் என்று எண்ணமும் எதையும் சிந்தித்து செய்யும் திறனும், நேர்மை, அநியாயம் என்ற மனப்பான்மை இல்லாதவராகவும் தனக்கு எப்படியும் பொருள்கள் கிடைக்க வேண்டும் என்ற நினைப்புக் கொண்டவராகவும் வாழக்கூடும் என்றும், தெய்வீக பக்தி சுமாராக உண்டு என்றும் நோய் நொடிகள்

வந்தால் தன் பணம் மூலம் யாவற்றையும் போக்கிக் கொள்ளக்கூடியவராகவும் கடைசியாக இவர் தன்னலம் உடையவராக இருக்கக்கூடும் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! புதன்மேட்டில் மூன்று அல்லது நான்கு சிறுரேகை காணப்படுவதோடு புத்தி ரேகையின் இறுதியும் புதன் மேட்டை நோக்கித் திருப்பி இருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! புதன் மேட்டை நோக்கி புத்திரேகை சென்று இருந்தால் அப்படி உள்ள சாதகர் வைத்திய தொழிலில் அக்கரை உள்ளவராக இருப்பார் இத்தொழில் மூலம் இவர் அதிக பொருள்வகைகள் சேர்க்கக்கூடும் இதனுல் இவர் தன் குடும்பத்தை இனபந்துக்களும் ஆச்சரியப் படத்தக்க நிலைமையில் நல்லபடி வைத்துக் கொள்ளுவார் இரக்கத் தன்மை கொண்டவராகவும் வாழ்ந்திடுவார் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரரேகைசெவ்வாய் மேட்டில் நேராகச் சென்று இருந்தால் அதனுல் கிட்டக் கூடிய பலாபலன்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகை செவ்வாய்மேட்டில் நேராகசென்று உள்ளவர்கள் சிறந்த அறிவாளியாக இருப்பார் இன்னும்செவ்வாய்மேடு கம்பீரமாக இருந்தால் பிறர் சண்டைகளையும் சச்சரவுகளையும் தன் அறிவுத் திறமையால் தீர்த்து வைப்பார் இவர்கள் சிறந்தகுணம் உடையவ ராகவும் எளியவர்களைக் கண்டால் இரக்கத் தன்மை கொண்டவராகவும் வாழ்ந்திடுவார் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! பலபேர்கள் கையில் புத்திரேகை சந்திர மேட்டில் வளைந்தோ நீண்டோ இருக்குமேயானால் அதனால் உண்டாகக் கூடிய நன்மை தீமைகள் எவை? மேலும் புத்திரேகை சந்திரமேட்டை பற்றிக்கொண்டிருந்தால் இதனால் அடையக்கூடிய நல்லது கெட்டது எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சந்திர மேட்டில் வளைந்து நீண்டு இருக்கும் நபருக்கு கற்பனைசக்தி அதிகம்உண்டு தினமும் கற்பனை செய்துகொண்டே காரியங்கள் செய்வார் மிஞ்சின யோசனைகள் செய்வதால் லாபம் கிடையாது ஆசிரியர்கள் பேச்சாளர்கள் கவிவாணர்கள் முதலியவர்களுக்கு இதன்மூலம் நல்ல காரியங்கள் கிட்டக்கூடும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகை சந்திர மேட்டில் தொங்கி கடைசியில் ஒரு நட்சத்திரக்குறி இருந்தால் அவைகளால் ஏற்படும் நன்மை தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகைசந்திர மேட்டில் தொங்கி கடைசியாக ஒரு நட்சத்திரக்குறி கண்டுஇருக்கும் நபர் தன் சொத்துக்கள் மூலம் கிடைக்கக் கூடிய வருமானத்தை வீண் அலைச்சல்களாலும் பெண்கள் விஷயத்தாலும் நண்பர்களின் சேர்க்கையாலும் இழக்கக்கூடும் இதைப் பார்த்தவர்கள் இவரை எள்ளி நகைப்பார். இதைக் கண்டு இவர்மனம் சொல்ல முடியாத வேதனை அடைந்து அதனால் குடும்பவாழ்க்கையில் வெறுப்பு உண்டாகும் என்று கூறப்படுகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகை சந்திரமேட்டில் சென்றபின் கடைசியில் ஒரு சங்கிலிபோல் அமைந்து இருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்கள் யாது?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சந்திரமேட்டில் சென்றபின் இறுதியில் ஒரு சங்கிலிபோல் இருந்தால் இப்படி உள்ளவர்கள் பைத்தியம் பிடித்தவர்கள் போல் இருப்பார்கள் இதனால் மனம் சொல்ல முடியாத வேதனை அடைந்து இவைகளால் நோய் நொடிகள் உண்டாகி பல தொல்லைகள் உண்டாகி குடும்பத்தில் மனக்கசப்பும் ஏற்படக்கூடும் என்று கூறப்படுகிறது,




மாணவன்: ஐயா! புத்திரேகை சந்திரமேட்டில் வளைந்து இறுதியில் ஒரு கிராஸ் குறியுடன் இருந்தால் அதனால் ஏற்படக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சந்திரமேட்டில் வளைந்து இறுதியில் ஒரு கிராஸ்குறி கண்டு இருக்கும் நபருக்கு புத்தி இல்லாத தன்மையைக் காட்டும் இதனால் இவர் தன் தொழில் வகைகளிலும் உத்தியோக வகைகளிலும் வியாபார வகைகளிலும், கிடைக்கக் கூடியபொருள் வகைகளையும் தன் திறமையில்லா தன்மையால் இழக்கக்கூடும். குடும்பத்தில் அடிக்கடி சண்டைகளும் சச்சரவுகளும் உண்டாகி அதன் மூலம் மனவேதனை அடைந்து பலவியாதிகள் உண்டாகி இனபந்துக்களின் மன வேற்றுமையும் உண்டாகி பதில் சொல்ல முடியாத தொல்லைகளும் உண்டாகி தன் வாழ்க்கையை ஒருவாராக நடத்திக் கொண்டு வருவார் என்று கூறப்படுகிறது,

மாணவன்: ஐயா! புத்திரேகை தளர்ந்து சந்திர மேட்டில் விழுந்து விடுமாயின், அதனால் கிட்டக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை தளர்ந்து சந்திர மேட்டில் விழுந்து விட்டால் இப்படி உள்ளவர்கள் அடிக்கடி யோசனை செய்து கொண்டே இருப்பார்கள் இதனால் மனவேதனை அடைந்து பல இன்னல்கள் அடையக் கூடும்

மாணவன்: ஐயா! புத்தி ரேகை ஒழுங்காக குறுக்கே சென்று பிறகு ஒடிந்து சந்திரமேட்டில்திரும்பி இருந்தால் அவைகளால் அடையும் இன்ப துன்பங்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகை ஒழுங்காக குறுக்கே சென்று பிறகு ஒடிந்து சந்திரமேட்டில் திரும்பி இருக்கும் சாதகர் புத்தி கூர்மையுள்ளவராகவும் சுதந்திரப்போக்கும் திடமான எண்ணமும் கொண்டவராகவும் இருக்கக்கூடும். இதனால் இவர் தன் வாழ்க்கையில் நல்லபடி நடந்து கொள்ளுவார் தெய்வீகத் தன்மை கொண்டவராகவும் இருப்பார்.




மாணவன்: ஐயா! புத்திரேகை இறுதியில் இரண்டு கிளைகளாகி ஒன்று மேல்நோக்கியும் மற்றது கீழ்நோக்கியும் சென்று இருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை இறுதியில் இரண்டு கிளைகளாகி ஒன்று மேல் நோக்கியும் மற்றது கீழ்நோக்கியும் சென்று இருக்கும் சாதகர் அறிவும் ஆற்றலும் உள்ளவராகவும், அடுத்தவர்களின் செல்வத்தை நாடாதவராகவும், ஒழுக்கம் உயர்ந்த

குணம் நேர்மை ஆகிய எல்லா அம்சங்களும்கொண்டவராகவும் இருப்பார் பெரியோர்களைக் கண்டால் அவர்களுக்கு கீழ்ப்படிந்து நடந்து கொள்ளக் கூடியவராகவும் இருப்பார், தன் குடும்பத்தை நல்லபடி வைத்துக்கொண்டு வாழ்க்கையை நடத்துவார்.

மாணவன்: ஐயா! புத்திரேகையின் இறுதியின் கிளை கீழ் நோக்கிச் சந்திரமேட்டுக்குப் போயிருந்தால் அவைகளால் கிட்டக்கூடிய நன்மைகள், தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை இறுதியின் கிளை கீழேநோக்கி சந்திரமேட்டுக்குபோயிருக்கும் நபருக்கு கற்பனை சக்தி அதிகம் உண்டு தன் கற்பனையை மனக்கண்முன் நிறுத்தி அதைக்கண்டு சந்தோஷப் படுவர் இவன் தன் திறமையால் பல இன்னல்களையும் இன்பங்களையும் தன்வாழ்நாள் முடிவதற்குள் அடைவார் என்று கூறலாம்.




மாணவன்: ஐயா! புத்திரேகையின் முனை மூன்று சிறு கிளைகளோடு அமைவதால் அதனால் அடையக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! மூன்று சிறு கிளைகளோடு அமையப்பெற்று இருக்கும் நபருக்கு எடுத்த எக்காரியங்களும், ஜெயமுண்டாகும். சோம்பல் உள்ளவராகவும் இருப்பார் ஆனாலும் இறுதி காலத்துக்குள் இவர் நல்ல செல்வாக்கு உடையவராகவும் இருக்கக்கூடும்.



மாணவன்: ஐயா! மெல்லிய புத்தி ரேகையின் அழுத்தமான ரேகை வெட்டு காணப்பட்டால் அதனுல் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! மெல்லியபுத்தி ரேகையில் அழுத்தமான ரேகை வெட்டு காணப்பட்டு இருக்கும் சாதகருக்கு நரம்பு சம்மந்தமான வியாதிகளும், மூளைக் குழப்பமும் இன்னும் பலவிதநோய் நொடிகள் உண்டாகக்கூடும். இரண்டு கைகளிலும் குறிகளிருந்தால் அவை நோய் உண்டாகக்கூடிய சூழ்நிலையை ஏற்படுத்தும் ஒருகையில் மட்டும் குறி இருந்தால் நோய் கடுமையாக இருக்காது.

மாணவன்: ஐயா! ஒருசிலர் கையில் புத்திரேகை ஆரம்பத்தில்விரிந்து இலைபோல் படர்ந்து இருந்தால் அவைகளால் அடையும் இன்பதுன்பங்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! ஒருசிலர் கையில் புத்திரேகை ஆரம்பத்தில் விரிந்து இலைபோல் படர்ந்து இருக்கும் சாதகர் தன் நிகழ்காலத்தில் கஷ்டங்களையும் பல வகை சம்மந்தமான தொல்லைகளையும் அடைந்து, பின் நல்லபடி இருக்கக்கூடும் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகை சங்கிலிபோல் இருந்தால் அதனுல் அடையக்கூடிய நன்மை தீமைகள் எவை?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சங்கிலிபோல் இருக்கும் சாதகர் தான் எடுக்கும் எக்காரியங்களிலும் தடங்கலும் பலவித தொல்லைகளும் ஏற்படக்கூடும் மனம் ஒரே நிலையில் இருக்

காது. இவைகளால் பல இடைஞ்சல்களும் ஏற் படக்கூடும் இதைக் கண்டவர்கள் இவரை நபப மாட்டார்கள் சொற்ப அறிவும் அறபத்தனமும். உள்ளவர் எதையும் யோசனையில்லாமல் செனறு அதன் மூலம் பல இடைஞ்சல்களும் வரக்கூடுப. என்று கூறப்படுகிறது, இவரைப்பற்றி அதிகம் கூற வேண்டியதில்லை.



மாணவன்: ஐயா! புத்தி ரேகை ஆரம்பத்தில் சங்கிலிபோல் அமைந்து ம பின் செம்மையாகஇருக்குமேயானல் இதனல் ஏற்படக்கூடிய நன்மைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகை ஆரம்பத்தில் சங்கிலிபோல் அமைந்தும் பின் செம்மையாக இருக்கும் சாதகருக்கு கலகத்தால் மனவேதனையும் பின் அகன்று விடக்கூடிய நிலைமையும் குறிக்கும் ஆனல் திடீரென்று ஏற்படாது. நாள் ஆக ஆக தெரியும் இதைப்போலவே புத்தி கூர்மை படிப்படியாக விருத்தியடையும் அதன்பின் இவர் தன் வாழ்க்கை நல்ல படி நடத்தக்கூடும்.

மாணவன்: ஐயா; புத்திரேகை ஒன்றேயாயினும் இரண்டு மூன்று விதமாய் மெலிந்தும் தடித்தும் காணப்படுவதால் உண்டாகக் கூடிய காரியங்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை ஒன்றேயாயினும் இரண்டு மூன்று விதமாய் மெலிந்தும் தடித்தும் கண்டிருந்தால் அப்படி உள்ளவர்கள் தருமம் சிலகாலம் செய்யக்கூடும். இவைகள் மூலம் மனவேதனை அடையக்கூடும் இவை கால அளவை குறிக்கும். இந்த ரேகை நன்கு பதிந்திருந்தால் ஆழ்ந்த அறிவுத்திறமையைக் குறிக்கும் மூளை விருத்தியைப்பற்றி அதிகம் சொல்ல முடியாது ஏற்றத்தாழ்வுகள் இருந்தே தீரும்

கடைசியாக பெரியதாக உள்ள ரேகைகள் மாறிக் கொண்டே வரும் என்பதையும் குறிக்கும்.



மாணவன்: ஐயா! புத்திரேகையில் சிலும்பலான சிறு பிளவுபட்டு இருந்தால் அவைகளால் உண்டாகக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் சிலும் பலான சிறுபிளவுகள் இருந்தால் நல்ல அறிகுறிதான். இப்படி உள்ளவர்கள் பலவிதமாக முன்னேற்றம் அடைவார்கள் அதன்மூலம் சிறந்த ஆசாமியாகவும், அடுத்தவர்கள் பாராட்டத்தக்க நிலைமையில் தன் வாழ்க்கையை நடத்திச் செல்லுவார் என்று கூறப்படுகிறது.



மாணவன்: ஐயா! புத்தி ரேகையில் சிலும் பலான குறிகள் சற்று நீளமாகக் காணப்பட்டால் அதனால் அடையக் கூடியவைகள் யாவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் சிலும் பலான குறிகள் சற்று நீளமாகக் கண்டுள்ள சாதகருக்கு தொழில் முறைகளிலும் உத்தியோகமுறைகளிலும் வியாபாரவகைகளிலும், நஷ்டம் ஏற்படக்கூடும் சிந்தனை என்பது சிறிதளவும் இடையாது வீண் அலைச்சலால் பொருள்கள் கைவிட்டு போகக்கூடும் சதா கனவு காண்பர், வீண் சனவாகவே முடியும் இப்படியாக பல இன்னல்களை தன்வாழ் நாள் முழுவதும் அனுபவிப்பார்.

மாணவன்: ஐயா புத்திரேகையில் சிலும்பக்குறி கீழ்நோக்கி கண்டு இருந்தால் அவைகளால் கிட்டக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் சிலும்பக்குறி கீழ்நோக்கி இருக்கக் கூடிய சாதகர் தைரியமில்லாதவ ராக இருப்பார் தன்வாழ்வுக்கு வரும் இடையூறுகளை எதிர்த்து போராட தைரியம் இல்லாதவராகவும், எந்த தொழில்களையும் சுலபமாக முடித்து விடலாம் என்ற எண்ணமும் அதன் மூலம் தோல்வியையும் மனக்கஷ்டத்தையும் அடை யக் கூடும் இப்படி உள்ளவர்களுக்கு நல்ல அறிவு டையவர்கள் பதில் சொன்னால் ஏற்றுக் கொள்வார் கள் என்று தெரிய வருகிறது.

மாணவன்: ஐயா! புத்திரேகையின் கிளை குரு மேட்டை நோக்கிச் சென்று இருந்தால் அதனால் அடையக்கூடிய நன்மைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகையின் கிளை குருமேட்டை நோக்கிச் சென்று இருக்கும் நபர் தன் அறிவாலும் தன் நல்ல நடத்தையாலும் முன்னுக்குவர முடியும். இவரைப் பட்டமும் பதவிக ளும் தேடி வரக் கூடும். இவரிடம்யாவ ரும் அன்பாக பழகுவார்கள். அதைப் போலவே இவரும் அடுத்தவர்களிட மும் அன்பாக இருப்பார் தான்பெரிய வன் என்ற எண்ணம் கிடையாது பெரியோர்களைக் கண்டால் கீழ்படிந்து நடப்பார் இரக்கத்தன்மை கொண்டவராகவும் இருப்பார், தெய்வீக பக்தியால் நீண்ட ஆயுள் காலம் உள்ளவராகவும் இருப்பார்.

மாணவன்: ஐயா! புத்திரேகையின் கிளை சனி மேட்டை நோக்கிச் சென்று இருந்தால் அதனால் கிட்டக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! சனி ஆதிக்கத்துக்குள்ளவர்கள் சிறந்த செல்வாக்குடையவராகவும் நேர்மை அறிவும் ஒழுக்கம் உள்ளவராகவும் இருப்பார் எதற்கும் இவர் சனிக்கிரகம் இருப்பதால் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளவேண்டும்.

மாணவன்: ஐயா! புத்திரேகையின் கிளை மேல்நோக்கி இறுதியில் ஒரு நட்சத்திரக்குறி கண்டு இருந்தால் அதனால் கிடைக்கக் கூடிய பலாபலன்கள் எவை?




ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகையின் கிளை மேல்நோக்கி இறுதியில் நட்சத்திரக்குறி கண்டு இருக்கும் நபர் தான் செய்யும் தொழில் வகைகளிலும், உத்தியோக முறையிலும், லாபமும்பெயரும்கிட்டக் கூடும் அறிவுத்திறமையால் நல்லபடி குடும்பத்தை நடத்துவார், தேகத்தை நன்ருக பாதுகாத்துக் கொண்டு இவ்வுலகின் இன்பதுன்பங்களை அனுபவிப்பார்.




மாணவன்: ஐயா! புத்திரேகையின் கிளைகளின் இறுதியில் நட்சத்திரக்குறி இருந்தால் உண்டாகக் கூடிய நன்மைகள் எவை? தீமைகள் எவை? மேலும் புள்ளி, கிராஸ், அல்லது தீவுடன் காணப்பட்டால் அதனுல் கிட்டக் கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையின் கிளைகளின் இறுதியில் நட்சத்திரக்குறி கண்டு உள்ளவர்கள் அதிர்ஷ்டசாலியாகவும் இருப்பார் புள்ளி கிராஸ் அல்லது தீவுடன் காணப்பட்டால் எதிலும் ஜெயத்தைக் குறிக்கும் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகையின் கிளை இருதய ரேகைக்குச் சென்று கலந்து இருந்தால் அதனால் அடையக்கூடிய நன்மைகள் தீமைகள் எவை?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகையின் கிளை இருதயரேகைக்குச் சென்று கலந்து இருக்கும் சாதகருக்கு, இருதய ஆட்சிக்கு உட்பட்டவர் எனக்கருதலாம், புத்தி தடுமாற்றம் உண்டாகக் கூடும். ஆனாலும் தெய்வீக பக்தியால் அவைகள் எல்லாம்நீங்கக்கூடும் என்றும் கூறப்படுகிறது மேலும் தெய்வம் இல்லாதவர் என்றுகூறும்நபரை தன் திறமையால் அடக்கிவிடுவார். கவலை மிகுந்தவராகவும் இருக்கக்கூடும் நோய்க்கு உட்பட்டவராகவும் பிற்போக்குடையவராகவும் இருப்பார் சதா சிந்தனை செய்துகொண்டு இருப்பார். ஆயுள் காலம் இவர் உடலைவைத்து இருக்கும் தன்மையை பொறுத்திருக்கிறது. இரக்கத்தன்மை உடையவர் என்றும் அடுத்தவர்களை கண்டால் அன்புடன் பேசக்கூடியவராகவும் இருக்கக்கூடும் என கூறவேண்டும்.



மாணவன்: ஐயா! புத்திரேகையில் அடுத்தடுத்தும் குறுக்கிட்டும் சிறு ரேகைகள் தொடர்ந்து இருந்தால் அவைகளால் உண்டாகக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் அடுத்தடுத்துக் குறுக்கிட்டு சிறு ரேகைகள் தொடர்ந்து இருந்தால் இவைகள் சந்தர்ப்பரேகைகள் ஆகாது. இந்தக் குறுகிட்ட சிறுரேகைகள் நன்கு பதிந்து புத்திரேகையை

வெட்டியது போலக் காணப்பட்டால் மூளை சம்மந்தமான வியாதிகள் உண்டாகக்கூடும். குறுக்குரேகை சிவப்பாக இருந்தால் ஜுரம், தலைவலி காய்ச்சல் முதலிய நோய் நொடிகள் உண்டாகக்கூடும். மேலும் குறுக்கே சிறுரேகைகள் சென்று இருந்தால் அதனால் கடுமையான ஜுரத்தைக் குறிக்கும் இவர்களுக்கு அமைதி கிடையாது என்று தெரியவருகிறது.




மாணவன்: ஐயா! புத்திரேகையில் தீவு காணப்பட்டால் அதன் மூலம் கிடைக்கக்கூடிய நல்லது கெட்டது எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் தீவு உள்ளவர்கள் எப்பொருளைக்கண்டும் ஆசை கொள்ளுவார் அது கிடைக்கவில்லை என்றால் மனவேதனைபடுவார், அடிக்கடி நோய்நொடிகள் மூலம்பலதொல்லைகளும் உயிருக்கு ஆபத்து ஏற்படக்கூடிய சூழ்நிலை உண்டாகுமென்று தெரியவருகிறது ஜாக்கிரதையாக இருப்பது நல்லது என்று தெரியவருகிறது.




மாணவன்: ஐயா! புத்திரேகையில் புள்ளிக்குறி காணப்பட்டால் கிடைக்கக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையில் புள்ளிக்குறி உள்ளவர்கள் பெரிய கஷ்டத்தையும் அனுபவிப்பார், மூளை சம்மந்தமான வியாதிகள் உண்டாகக்கூடும் ஆகையால் இவர் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுவது நலம் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! புத்திரேகை துண்டு துண்டாய் இடைவழி காட்டிச் சென்றிருந்தால் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்கள் எவை?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகைதுண்டு துண்டாய் இடைவழிகாட்டிச் சென்று இருக்கும் சாதகருக்கு செல்வ வகைகள் கிடையாது இதனால் காரியங்கள் தொடர்ந்து நடக்காது நோய் நொடிகள் வரக்கூடும் என்று தெரியவருகிறது என்று சொல்லப்படுகிறது.



மாணவன்: ஐயா! புத்திரேகை துண்டுகளாகப் படிகட்டைப் போல் தொடர்ந்து இருந்தால் உண்டாகக் கூடிய நன்மைகள் தீமைகள் எவை?

ஆசிரியர்: தம்பி! மேற்கண்ட ரேகை உள்ளவர்கள் அறிவில்லாத தன்மையும் அடிக்கடி மனவேதனையையும், பலவித தொல்லைகளும் அதன் மூலம் குடும்பசச்சரவுகளும் உண்டாகக்கூடும். மூளை வியாதிகள் வரக்கூடும். இவர் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுவது நலம் என்று கூறப்படுகிறது.




மாணவன்: ஐயா! புத்திரேகையானது வில்போல் வளைந்து இருதய ரேகைக்கும்குருமேட்டிற்கும் சூரியமேட்டிற்கும் சேர்ந்ததைப் போல் வளைந்த ரேகை ஒன்று விழுந்திருந்தாலும் ஆயுள்ரேகைக்குள் சுக்கிர மேட்டில் சிலபுள்ளிகள் காணப்பட்டாலும் அதனால் நன்மையா அல்லது கெடுதலான பலன்கள் ஏற்படுமா இதை தெளிவாக விளக்கவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகைக்குமேல் குருமேட்டிற்கும் சூரிய மேட்டிற்கும் பிறைபோன்ற வரிவிழுந்திருந்தால் சிலகாலம் அதிக செல்வாக்குட னிருந்து இறுதியில் கஷ்டங்களை அநுபவிக்கக்கூடும் அதிலும் சுக்கிரமேட்டில் சிலபுள்ளிகள் காணப்பட்டால் எதையும் செய்யலாமென துணிகரமுண்டு, ஆனால் அதில் ஒருவித லாபங்களையும் அடைய முடியாது. எக்காரியத்திலும் அபஜெயத்தைத்தான் அடையக்கூடும்.




மாணவன்: ஐயா! புத்திரேகையானது ஆயுள் ரேகையுடன் சம்மந்தப் படாமல சற்று வளைவுபட்டிருந்தாலும் சனிமேட்டில் இரண்டு சிறுரேகைகள் கண்டிருந்தாலும் அதற்கென்ன பலனை கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! சனிமேட்டில் இரண்டு சிறு துண்டுகள் காணப்பட்டால் கவலையால் மனம் கலங்கச் செய்யும். அதே நிமிஷம் சற்று மனம் ஆறுதலடையும், ஆனால் புத்திரேகையானது ஆயுள்ரேகையுடன் சம்மந்தப்படாமலிருந்தால் அவன் ஆயுள்கால பரியந்தம் புத்தி சுவாதீனமான நிலையில் நில்லாது நாளும் கீழ்வெட்டான வார்த்தையாகப்பேசிஉறுப்படாத பேர்வழியாக இருப்பான் என்று கூறலாம்.



மாணவன்: ஐயா! அதாவது புத்திரேகை கடைசிவரைக்கும் ஒழுங்கான முறையில் இல்லாமல் உள்ளங்கையின் முக்கால்பாகம் சென்று துறடு போல் நின்றிருந்தாலும் இருதயரேகையானது சற்று துண்டுபட்டுவரைகளும் தீவுகளும் துண்டு பட்டும் ஆயுள் ரேகையின் நடுவில் ஓர் வட்டக்குறி கண்டிருந்தாலும் அதற்குப் பலன் எப்படி?

ஆசிரியர்: தம்பி! உனது அறிவிற்கு மெச்சினேன் புத்திரேகையானது ஒழுங்கான முறையில் இல்லாமல் இறுதி முடிவதற்குள் துறடு போன்ற குறி கண்டிருந்தால் எதையும் தனது புத்தியின் சாதுர்யத்தினல் செய்வதற்கு ஆரம்பிக்கலாம். ஆனுல் அக்காரியத்தை அவர் சாதிக்க முடியாது எல்லாம் முடிவடையும் தருவாயில் அதற்கு ஒர் தடையுண்டு தவிர. இருதய ரேகையிலும் சற்று துண்டுபட்ட ரேகையானுல் மனமும் சற்று நிம்மதியிருக்காது அதில் தீவுக் குறிகள் கண்டால் கவலையாலும் கொஞ்சம் சளிப்பு உண்டாகலாம். இருந்தாலும் தம்பி இறுதியில் ஓர் முக்கியமான அம்சமுண்டு அது என்னவெனில் ஆயுள் ரேகையின் அளவுப்படி 35-வது வயதில் இரட்டைக்குறி கண்டிருப்பதால் இவருக்கு ஓர் ஆபத்தான கெண்டமும் ஏற்பட காரணமுண்டு அதில் தப்புவது மகா அறிது. அப்படி தப்பினுல் மேற்சொல்லிய இடைஞ்சல்களை தவிர்த்து ஓர்பெரிய குடும்பஸ்தனுகவும் பலபேர்களின் முன்னிலையில் பணவசதியுள்ள சீமானுகவும் விளங்கக்கூடும்.




மாணவர்: ஐயா! கரத்திலுள்ள புத்திரேகையானது துண்டுதுண்டாகவும் அதற்கு மேலுள்ள இருதய ரேகை அதுவும் துண்டு துண்டாகவும் படுமானுல் அதனுல் அவர்களுக்கு நன்மையுண்டா? அல்லது தீமையுண்டாகுமா?

ஆசிரியர்: தம்பி! உலகில் பலபேர்களுக்கும் பலவிதமான ரேகைகள் அமைவது அதன் காரணம் தான் உலகமே பலவிதமாக காணப்படுகிறது இருந்தாலும் கூடியவரையில் சில ரேகைகளின் பலன்களை கூறிவருகிறேன். அதாவது புத்திரேகையானது துண்டுதுண்டுகளாகக் காணப்பட்டால் வேலைக்கொரு குணமும் கோழைத்

தனமான புத்தியும் காணலாம், அதிலும் இருதய ரேகை துண்டுபட்டிருந்தால் பல கொடுமைகளைப் புரியும் கொடூரமான இருதயமும் சில சமயங்களில் இளகிய உள்ளமும் பலவிதமாக காணக்கூடும்.

மாணவன்: குருவே! புத்திரேகையானது மெல்லிய கோடாக காணப்பட்டாலும், ஆயுள் ரேகையும் முடிவுவரையில் காணுமலிருந்தால் அதற்கு என்னவெனக் கூறலாம்?




ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகையானது மெல்லியதாக காணப்பட்டால் சிலருக்கு புத்தியின் நிலையை அவ்வளவு திடமாக சொல்லமுடியாது அற்பமான குணம் அமைப்பில்லாத தொழில் ஆராய்ச்சியில்லாத புத்தியாகும் இதுதான் இத்தன்மை யென்ருலும் ஆயுளையும் பூர்ணமாக கூற முடியாது அதாவது 70 வயது எனக் கூறலாம் அந்தவயது வரையிலும் கூட நாகரீகமான முறையில் நடவாமல் கர்ளுடகப்பேர் வழியாகத் தோன்றுவார்.




மாணவன்: குருவே! புத்திரேகையும் இருதய ரேகையும் பின்னலிட்டு தோன்றி அதிலும் இடையில் ஓர் X குறி கண்டிருந்தாலும் அல்லது இருதய ரேகைக்கு மேற்புறத்தில் பல ரேகைகள் காணப்பட்டாலும் அதனுல் நன்மையுண்டா? அல்லது தீமையைத் தான் காணமுடியுமா?

ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகையுடன் இருதயரேகை பின்னலிட்டு தோன்றினுல் நல்ல உள்ளமும் ஏழை எளியவர்களின்மீது விஸ்வாசமும்

24

அன்பான பரோபகார சிந்தையும் பெற்றிருப்பார் அதிலும் —குறி கண்டிருந்தால் நாள் போகப் போக பல பேர்களின் கொடிய சாவகாசத்தினால் நல்ல குணத்தை அறவேயொழித்து தீயதான காரியங்களி லீடுபட்டு பலபாவங்களை செய்யத் துணியலாம். அதிலும் இருதயரேகைக்குமேல் பல துண்டு ரேகைகள் உதயமானால் தைரியத்துடன் எந்தக் காரியத்திலும் பிரவேசித்து பின்னால் துன்பத்தையடைவார் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகை ஒழுங்கானமுறையில் நேராக இல்லாமல் வளைந்து இருந்து இருதயரேகையின் முடிவில் ரேகை இருபாகமாக பிளவு பட்டிருந்தால் அதனால் அவர் நன்மையடைவாரா தீமையடைவாரா?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகை வளைவு கண்டிருப்பதைப்பற்றி கவலையில்லை ஆனால் இருதயரேகை முடிவில்பிளவுபட்டிருப்பதுதான்இதற்கு பலன் சொல்லவேண்டும். அதிலும் பிளவுமேல்நோக்கி சென்றிருக்கிறது அதனால் இவருக்கு நல்ல உள்ளமும் பரோபகாரத் தன்மையும் சீரும் சிறப்பும் செல்வாக்கும் உண்டு என்று கூறலாம்.




மாணவன்: ஐயா! புத்திரேகையானது சற்று வளைவுபட்டும் இருதயரேகை குருமேட்டில் ஆரம்பமாகி அங்காரகமேடு வரையில் சற்றுவளைவாக தென்பட்டால் அதன் நன்மை தீமை யாது?

ஆசிரியர்: தம்பி! பாசரேகைக்கும் புத்திரேகைக்கும் நடுவில் அமைந்திருக்க வேண்டிய இருதய ரேகை

யானது குருமேட்டின்மேல்நோக்கி உதயமாகியிருப்பதால் கள்ளமில்லாத சிந்தையும் காருண்ய குணமும் கருத்துடன் எதையும் கண்ணேக்கமாக முடிக்கும் உள்ளமும் பொருந்தியிருக்கும் புத்திரேகை சற்று வளைவு பட்டிருந்தால் அதைப்பற்றி நன்மையோ தீமையோ அடைய முடியாது எல்லாம் சமப்பலனுகவே நடக்கும்.




மாணவன்: ஐயா! புத்தி ரேகையும் இருதயரேகையும் சரியான முறையில் காணப்பட்டு ஆயுள்ரேகை மத்தியில் மணிக்கட்டுக்கு சற்று மேலே நின்றிருப்பதால் அதனுல் என்ன நேரக் கூடும்?

ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகையும் இருதய ரேகையும் சரியான முறையில் இருப்பதால் இவர்களுக்கு புத்தி அறிவு ஞானம் பக்தி ஒழுக்கம் முதலிய பலவிதமான அமைப்புகளுக்கு குறைவு ஏற்படாது ஆனுல் ஆயுள் மாத்திரம் சுமார் 80 எனக் குறிப்பிடலாம்.

மாணவன்: ஐயா! ஒருவருக்கு புத்திரேகை சரியான முறையிலிருக்கிறது இருந்தாலும் இருதய ரேகை முன்னும் பின்னும் முடிவுகாட்டாமல் நடுப்புறத்தில் மாத்திரம் தோன்றினுல் அதின் பலன் என்னவென சொல்ல வேண்டும்?



ஆசிரியர்: தம்பி! நீ கேட்ட கேள்வியானது மிகவும் சூக்ஷமமான தாயினும் கூறுகிறேன் சற்று கவனத்தை செலுத்துவாயா, அதாவது இருதய ரேகை முன்னும் பின்னும் முடிவு காட்டாமல் நடுபாகத்தில் மாத்திரம் இருந்தால் இவர் சுமார் 20 வயது வரையில் சுத்தமற்ற இருதய

முடையவராவர். பலவிதமான துர்சேஷ்டைகளில் ஈடுபடுவார், 21-வது முதற்கொண்டு நன்மையான குணபாவமுடன் வாழ்ந்து குடும்பத்தி லீடுபட்டிருப்பார் ஆனால் ஆயுள்பாகம் முடிவான நெருக்கடியில் சிலகாலம் கடினமான மனதைகொண்டு மார்புவலியினால் மாரகதிசை ஏற்படவும் மார்க்கமுண்டு

மாணவன்: ஐயா! புத்தி ரேகை துண்டுதுண்டாக புள்ளிபோல்கண்டிருக்கிறது தவிர, இருதயரேகையோ முன்னே சற்றுதூரம் தள்ளி அமைந்திருக்கிறது இதன் பலன் என்னவென்று அறியமுடியுமா?



ஆசிரியர்: தம்பி! அவசரப்படாதே! இருதய ரேகை முன்னே சற்று தள்ளப்பட்டு அமைந்திருந்தால் முன்சொன்னபடியே இருபது வயதுக்கு மேல் நல்ல இளகிய உள்ளத்தையுடையவராவார் ஆனால் புத்திரேகை மாத்திரம் துண்டுதுண்டாக புள்ளிபோல் கண்டிருந்தால் இவர்களின் குணமே பேதகமாக இருக்கும் இதற்கு கடைசி வரை சந்தோஷமில்லையென்று கூறலாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகையானது சிலம்பலாகவும், கதிர்போலவும் இருப்பதுடன் இருதயரேகை சனி மேட்டிலிருந்து உதயமாக முடிவு காட்டியும் ஆயுள்ரேகை மணிக்கட்டிற்கு மேலே அதிக சந்து காட்டியிருக்குமானால் அதனால் பலன் யாது?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சிலும்பலாகவும், சுருள் போலவும் காணப்பட்டால் இவர்களுக்கு சுய புத்தி இருக்காது. சொல் புத்தியும் கேட்க அவர்களின் மனது இடந்தராது இதனால்பலவிதமான சஞ்சலங்களையும் பொருள் விரயங்களையும் அடையக்கூடும் தவிர, சனிமேட்டி

லிருந்து இருதயரேகை அமைந்திருந்தால் சனிதிசை யோ அல்லது சனிபுத்தியோ வரும் கால முதல் நல்ல குணபாகம் பொருந்தியவராகவும் இதற்கு முன் கொடிய சிந்தையுள்ளவர்களாகவும் விளங்கக் கூடும். அல்லாமலும் ஆயுள்ரேகை அரையோ அரைக்கால் பங்கு இவருக்கு நின்றிருப்பதால் 60-வயது வரையில் ஆயுளை நிர்ணயிக்கலாம்.




மாணவன்: ஐயா! புத்திரேகையை பற்றி என் மனது மேலுக்குமேல் சந்தேகமடைகிறது அது என்னவெனில் புத்திரேகையானது முடியுமிடத்தில் மேல்நோக்கி சுருள்போல் சிறுதுண்டு கோடு தென்படுகிறது அல்லாமலும் சுக்கிரமேட்டிற்குமேல் ஓர் வேல் குறி காணப்படுகிறது. அதன் பலன் என்ன வென்று கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! சந்தேகத்தை நிவர்திப்பதே தகுந்த ஆசிரியரின் கடமையாகும். நீ கேட்ட ரேகை யின் அமைப்பு மிகவும் உசிதமானது. ஆதலால் புத்தி ரேகையானது கடைசியில் சுருள்போல் மேல்நோக்கி சிறுகோடு சென்றால் மேன்மையான குணமும் பெருந் தன்மையும், எக்காரியத்திலும் வெற்றிகரமும், புத்தி யின் நுட்பத்தினல் பலவிதத்திலும் பொன் பொருள் சேர்க்கையும் ஏற்படும் ஆனல் சுக்கிரமேட்டின்மேல் குறி காணப்பட்டால் தெய்வபக்தியிற் சிறந்து தெய் வத்தன்மை பொருந்தியவராக விளங்கக்கூடும்.



மாணவன்: ஐயா! புத்திரேகை இதுகளெல்லாம் ஒழுங்கான முறை யிலிருந்தால் அதற்கு என்ன பலன் கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையும் இருதயரேகையும் ஒன்றுபட்டு ஒழுங் கான முறையில் காணப்பட்டால் நீதி நெறியும் நேர்மையான புத்தியும் கட்

டுப்பாடான சட்டதிட்டமான மனேபாவமும், மனச் சிக்கலில்லாமலும் குடும்பத்தில் கவலையின்றி வாழக் கூடும்.

மாணவன்: ஐயா! அடிக்கடி வாழ்ந்திருப்பினும் உள்ளங்கையில் சிலசிக்கலான ரேகைகள் காணப்பட்டால் அதற்கு என்ன சொல்வது?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையில் சிக்கலான ரேகைகள் காணப்பட்டால்எவ்வளவு செல்வாக்கான குடும்பமாக இருந்தாலும் காரணமில்லாமல் சிலசண் டைச்சச்சரவுகள் ஏற்படலாம். சிக்கலான வழக்குகள் ஏற்படலாம் ஆனுல் முடிவில் மாத்திரம் செயமடை வது திண்ணமெனக் கூறலாம்.

மாணவன்: ஐயா! புத்திரேகையானது ஓர் வில் போல் அடையாளமாகவும் அதற்கு மேலிருக்கும் இரு தயரேகையும் அடிப்பாகத்திலிருக்கும் ஆயுள் ரேகை யும் சங்கிலிபோ லிருக்குமானுல் அதனுல் என்ன பலன்?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகை வில் போன்று இருக்குமானுல் தீர்க்க மிகுந்ததைரியமான தத்துவங்களும் எதற்கும் தானே முதன்மையாக நின்று காரியங்களை சாதிக்கும் குண பலமும் பொருந்தும், இருதயரேகை சங்கிலிபோல் இருக்குமானுல் எந்த காலமும் ஏக்கங்கொண்ட மனதாக இருப்பார். இவரால் எக்காரியமும் சாதிக்கும் தன்மையிருந்தாலும் மிகவும் சிக்கலாக இருக்கும் ஆயுள் ரேகையினுல் பலவிதமான நோய் கள் பாதிக்கப்பட்டாலும் ஆயுளை அவ்வளவு அற்ப மாக சொல்லி விட முடியாது.

மாணவன்: ஐயா! புத்திரேகையும் இருதயரேகையும் முடிவடையுமிடத்தின் நடுபாகத்தில் ஓர் வட்டக் குறியாவது வளைவுக்குறியாவது கண்டிருந்தால் அது நன்மையா அல்லது தீமையா?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையும் இருதயரேகையும் முடியுமிடத்தில் மேற்கண்ட இரண்டு ரேகைகளுக்கும் மத்தியில் ஓர் வளைவுக்குறியாவது வட்டக்குறியாவது கண்டிருந்தாலிவர் தன் வாழ்க்கையில் ஒருவிதமான இன்னல்களையும் காண முடியாது குடும்ப விஷயத்தில் மிகவும் கண்காணிப்பாக நடந்து கொள்வார்கள் ஆனால் இவர்கள் தான் தேடிய பொருளாலோ அல்லது பெரியோர்களின் பொருளாலோ முன்னேற்றமடையமாட்டார்கள். சதாகாலமும் இவர்களின் வாழ்க்கையில் தரித்திரமாகவே இருக்கும்.




மாணவன்: குருவே! புத்திரேகை ஆரம்பத்திலேயே ஒரு சிறு ரேகை சனிமேட்டை நோக்கிச்சென்று இருதயரேகையை தொட்டுக் கொண்டிருப்பதால் அதற்கு என்ன பலன் கூறலாம்?



ஆசிரியர்: தம்பி! இதுபோன்ற ரேகை யாருக்கு இருந்தாலும் தன் சுயபுத்தியே மாற்றியமைந்திருக்கும். அதிலும் புத்திரேகையைச் சார்ந்திருக்கவேண்டிய இருதய ரேகையானது குருமேட்டில் ஆரம்பமாகி இருப்பதால் எந்த காரியத்திலும் சற்று மயக்கமாகவே இருப்பார். இவர் செய்யும் காரியங்களுக்கு இவரது எண்ணங்களும் எவ்வழியிலும் உருபடாது.

மாணவன்: ஐயா! புத்திரேகை சரியான முறையிலில்லாமல் ஆயுள்ரேகைக்கும் இதற்கும் சம்மந்தமில்லாமல் தனியாகயிருக்கிறது. அப்படி இருந்தால் அதனுல் நன்மையா தீமையா?




ஆசிரியர்: தம்பி! புத்திரேகையும் ஆயுள்ரேகையும் ஒருமித்து இராமல் தனித்தனியே இருக்குமானுல் இவரது ஆயுள் காலபரியந்தம் தன் சுய புத்தியைக் கொண்டு எந்தக்காரியத்தையும் சாதிக்க முடியாது ஒருவரின் தூண்டுதலினுலேயே இவர் எதையும் செய்ய இசைவார்.

மாணவன்: ஐயா! மற்றொரு சந்தேகத்தை மறந்தேன், அதற்கு அடியேனை மன்னித்து விடையளிப்பீர். அதாவது புத்திரேகை ஆயுள்ரேகையின் சந்தர்ப்பம் என்ருலோ அந்த ஆயுள்ரேகையின் அடிபாகத்திலிருந்து ஓர் ரேகை புறப்பட்டு புத்திரேகையின் மீது விழுந்து இருதயரேகையின் நடுபாகத்தில் ஓர் தீவுக்குறி காண அதில் அந்த ஆயுள்ரேகையின் கிளை இருக்கின்றதே அதன் காரணம் என்ன?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையின் நடுவில் ஓர் தீவுக்குறி கண்டாலே அதுவே தன் மனதிற்கு ஒரு விதமான கவலையுண்டுபண்ணும் அதிலும் ஆயுள் ரேகையின் கிளை தொட்டுக் கொண்டிருந்தால் இவருக்கு தன் ஆயுள் காலபரியந்தம் தீராத ஒரு பயங்கரமான வியாதி காணலாம் அதனுல் மிக துன்பமேற்படக் கூடும்.



மாணவன்: ஐயா! புத்திரேகையின் அடிபாகத்திலிருந்து ஓர் ரேகை புறப்பட்டு உள்ளங்கைக்கு தொங்க விட்டு அதிலேயே ஒரு சிறு கிளை போல் நோக்கிச் சென்றால் அதனால் என்ன பலனைக் காணக்கூடும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை ஆரம்பத்திற்கும், ஆயுள் ரேகை ஆரம்பத்திற்கும் நடுவிலிருந்து ஓர்ரேகை உதயமாகியிருந்தால், ஒருபெரிய பண்டிதராகவோ, அல்லது ஒரு சிறந்த கலைஞனாகவோ, நீடித்தகாலம் வாழக்கூடும். அதிலும் ஒருகிளைமேல் நோக்கிச் சென்றிருப்பதால் மிகவும் மேன்மையான பதவியிலிருப்பவராகவும் திடமாக கூறலாம்.



மாணவன்: குருவே! மேற் கூறியது போலவே புத்திரேகைக்கும் ஆயுள்ரேகைக்கும் நடுவில் ஒருசிறு ரேகை கண்டால் அதற்கு என்னவெனக் கூறுவது?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை போலவே சிறு துண்டுரேகை கண்டிருந்தால் இவர் சுமார் 14-வயதில் ஒரு பெரிய கெண்டம் ஏற்பட்டு அதில் தேறி எழுந்து உலாவுவதே அசாத்தியம் அப்படி தேறி எழுந்து விட்டால் 100-வயது வரையில் இவருக்கு ஆயுளென கண்டிப்பாக சொல்லவேண்டும்.



மாணவன்: ஐயா! புத்திரேகை யானது வளைவுயின்றி நீளமாக உள்ளங்கையில் நிறைந்து கடைசி வரையிலும் முடிவு காட்டியிருந்தால் அதனுல் என்ன பலன் உண்டு?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை வளைவின்றிநீளமாக இருந்தால் இவர் களுக்கு எந்தகாலமும் நிர்ணயமான குணபாவமும், பெருந்தன்மையும், இறக்கமான உள் ளமும் உண்டாம்,

மாணவன்: ஐயா! புத்திரேகை சற்றுவளைவுபட்டுஅங்கார மேட்டை யடைந்து முடிவு காட்டியிருந்தால் அதனுல் நன்மையுண்டா? தீமை யடைவார்களா?



ஆசிரியர்: தம்பி! புத்தி ரேகை வளைவு பட்டு அங்காரமேட்டை யடைந்து முடிவு காட்டியிருந்தால் அவர்களின் வாழ்நாளில் இன்ப துன்பங்களை மாறி மாறி அனுபவிப்பதும் தவிற எதிலும் துணிகரமான குணமுண்டு என கூறலாம்.



மாணவன்: ஐயா! புத்திரேகை யானது ஆயுள்ரேகையுடன் சேராம லும் ஆயுள்ரேகை சரிவர ஒழுங்குட னில்லாமல் துண்டுதுண்டாகசிதரப் பட்டும் இருந்தால் அதற்கு என்ன பலன் கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையா னது ஆயுள்ரேகையுடன் கலக்காமல் இருந்தால் ஜாதகர் ஆயுள்பரியந்தம் தன் சுயபுத்தி யில்லாமல் பிறர் வார்த்தையால் பிசகான காரியங் களிலெல்லாம் பிரவேசிப்பார். அல்லாமலும் ஆயுள்

ரேகை துண்டு துண்டாக சிதறப்பட்டு இருந்தால் இவரது ஆயுள்காலம் நீடித்திருந்தாலும் அடிக்கடி கெண்டங்களும் நோயும் காட்டும் எனலாம்.




மாணவன்: ஐயா! ஒருவருக்கு புத்தி ரேகை சரியான முறையிலிருந்தும் நான்கு இடத்தில் அதாவது குருமேடு புதன் மேடுகளிலும் உள்ளங்கையிலும் ஆயுள் ரேகை முடிவு காட்டுமிடத்திலும் X குறி கண்டிருந்தால் அதனால் நன்மையா? தீமையா?

ஆசிரியர்: தம்பி! எதிலும் வல்லவனாக இருக்கக்கூடிய புதன்மேட்டிலும் தேகசுகத்தையும் ஆரோக்கியத்தையும் தரக்கூடிய குருமேட்டிலும் x குறி கண்டால் சோம்பலும், தேக சுகமில்லாமையும் பலயீனமான தேகமுமுண்டு தவிர உள்ளங்கையில் மேற்கண்ட குறி இருந்தால் எதிலும் ஏமாற்றமுண்டு. ஆயுள்ரேகையின் முடிவிலிருந்தால் சுமார் 80 வயதிற்கு மேற்பட்டு தரித்திரவந்தனாக இருந்து திக்கற்று உயிர்விடவும் நேரலாம்.



மாணவன்: ஐயா! புத்திரேகையின் மீது குறுக்காக ஓர் ரேகை விழப்பட்டு கீழ்ப்பாகம் இரண்டாகப் பிரிந்து ஒருகிளை சந்திரமேட்டையும் அடைந்திருந்தால் அதனால் நன்மையுண்டா அல்லது தீமையுண்டா?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகைக்கும் இருதயரேகைக்கும் மேல் பதிந்து ஆயுள்ரேகையைத்தொட்டும் ஒருகிளை சந்திரமேட்டையடைந்தும் இருந்தால் அதனால் ஜாதகர் நினைக்கும் எண்ணம் பின்னம் இரக்கமற்ற புத்தியும் ஆயுளை கெடுக்கக் கூடிய கெண்டங்களும் காட்டுவதும் எந்த தொழிலிலும் ஒருவிதமான லாபங்களையும் அடையமாட்டார்.




மாணவன்: ஐயா! புத்திரேகையின் மேலே இருக்கும் இருதயரேகையின் நடுபாகத்தில் ஒரு வெட்டுப்பட்டிருந்தால் அதனுல் அவர்களுக்கு என்ன பலன் கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையின் நடுவில் வட்டமான ஓர் தீவுக்குறி காணப்பட்டால் இவர்களின் சாதல் நட்புகளிலேலா, அல்லது சதிபதியின் வாழ்க்கையிலோ சிலகாலம் பிரிவினை ஏற்பட்டு பிறகு ஒருமித்து வாழ்க்கை நடத்தவும் மார்க்கமுண்டு என்று கூறலாம்.




மாணவன்: ஐயா! மேற்கண்டபடியே இருதயரேகையின் நடுவில் நாற்சதுரமான வட்டக்குறி ஒன்றுகாணப்பட்டால் அதற்கு நன்மையுண்டா?

ஆசிரியர்: தம்பி! நாற் சதுரமான வட்டக்குறி இருதயரேகையில் பதிந்திருப்பவருக்கு யாரிடமும் ஆசையும் நேசமும் அதிகமுண்டு ஆனுல் இவர்களின் வாழ்நாள் முழுதும் யாரையும் நம்பியேமோசம் போவார்கள். இக்குறியுள்ளவர்கள் எதிலும் சற்று கவனிப்பாகவே நடந்து கொள்ள வேண்டும்.



# செல்வாக்கு ரேகை



மாணவன்: ஐயா! புத்திரேகையின் அமைப்புகளைத் தெரிவித்தீர். அது விஷயத்தில் மிகவும் ஆனந்தமடைந்தேன். ஆனால் ஆயுள்ரேகையின் உள்பாகத்தில், சுக்கிரமேட்டில் வளைவுடன் காணப்படுகிறது அந்த ரேகையின் பெயர் யாது?

ஆசிரியர்: தம்பி! அதன் பெயர் தான் செல்வாக்கு ரேகை ஆனால் இந்தரேகை எல்லோருக்கும் சரிவர அமைந்திராது நூற்றிலொருவருக்கும் ஆயிரத்திலொருவருக்கும் தான் இந்தரேகை அம்சலக்ஷணங்களுடன் அமைந்திருக்கும்.

மாணவன்: சுவாமி! அப்படியானால் ரேகை சீர் பெற அமைந்திருந்தும் கட்டை விரலில் ஓர் கிறலும் சுண்டுவிரல் முதல் அங்குலாஸ்தியில் ஓர் கருப்பு மச்சப்புள்ளியும் இருந்தால் அதற்கு நல்ல பலன் தானா அல்லது ஏதேனும் துற்பாக்கியமுண்டா?

ஆசிரியர்: தம்பி! கட்டை விரலின் முதல் அங்குலத்தில் ஓர் சாய்வு கோடு கண்டிருந்தால் செல்வாக்கில் குறைவு ஏற்படாது ஆனால் சுண்டுவிரலில் மச்சம் கண்டிருப்பதால் தான் பண விஷயத்தில் யாரிடமும் மிக ஜாக்கிரதையாகவே நடந்து கொள்ள வேண்டும்.

மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை சீர்பட இருப்பினும் புத்தி ரேகைக்கும் இருதய ரேகைக்கும் சேர்ந்த ஒரு சாய்வுகோடு கண்டால் இதின் பலன் என்னவாகும்?



ஆசிரியர்: தம்பி! அப்படி புத்தி ரேகைக்கும் இருதய ரேகைக்கும் சேர்ந்து சாய்ந்து ஒரு கோடு இருந்

தால் சிற்றின்ப வாழ்க்கையில் மிகவும் பிரீதியுள்ளவ ராக இருப்பார்கள். அதின் காரணமாக யார் எதை கேட்பினும் கொடுத்து விடுவார்கள், தெய்வத்தை வெறுத்தே பேசுவார் இறுதியில் பலவித இடைஞ்சல் ஏற்பட்டாலும் தனது புத்திரர்களாலேயோ பந்துக் களாலேயோ மிகுந்த செல்வாக்கு பெருகும்.

மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகையானது அழகாக ஆழ்ந்து காணப்பட்டால் அதனுல் நன்மை யுண்டா அல்லது தீமை ஏற்படுமா?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை அழகாக பதிந்த கோடு கண்டால் இவர்கள் சிறுவயது முதற் கொண்டே சீறும் சிறப்பும்: செல்வாக்கும், பெருக வாழ்ந்திருப்பார்கள். இவர்களுக்கு கஷ்டமோ கவலை யோ, கடைசி காலம் வரையில் தோன்ருது.

மாணவன்: ஐயா! செல்வாக்குரேகை அழுத்த மாக பதிந்து தோன்ருமல் நிழல்போல் கோடு மெல் லியதாக தோன்றினுல் அதனுல் அவர்கள் அடை யும் பலன் என்ன?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்குரேகை அழுத்த மாக பதிந்து இராமலிருந்தால் எவ்வளவு பொருள் பாத்தியமிருந்தாலும் சந்தோஷமிராது நிம்மதியற்ற மனமுடையவராகவே விளங்குவார் எனக்கூறலாம்.

மாணவன்: ஐயா! செல்வாக்குரேகை துண்டு துண்டாகவும் சரியானமுறையிலுமில்லாமலிருந்தால் அதற்கு என்ன பலன் கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்குரேகை துண்டு கண்டு இருந்தால் சிலநாள் சந்தோஷமும் சிலநாள கவலையும் உடையவராக இருப்பதுமல்லாமல் பேத மையான குணமும் உண்டு என்னலாம்,



மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை சீருடனில்லாமல் பொறி போல் கடைசி வரை யில்லாமல் மணிக்கட்டிற்கு மேலேயே நின்றிருந்தால் அதற்கென்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை சிதரலிட்டு இருந்தால் எந்த காலமும் ஒருவிதசுகத்தையும் பெற முடியாது அதிலும் ஆயுளையும் அவ்வளவு பலமாக கூறமுடியாது.




மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை பாதியிலேயே துண்டித்து அதன் முடிவில் ஒரு குறியும் புத்தி ரேகையின் நடுவில் ஓர்குறியும், குரு மேட்டில் நக்ஷத்திரக்குறி ஒன்றுமிருந்தால் இதனுல் என்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகை பாதிவயதிலேயே துண்டித்து இருந்தால் பாதிவயதிலேயே இவர் செல்வாக்கு ஒழிந்துபோகும் பலசிக்கலு முண்டாகும். புத்திரேகையின் நடுவில் குறிகண்டால் பாதிவயதில் இவருக்கு புத்தி சுவாதீனமற்று போகலாம். ஆனல் குருமேட்டில் நக்ஷத்திரக்குறி கண்டிருப்பதால் இவருக்கு யாரேனும் ஒருவருதவியால் நல்ல அதிருஷ்டவசமான லாபங்கள் பல அடையக்கூடும்.



மாணவன்: ஐயா! இரண்டுமூன்று துண்டு ரேகைகள் புத்திரேகையின் மீதும் ஆயுள்ரேகையின் மீதும் பாய்ந்து செல்வாக்கு ரேகையை தொட்டு இருந்தால் அதற்கு என்ன பலன் கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையையும் ஆயுள் ரேகையையும் துண்டு

ரேகைகள் தொட்டு செல்வாக்கு ரேகையில் கலந்திருந்தால் இதனுல் வெகு மேன்மையான பதவிகளை அடையக்கூடும். இதை சிலர் நூற்கோணக்குறி என்றும் முக்கோணக்குறி என்றும் கூறுவார்கள்?




மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகையில் பல துண்டு துண்டுகளாக குறுக்கு ரேகைகளிலிருந்தும் அதற்கு முன்னே சில சிறுரேகை செல்வாக்கு ரேகைபோலும் இருக்குமானுல் அதனுல் என்னபலன் சொல்லலாம்?

ஆசிரியர்: தம்பி! செல்வாக்கு ரேகையில் பல துண்டுகளுள்ளரேகைகள் கண்டால் இவரது செல்வாக்குகளில் பல இடைஞ்சல்கள் ஏற்படும் சிலகாலம் கஷ்டதிசையாகவுமிருக்கலாம் ஆனுல் அடுத்தபடியாக ஓர் சிறுசெல்வாக்குகளொழிந்தாலும் நாள் போகப்போக சொற்பமானசுகத்தைத்தரும்யோகமுண்டு எனலாம்.



மாணவன்: குருவே செல்வாக்கு ரேகைக்கும் ஆயுள்ரேகைக்கும் நடுவில் ஒருசிறு ரேகை கிளைத்து அதின் முனையில் ஒரு நட்சத்திரக்குறி கண்டால் அதற்கென்ன பலன் கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகைக்கும் செல்வாக்கு ரேகைக்கும் நடுவில் ஒரு சிறுரேகை கிளைத்து முடிவில் ஒரு நக்ஷத்திரக்குறி கண்டால் அந்த சாதகருக்கு ஆயுள்பலமும் அம்சமான செல்வாக்கும் ஏற்படுவதுடன் சிறுவயது முதல் பாதிவயது வரையில் எதிலும் முதன்மையான பெயரும் நோய்நொடியில்லாத சுகமான வாழ்க்கையும் உண்டாகுமெனலாம்.

# சில சிக்கலான ரேகைகள்



மாணவன்: ஐயா! செல்வாக்கு ரேகை இருக்கும சுக்கிரமேட்டில் வேலிபோல் சிலகோடுகள் நெடுக்கும் குறுக்குமாக தோன்றினுல் அதனுல் லாபமா நஷ்டமா?

ஆசிரியர்: தம்பி! அதுபோன்ற சிக்கல் குறி சுக்கிரமேட்டில் கண்டால் எக்காரியத்தைச்செய்தாலும் இவர்கள் ஒருவரின் வார்த்தையும் கேட்காமல் பொருளை விரயமாக்குவாரே யொழிய லாப மேற்பட மாட்டாது அதிலும் பல சச்சரவுகளிலும் சிக்குண்டு பொருள் நஷ்டமும் மனக்கஷ்டமும் அடையநேரிடும

மாணவன்: குருவே! மேற்சொன்ன படியே சுக்கிரமேட்டிலிருக்கும் ,ரேகை அதிக அழகாக தென்பட்டால் அதனுல் நன்மையுண்டாகுமா? அல்லது கெடுதலடைவார்களா?



ஆசிரியர்: தம்பி! அவ்விதமான சிக்கல்ரேகை சுக்கிரமேட்டில் ஆழ்ந்து காணப்பட்டால் இவர்களுக்கு ஒவ்வொரு கஷ்டங்களும் எதிர்பாராத வழியில் ஏற்படும் திடீரென நோயும் உண்டாகும் அதனுலும் சில பொருள் விரையப்படும். சிக்கலான வியாஜ்யங்களில் தோல்வி பெறுவார். பலகஷ்டங்களையும் தருவதுடன் மன நிம்மதியும் இராது.

மாணவன்: ஐயா! மேற்சொன்ன சிக்லான கோடுகள் சுக்கிர மேட்டிலொன்றும் சந்திரமேட்டிலொன்றும் இருக்குமானுல் அதனுல் அவர்களுக்கு நன்மையுண்டாகுமா?

26




ஆசிரியர்: தம்பி! இந்த சிக்கலான குறி குருமேட்டிலிருந்தால் பலகொடுமையான நோய்களை யுண்டாக்கும் சந்திர மேட்டிலிருந்தால் சந்திர திசை வரும் போதெல்லாம் தனது வருமானத்தைக் கொடுக்கும் சுக்கிரமேட்டிலிருந்தால் தனது செல்வாக்கும் தனது ஆஸ்திபுஸ்திகளும் அழிவதற்கு ஒருவியாஜ்யமோ தொழிலோ வியாபாரமோ ஏற்படலாம் ஆனால் இதுகளை மாத்திரம் சரிவர கவனித்து சமயோசிதமாக சொல்லவேண்டும்.




மாணவன்: ஐயா! இருதயரேகை முதலில் சரிவர ஆரம்பித்து நடுவில் புள்ளிகள் விழுந்து மறுபடியும் சரியாக புதன்மேட்டில் முடிவு காட்டியிருந்தாலும் அல்லது ஆயுள்ரேகையானது முதலிலிருந்து துண்டுதுண்டாக கடைசிவரையி லிருந்தாலும் இதற்கு என்ன பலன் கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையில் நடுவில் சில புள்ளிகள் கண்டால் முதலில் நல்ல எண்ணத்துடன் ஒருவருக்குஉதவி செய்யவோ தயவு காட்டவோ எண்ணுவார் ஆனால் இடைநடுவில் சில துற்புத்தியின் காரணத்தால் எதற்கும் உடன்படாமலிருக்கலாம் இறுதியில் ஓரளவுக்கு ஒத்தாசை செய்யவும் உறுதியுண்டாகும் அல்லாமலும் ஆயுள்ரேகையானது முதலிலிருந்து துண்டித்து இருந்தால் அடிக்கடி பல கெண்டங்களாலும் நோயினாலும் மரண பயமும் ஏற்படலாம்.



மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டில் நாலைந்து குறுக்கு ரேகைகள் கண்டிருந்தால் அதற்கு நன்மையுண்டா அல்லது தீமையடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! சுக்கிரமேட்டில் குறுக்கு ரேகைகள் கண்டு இருந்தால் நல்ல லாபத்தைத் தரக் கூடியதாக இருந்தாலும் அதில் பின்னமேற்பட வழியுண்டு.




மாணவன்: ஐயா! ஆயுள்ரேகை மீது படிப்படியாக பலகோடுகள் ஏற்பட்டு சுக்கிரமேட்டின் அடிப்பாகத்தில் ஓர் குறுக்குகோடு தோன்றினால் அதனால் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! படிப்படியாக ஆயுள்ரேகை மீது பல ரேகைகள் தோன்றினால் எந்தெந்த இடத்தில் அந்தகிரேல் இருக்கின்றதோ அந்தந்த வயதுகளில் பலநோய்களும் கெண்டங்களும் காட்டி மறையும் ஆனால் சுக்கிரமேட்டில் குறுக்குக் கோடுகள் கண்டிருந்தால் பல சந்தர்ப்பங்களில் கஷ்டமுண்டாகும்.



மாணவன்: ஐயா! உள்ளங்கையில் ஓர் குறுக்குக் கோடு கண்டிருந்தால் அதனால் என்ன பலனுண்டாகும்?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையில் ஓர் குறுக்குக் கோடு கண்டிருந்தால் எந்தகாலமும் சித்தப்பிரமையடைந்தவர்போலும் மனக்கவலை மிகுதியால் உயிரையே மாய்த்துக் கொள்ளக் கூடும்?



மாணவன்: ஐயா! கரத்திலுள்ள இருதயரேகையும் புத்தி ரேகையும் கடைசி வரையில் முடிவடைந்தும், ஆயுள்ரேகையும் சரியான முறையில் கண்டிருந்தால் இதனால் நன்மையா? தீமையா?

ஆசிரியர்: தம்பி! இதை தீமை என்று சொல்வதற்கு முன்வரமாட்டார்கள் இருதயரேகை புத்திரேகை ஆயுள்ரேகை இவைகள் சரிவர இருக்குமானால் தயை தாக்ஷண்யம் பரோபகாரம் முதலியன பொருந்தி நீடித்த காலம் வாழ்ந்திருப்பார் எனக் கூறலாம்.




மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டில் ஓர் முக்கோணக்குறி கண்டால் அதனால் ஒருவர் நன்மையடைவார்களா? அல்லது கெடுதி நேரிடுமா?

ஆசிரியர்: தம்பி! முக்கோணக் குறியானது சுக்கிர மேட்டிலிருந்தால் சொற்பமான வியாபாரம் அதனால் மாடு மனை முதலியவைகள் ஏற்பட்டு நல்லவிதமான வாழ்க்கை நடத்தக்கூடும்.




மாணவன்: ஐயா! சுக்கிர மேட்டில் ஒரு வளைவுக் குறி கண்டிருந்தால் அவர்கள் அதனால் நன்மையடைவார்களா துன்பமடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! ஓர் வளைவானக் குறி சுக்கிரமேட்டில் இருந்தால் மனோவியா கூலத்தையும் மனைவி மக்கள் பிரிவினையும் மாடுமனை நஷ்டமும், மனக் கசப்பினால் பரதேசியாக போகவும் நேரிடலாம்.




மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டில் ஒரு நட்சத்திரக்குறி கண்டிருந்தால் அதனுல் என்னபலன் அடைய முடியும்?

ஆசிரியர்: தம்பி! இந்த நட்சத்திரக்குறி சனிமேடு அங்காரக மேடு தவிற மற்றெந்த மேடுகளில் தோன்றினுலும் நல்ல அதிர்ஷ்டசாலியாக இருக்கக்கூடும் அதுவும் அச்சமயத்தில் ஜனது கிரக திசையின் பலனை ஒத்திருக்கும்.




மாணவன்: குருவே! சனிமேட்டில் ஒரு X குறியும் சுக்கிரமேட்டில் ஒரு நட்சத்திரக்குறியு மிருக்கு மானுல் இந்த சாதகருக்கு என்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பிசுக்கிர மேட்டில்நட்சத்திரக்குறி இருப்பதனுல் நல்ல அதிர்ஷ்ட வசம் பொருந்தியவராக இருக்கலாம் ஆனுல் சனிமேட்டில்குறி விழப்படாது. அப்படி விழுந்திருந்தால், இவருக்கு பொருள்களிருந்தாலும், அது பிறரால் களவாடப்படும். தொழிலிருந்தாலும் அத்தொழிலுக்கு பின்னமுண்டாக வேண்டும். வியாபாரம் கொடுக்கல் வாங்கலில் சூதுவாது நம்பிக்கைத் துரோகம் இவைகளால் நஷ்டமடையக்கூடும். ஆனுல் இவைகளால் சமயோசிதம் போல் கவனித்துக் கூறவேண்டும்.

மாணவன்: ஐயா! சுக்கிரமேட்டில் ஒரு சிலுவை போன்ற குறி இருந்தால் அதனுல் அவர்களுக்கு லாபமா நஷ்டமா?




ஆசிரியர்: தம்பி! சிலுவைபோன்ற குறி சுக்கிரமேட்டில் கண்டால் இவர்களின் வாழ்க்கையில் சதிபதிகள் சச்சரவுகளும் பந்துக்களின் பகைமையும் ஏற்படுவதுடன் காரியங்களில் ஏமாற்றமும், உண்டாகும் எனக்கூறலாம்.




மாணவன்: ஐயா! மற்றும் பல குறிகளில் நாற்சதுரமான ஓர்வட்டக்குறி கண்டிருந்தால் சுக்கிர மேட்டின் பலன் லாபத்தை தருமா நஷ்டத்தை தருமா?

ஆசிரியர்: தம்பி! சுக்கிர மேட்டில் ஓர் வட்டக்குறியானது திட்டமாக தோன்றுமானால் இவர் சகல கலைகளுக்கும் வல்லவராகவும், பலபேர்களுக்கு ஒருதலைவனாகவும் அதனால் பணவசதிகளில் லாபகரமும் ஏற்படக்கூடும். அப்படி இருந்தாலும் இவரது ஜாதகத்தை பொருத்துதான் மேற்கண்ட பலன்களை இவர் அடையக்கூடும்.

மாணவன்: குருவே! ஆயுள்ரேகையானது ஒருவருக்கு வளைந்துவளைந்து சரியான முறையில்லாமலிருந்தால் அதற்கு பலன் என்னவென்று கூறலாம்?



ஆசிரியர்: தம்பி! இதுபோல் ஆயுள் ரேகை அமைவது கடினம் அப்படி அமைந்திருந்தாலும் அதை அவ்வளவு உயர்த்திப்பேச முடியாது. இவர்களுக்கு ஆயுள் நீடித்தகாலம் உண்டு என்றாலும் ஜனன காலத்திலிருந்தே ஏதாவது ஒருநோயின் கவலையாயி

னுமிருக்கும் அல்லது இவர்களுக்கு தனது அம்சங்களில் ஏதேனும் ஒரு குறைவாகிலும் காணலாம். இதுவரையில் உனக்கு கூறி வந்தது பல சிக்கலான ரேகைகளைப்பற்றியே ஆனல் இதற்கு பின் காணுவது தொழில் ரேகை அதாவது தனரேகையின் பலன் அதுகளின் குறிகளைச் சரிவரக் கவனித்துக் கேட்டு அதின் விபரங்களைத் தெரிந்து கொள்.

மாணவன்: ஐயா! அப்படியே தங்கள் திருவுளம் பற்றினல் யான் மிகவும் புனிதனுவேன் சுவாமி.

# தன ரேகைப் பலன்

மாணவன்: ஐயா! தனரேகை என்பதின் விபரமென்ன? அதனல் எவ்விதமானலாபங்கள் எந்தவழியில் அடையக்கூடும்? இந்த விபரத்தை எனக்குத் தெளிவுறக் கூறவேண்டும்.

ஆசிரியர்: தம்பி! தனரேகை தொழில்ரேகை அதிர்ஷ்டரேகை சனிரேகை, விதிரேகை, என்று இந்த ரேகைக்குப் பலபெயர்களுண்டு ஆனல் ஒவ்வொருவருக்கும் இந்த ரேகைதான் மிகமுக்கியமானதாகும் இதைக்கொண்டு தான் ஒவ்வொருவரின் மற்றப் பலன்களையும் தெளிவுறக் கூறவேண்டும்.



மாணவன்: குருவே! இப்படத்திலுள்ளதுபோல் மணிக்கட்டின் ஒரு ரேகை ஆரம்பமாகி ஒழுங்கான முறையில் ஒருவித பின்னயில்லாமல் சனிமேட்டை வந்தடைந்தால் அதனல் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! இப்பொழுதும் நீ கூறியது தான் சரி அதுபோல்

ஒருவித பின்னமில்லாமலும் ஒழுங்காக மணிக்கட்டி லிருந்து புறப்பட்டு சனிமேட்டில் முடிவடைந்திருந் தால் நல்ல கௌரவமான தொழில் முறையும் பல விதமான செல்வாக்குகளும் தன சம்பத்தும் நீடித்த உத்தியோகமும் ஏற்பட்டு சுகஜீவியாக வாழக்கூடும்.



மாணவன்: ஐயா! மணிக்கட்டிலி ருந்து உதயமாகிய தனரேகை புத்தி ரேகை வரையிலும் வந்து துண்டித்து நின்றுவிட்டால் அதற்குஎன்ன பலன கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! எத்தொழிலும் நீடித்து இருப்பதற்கு இவருக்கு அம் சமில்லை சிலகாலம் தொழில் செய்து பிறகு தனது புத்தியின் சாதுர்யத்தால் தான் இவ ருக்கு பிழைக்க வழி ஏற்படும்.



மாணவன்: ஐயா! கரத்தில் நடு பாதிக்குமேல் தொழில்ரேகை ஆரம் பித்து சனிமேட்டில் முடிவடைந்தி ருந்தால் அதனுல் என்ன பலனடை யக் கூடும்?

ஆசிரியர்: தம்பி! நடுபாதியில் தொழில் ரேகை, ஏற்பட்டிருந்தால் இவர் சில நாட்களாக ஒரு தொழிலு மில்லாமல்ஏதேனும் ஒருசந்தர்ப்பத்தினுல் காலத்தை கழித்து வந்திருக்கலாம் ஆனுல் நாள் போகபோக பல குறைகளினுல் ஏது வழியற்று நடுபாதியில் தொழில் செய்யத்தொடங்குவார். ஆனுல் இவருக்கு முடிவு வரையில் தொழில் விர்த்தியுண்டு.



மாணவன்: ஐயா! தொழில்ரேகையானது சரியான முறையில்லாமல் வளைந்து வளைந்து காணப்பட்டால் அதனால் நல்ல அதிஷ்டவசமுண்டா அல்லது துர்பாக்கியந்தானா?

ஆசிரியர்: தம்பி! சரியான முறையில் தொழில் ரேகையில்லாமல் வளைந்து காணப்பட்டால் இவர் தொழில் முறையில் முன்னுக்கு வரமுடியாது. பல பேர்களால் பலவித இடைஞ்சல்களெல்லாம் ஏற்படலாம்.



மாணவன்: குருவே! தொழில்ரேகை சனிமேடு வரையில் செல்லாமல் நடுப்பாதியிலேயே துண்டுபட்டிருந்தாலும் அடிபாகத்தில் உள்ளங்கையிலிருந்து ஆரம்பமாகி யிருந்தாலும் அதனால் அவர்கள் என்ன பலன் அடையக் கூடும்?

ஆசிரியர்: தம்பி! சனிமேடு வரையில் தொழில் ரேகை செல்லாமலிருந்தால் எத்தொழிலும் அவர்களுக்கு இறுதிவரையில் பலனைத்தராது. அப்படி தந்தபோதிலும் அதனால் அவர்கள் ஈடேற முடியாது. அல்லாமலும் உள்ளங்கையிலிருந்து தொழில்ரேகை ஆரம்பமானால் இவர்களுக்கு தொழில்முறை வெகு நாள் வரை பலன் தராது. அவர்கள்சம்சார வாழ்க்கையில் ஈடுபட்டபிறகே தொழில் செய்ய முன் வருவார்கள் எனக் கூறவேண்டும்.

27



மாணவன்: ஐயா! சனிமேட்டில் முடியவேண்டிய தொழில் ரேகை புதன் மேட்டிற்கும் சூரியமேட்டிற்கும் நடுபாகத்தில் வந்து முடிவடைந்திருந்தால் அதனால் அவர்கள் என்ன பலாபலனை அடைவார்கள்?

ஆசிரியர்: தம்பி! சனிமேட்டில் முடிவடையவேண்டிய தொழில் ரேகை புதன் மேட்டிற்கும் சூரிய மேட்டிற்கும் நடுபாகத்தில் முடிவடைந்திருக்குமானால் இவர்களுக்கு கல்வியின் பாகத்தைச் சேர்ந்த ஏதேனும் ஓர் தொழிலாவது அல்லது ரசாயனத் தொழில் வகையாவது தேர்ந்து அதனால் பலவிதமான முயற்சிகளையடைய வேண்டிய அம்சம் பொருந்தியிருக்குமெனக் கூறலாம்.

மாணவன்: ஐயா! தொழில் ரேகையானது கங்கண ரேகையில் ஆரம்பமாகி புதன்மேட்டில் முடிவடைந்து இருப்பதுமல்லாமல் அந்தரேகை வளைந்து வளைந்து பாம்புபோல் காணப்பட்டால் அதனால் அவர்கள் அடையும் பலன் யாது?



ஆசிரியர்: தம்பி! தொழில்ரேகையானது கங்கண ரேகையில் ஆரம்பமாகி புதன் மேட்டில் முடிவடைந்து பாம்பு போல் வளைந்து கண்டால் இவர்கள் பலகலைகளை யுணர்ந்திருக்கலாம் அதனால் நல்ல பலாபலன்களையும் அடையும் மார்க்கமுள்ளவர்களாகவும் இருக்கலாம் இதை அவர்களின் முகக்குறியைக்கண்டு கூறவேண்டும்.




மாணவன்: ஐயா! தொழில் ரேகையானது அடிபாகத்திலிருந்து சரிவரத் தோன்றி புதன்மேட்டை அடைந்திருந்தாலும் பாம்புபோல வளைந்துமேல் முனையில் துறடுபோல் வளைவுபட்டிருந்தால் அதனாலவர்கள் ஜீவிய காலத்தில் அடைவது லாபமா? நஷ்டமா?

ஆசிரியர்: தம்பி! அடிபாகத்திலிருந்து சரிவரத்தோன்றிய தொழில்ரேகை புதன்மேட்டை அடைந்திருந்தாலும் பாம்பு போல் வளைந்து மேல் பக்கம் துறடுபோல் வளைந்திருந்தால் தான் இருக்கும் தொழிலில் சில சதிகாரர்களால் சச்சரவு ஏற்பட்டு அத்தொழிலில் பின்னடைப்படும் அதனால் பல சஞ்சலங்களும் நேரலாம்.

மாணவன்: ஐயா! சனிமேட்டில் அமரக்கூடிய தொழில் ரேகையானது சாய்வாக புதன்மேட்டில் அமர்ந்து அதிலும் கோடு துண்டு துண்டாகக்காணப் பட்டால் அதனால் அவர்கள் அடையும் பலன் யாதென கூறவேண்டும்?




ஆசிரியர்: தம்பி! சனிமேட்டில் அமரக்கூடிய ரேகை புதன்மேட்டில் அமர்வதென்றால் மகாகடினம் ஆனால் அந்த ரேகை ஒழுங்காக அமைந்து துண்டு பட்டிருந்தால் அவர்கள் உலகில் மகா அதிர்ஷ்டசாலியாக விளங்குவார்கள் தொழில் முறையில் பல சிக்கல் ஏற்பட்டு தொழில் கெடும் நீடித்த தொழில் நிலைக்காது, நியாயப்படி இவர்களுக்கு தொழில் மீது ஊக்கமே இராது எனலாம்.




மாணவன்: ஐயா! மேற் சொன்ன படியே சனிமேட்டில் அமரக்கூடிய ரேகை புதன் மேட்டில் சரியாக தோன்றி இருந்தால் நல்ல அதிர்ஷ்ட வசம் பொருந்துமென்றீர். அப்படித் தாங்கள் கூறியது போலவே அமைந்திருப்பினும் சுக்கிரமேட்டில் அதாவது செல்வாக்கு ரேகை பொருந்துமிடத்தில் ஓர் சிக்கலான வலைக்குறி ஒன்று இருந்தால் அதற்கு நன்மை ஏற்படவேசா அல்லது லாபங்களைத் தரவோ மார்க்கமுண்டா?

ஆசிரியர்: தம்பி! நீ கேட்ட வினாவிற்கும் உனது நுட்பமான புத்தியின் கூர்மைக்கும் மெச்சினேன். அதாவது மேற்சொன்னபடியே ரேகையானது அமைந்திருந்தால் எவ்விதமான இடைஞ்சலான சம்பவங்கள் தொழிலில் நேர்ந்தாலும் நல்ல லாபகரமும், தொழில் முகாந்திரத்திலே புகழும் கீர்த்தியுமடைய மார்க்கமுண்டு, ஆனால் நல்ல லாபகரங்களைத் தரக்கூடிய வெள்ளிமேட்டில் விழுந்திருக்கும் சிக்கலான வலைக்குறியினால் அதற்குப் பின்னமே யடையக்கூடும் எதிலும் லாபந்தருவதுபோல் ஆசைகாட்டி ஏமாற்றத்தையும் நஷ்டத்தையும் அளிக்கும் இவர் செய்யும் எத்தொழிலும் பல தொந்தரவு காணக்கூடுமே யொழிய மன நிம்மதியைக் காணுவதரிதென கூறலாம்.

மாணவன்: ஐயா! தொழில் ரேகையானது சனிமேட்டில் முடிவுகணில் அதனால் வெகு நன்மையடையக் கூடுமென முன் தெரிவித்துள்ளீர் ஆனால் அந்த ரேகை தாங்கள் கூறியது போல் அமைந்திருந்தாலும் துண்டுதுண்டாக வெட்டு பட்டிருந்தாலும் அதனால் அவர்களுக்கு



நல்ல லாபமுண்டா அல்லது நஷ்டங்களைத் தான் அடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! தொழில்ரேகை என்று சொல்லக் கூடிய சனிரேகையானது சனிமேட்டில்தான் முடிவடையவேண்டும். அதுதான் ஒழுங்கானமுறை. அதனால் நல்ல விர்த்திகரமான தொழிலாளியாகவோ, அல்லது முதலாளியாகவோ இருக்கலாம். ஆனால் அந்த ரேகையில் பல துண்டுகள் விழுந்தால் இவருக்கு பல தொழில் பலவிதமான யோசனை, ஆனால் எதிலும் உருபடுவது அசாத்தியம் இவர் எந்ததொழிலைச் செய்தாலும் அந்த தொழிலுக்கு அடிக்கடி பல ஆபத்துக்கள் உண்டு அதனால் முன்னேற்ற மடையாமலிருப்பார் என்றும் கூறலாம்.




மாணவன்: ஐயா! தொழில் ரேகையானதுபுதன் மட்டில்சாய்வுபட்டு பல துண்டு குறுக்கு ரேகைகள் அதன் மீது காணப்பட்டால் அதனால் நன்மையடைய மார்க்கமுண்டா?

ஆசிரியர்: தம்பி! தொழில்ரேகை சாய்ந்து புதன்மேட்டை அணுகி சில துண்டு குறுக்குரேகைகள் அதன் மீது காணப்பட்டால் சிலகாலம் தொழில் செய்வதும் சிலகாலம் சோம்பித்திரிவதுமாக இருக்கலாம் பொதுவாக இவர்களுக்கு தொழிலே விர்த்திகரமிராது என்றும் கூறலாம்.

மாணவன்: ஐயா! ஒருவருக்கு தொழில் ரேகையே காணுமல் புத்திரேகை இருதயரேகை மாத்திரம் சரியான முறையில் காணப்பட்டால் அவர்களுக்கு தொழிலில் பலனுண்டா?



ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகையே கரத்திலில்லை யென்றால் இவர்களுக்கு உப்படி தொழில் இருக்கமுடியும் ஆனால் இவர்களுக்கு புத்திரேகையும் ஆயுள் ரேகையும் ஒழுங்கான முறையில் இருப்பதால் எவ்வகையிலும் தன் புத்தியின் சாதுர்யத்தினால் தனது ஜீவிய காலத்தைக் கடத்தி வருவாரெனக் கூறவேண்டும்.



மாணவன்: ஐயா! தொழில் ரேகையானதுசந்திரமேட்டிலிருந்து ஆரம்பமாகிசூரியமேட்டிற்குச் சனி மேட்டிற்கும் நடுவில் முடிவு காட்டியிருந்தால் அதனால் அவர்கள் அடையும் பலன் யாது?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகையானதுசந்திரமேட்டிலிருந்து ஆரம்பமானால் நல்ல அமைப்பானது அதிர்ஷ்ட வசமானதுமான தொழிலாக இருக்கலாம் ஆனால் அந்தரேகை சனிமேட்டில் முடிவடைந்திருப்பதால் மேற்கண்ட பலன்களை அடைய மார்க்கமுண்டு ஆனால் அந்த ரேகை பேதப்பட்டு சனிமேட்டிற்கும் சூரியமேட்டிற்கும் நடுவில் முடிவடைந்திருப்பதால் தொழில்முகாந்தரத்தில் நல்ல லாபங்களைக் காட்டுவது போல் தெரியுமே தவிர அது தன்னை ஏமாற்றிவிடும்.

மாணவன்: ஐயா! இதுதான் இப்படி என்றாலோ அதே படத்தில் ஆயுள்ரேகையின் உட்புரத்தில் சுக்கிர மேட்டில் ஆயுள்ரேகை போலவே செல்வாக்கு ரேகை இறுதிவரையில் ஆரம்பித்து முடிவடைந்துள்ளதே அதின் பலனை தக்காங்கள் அடியேன்மீது அன்பு கூர்ந்து தெரிவிக்க வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! சுக்கிரமேட்டில் ஆயுள்ரேகை போலவே மற்றொரு வளைவான ரேகை ஒழுங்கான

முறையில் காணப்பட்டிருப்பதால் குறைவான வருமானமாயினும் இவர்களுக்கு பலவிதத்திலும் நிறைந்த செல்வாக்கும் சிறந்தயோசனைகளும் நிறைந்திருக்கலாம். ஆனால் இவர்களின் கிரக ராசியின் அமைப்பும் இதனுடன் அமைந்திருக்கவேண்டும். அதையும் அனுசரித்தே இதற்கு முடிவு சொல்ல வேண்டும்.

மாணவன்: ஐயா! அதுவும் தவிர மேற்கண்ட படத்தில் இன்னொரு அதிசயம் அதாவது தொழில் ரேகை சூரியமேட்டிற்கும் சனிமேட்டிற்கும் நடுவில் முடிந்திருந்தும் அதிலிருந்து ஒருரேகை கீழ்ப்பாகம் தொங்கவிட்டு மேற்சொன்ன செல்வாக்கு ரேகையை தீண்டி இருந்தால் அதனால் என்னபலன் அவர்கள் அடையக்கூடும் மென்பதை அறிவிக்கவேண்டும்.

ஆசிரியர்: தம்பி! அதுதான் அதின் சூக்ஷமம் அந்தரேகை ஆயுள் ரேகையின் மீதும் சென்று செல்வாக்கு ரேகையையும் தீண்டியிருக்கின்றது ஆதலால் இந்த சாதகருக்கு சுமார் 36 வயதில் ஓர் ஆபத்தான கெண்டம் ஏற்பட்டு சந்தேகமான முறையில் தேறி இருக்கவேண்டும் அடுத்தாற்போல் சுமார் ஒருமாத காலத்திற்குள் அந்தரேகை செல்வாக்கு ரேகையை தொட்டு இருக்கலாம் இந்தரேகை செல்வாக்குரேகையைத்தொட்டால் நாளுக்குநாள் பலவழியிலும் இவரது செல்வாக்கும் அழியும் குடும்ப வாழ்க்கையில் தரித்திரமுடையவனாக தோன்றப்படும்.



மாணவன்: ஐயா! மேற்கண்டபடியே ஒருவனுக்குரேகை அமைந்திருந்தாலும் துறடுபோல துண்டு பட்டு செல்வாக்கு ரேகையைத் தொட்ட ரேகை அப்படி இல்லாமல் இருதய ரேகையும் இணைந்து ஆரம்பமாகி செல்வாக்கு ரேகையைப்பற்றி இருந்தால் அதனாலென்ன புண்யமுண்டு?

ஆசிரியர்: தம்பி! இருதயரேகையின் முனையில் மேற்கண்டரேகை கத்திரிபோல் ஆரம்பமாகியிருப்ப தால் கபட மற்ற உள்ளமாயினும் எதிலும் தன் குணத்தை சற்று மாற்றியே தீரும் இருந்தாலும் அந்தரேகை தொங்கலிட்டு வளைந்து கீழ்நோக்கி அழகுடன் செல்வாக்கு ரேகையில் இணைக்கப் பெற்றிருப்பதால் எதிலும் லாபமே யடையக்கூடும் ஆனல் அதுவும் சிலகாலம் அதாவது 45 வயது முதல் 48 வயதுவரையில் இந்த அதிர்ஷ்டபலனைச் சொல்லலாம்.



மாணவன்:— ஐயா! சீருடனும் அமைப்புடனும் தொழில் ரேகை அமைந்திருப்பினும் அதில் ஒருரேகை கதிர்போல் பிளவுபட்டுத் தோன்றிஞல் அதில் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! இம்மாதிரியான ரேகை அமைந்து இருப்பவர்களுக்கு தொழில முறையில் சாதாரணமாக சம்பாததியம் சில காலம் இருந்தாலும் இடையே நடுவில் ஏதேனும் ஓர் காரணத்திஞல் இருவழியிலும் சம்பாத்தியம் ஏற்படலாம் அதிலும் இந்த ரேகையின் முடிவு இருதய ரேகையைத் தொட்டு இருப்பதால் எத்தனை விதத்தில் எவ்வளவு லாபங்களை அடைந்தாலும் ஒருவருக்கும் ஒரு காசும் தர இவரது உள்ளம் இசையாது பேச்சு மட்டிலும் பாலில் பழம் நழுவி விழுந்தாற் போலிருக்கும்.



மாணவன்:ஐயா! தங்களுரைத்தபடி மேற்கண்ட தொழில் ரேகையில் கதிர் போல் பிளவு பட்டிருப்பதும் தவிற புத்தி ரேகையில் ஓர் ரேகை பிளவு போல் ஆரம்பத்திலேயே அமைந்திருக்கக் கண்டால் அதற்கு என்ன பலனைக் கூறவேண்டும்.

ஆசிரியர்: தம்பி! தொழில்ரேகை

யின் பலன் தான் இருவழியிலும் நல்ல ஆதாயத்தை அளிப்பதென்றாலும் புத்திரேகை பிளவு பட்டிருப்பதால் சமயசந்தர்ப்பமான புத்தி இவருக்கு அமைந்திருக்கும் இதனால் எக்காரியத்திலும் தன் புத்தி சாதுர்யத்தினாலேயே மேன்மையடைவார் இவருக்கு கவலை தெரியாமல் குடும்ப வாழ்க்கையில் களிப்பூட்டும் என்றும் கூறலாம்.

மாணவன்: குருவே! தொழில் ரேகையானது மேற்புறத்தில் தான் கதிர் விட்டுகாணப்பட்டால் இருவழியிலும் லாபமுண்டு எனக் கூறினீர்கள் ஆனால் அப்படியின்றி கீழ்ப்பாகத்தில் மேற்படி ரேகை பிளவுபட்டு மேலே சனிமேட்டில் காணப்பட்டவருக்கு என்ன பலனுண்டு?



ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகை மேற்புறத்தில் பிளவு பட்டிருந்தால் இவர்களின் பிறவியிருந்து சாதாரணமாக தொழில் முறையிலிருந்தாலும் பிற்காலத்தில் நல்லவிதமாக சிலவழியில் லாபத்தைத் தரும் தொழில் உண்டென்றும் கூறலாம் ஆனால் அடிபாகத்தில் பிளவுபட்டு மேற்பாகம் தனித்துசனிமேட்டை அடைந்திருக்குமானால் இவர்கள் சிறுவயது முதற் கொண்டே பலவிதமான தொழிலிலீடுபட்டு பணம் சம்பாதிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பார். ஆனால் நாள் போகப்போக அதுகளெல்லாம் மாறி ஒரே தொழில் முறை நீடிக்கும் எனலாம்.

மாணவன்: ஐயா! தாங்கள்கூறியது உண்மையே ஆனால் அந்த கீழ்ப்பாகம் பிளவுரேகையின் பக்கத்திலேயே தொழில் ரேகை போன்று சந்திர மேட்டிலிருந்து ஆரம்பித்து நடுப்பகுதியில் வளைந்து புதன் மேட்டிற்கும் சூரியமேட்டிற்கு நடுபாகத்தில் முடிவடைந்திருக்குமானால் அதற்கு யாது பலன் ஏற்படும்?

28

ஆசிரியர்: தம்பி! உனது புத்தியின் நுட்பத்திற்கு எனது உள்ளம் மேலும் மேலும் பூரிப்படைகின்றது. நீ கூறியபடி தொழில் ரேகையின் பக்கத்தில் ஒரு ரேகை காணில் தொழில் நடந்தாலும் நடவாது போனாலும் இவருடைய கிரகராசிக்கு சந்திரன் வரும காலங்களில் நல்ல லாபத்தை அடையக்கூடும் தவிர இவர் ஓர் கலையில் வல்லவராகவோ அல்லது கல்வியிற் சிறந்தவராகவோ இருக்க வேண்டும்.



மாணவன்: ஐயா! தொழில் ரேகையின் இருபக்கங்களிலும் இரண்டு ரேகைகள் காணப்படுவதுடன் ஒன்று ஆயுள் ரேகையின் மீதும் உள்ளங் கையின் அடிபாகத்திலிருந்தும் உதயமாகி இருந்தால் இதற்கு என்னவென்று பலன் கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகையின் மீது ஒரு ரேகையும் உள்ளங்கையின் அடிபாகத்தில் ஓர் ரேகையும் சந்திரமேட்டில் ஒரு ரேகையும் ஆரம்பமாகி பார்வைக்கு சூலம்போல் தோன்றுமானல். இவர் ஏதாவது ஆலயங்களில் தொழில் செய்து ஜீவிப்பவராக இருக்கலாம், அல்லது மாந்திரீகத்திலோ, வைத்திய முறையிலோ, கைதேர்ந்தவராகவும் இருக்கக்கூடும். ஆனல் இவைகள் எதுவும் இவருக்கு அமையாத போதிலும் எந்த தொழிலும் செய்ய இடந்தராத மனதுள்ளவர் எனக் கூறலாம்.



மாணவன்: ஐயா! உள்ளங் கையின் கீழ்பாகத்திலிருந்து ஆரம்பித்த தொழில் ரேகையும் அதில் சிக்குப்பட்டிருக்கும் ஓர் உபரேகையும் ஒருமுனை குரு மேட்டிலும் ஒருமுனை புதன்மேட்டிலும் முடிவு காட்டப்பட்டிருப்பதால் அதற்கு என்ன பலன் கூறலாம்?

ஆசிரியர்: தம்பி! இதை சாமான்ய

மானரேகை எனமதியாதே! இதைசிலர் கத்திரிரேகை என்றும் முக்கோண ரேகை என்றும் கூறுவார்கள். ஆனால் இம்மாதிரியான ரேகை கண்டுள்ளவர்கள் மேன்மையான தொழில் முறையோ, அல்லது ஒரு பெரிய தொழிற்சாலையின் முதலாளியாகவோ, ஒரு சிறந்த தனவந்தராகவோ இருக்கலாம்.

மாணவர்: குருவே! மற்றொன்று மறந்தேன் மன்னிக்கவும் அதாவது இப்பொழுது தாங்கள் தெரிவித்த ரேகையில் குருமேட்டில் ஓர் நட்சத்திரக்குறி கண்டிருந்தால் இதனால் மேற்கண்ட பலன்களுக்கு ஏதாவது நஷ்ட முண்டாகுமா ?

ஆசிரியர்: தம்பி! கத்திரிப்போன்ற வாய்புறத்தில் அதாவது குருமேட்டில் நட்சத்திரக்குறி கண்டால் எக்காரியத்திலும்வெற்றியென்பதைசந்தேகிக்க முடியாது குடும்ப வாழ்க்கையில் கஷ்டதிசையோ மனக்கவலையோ இவர் மனதார கொள்வதற்கு இடமில்லை, லாபங்களிலும் மேன்மையான லாபங்களே இவர்க்கு உண்டு என்னலாம் ஆனால் மனோதைரியபட்டிலும் சற்று குறைவாகவே இருக்கலாம்.



மாணவன்: ஐயா! தனரேகை என்னும் தொழில் ரேகையானது ஆயுள் ரேகையுடன் இணைந்து விளங்குமானால் அதனால் நன்மையுண்டா அல்லது தீமையான பலனை அடையக் கூடுமா?

ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகையுடன் சம்மந்தப்பட்டு தொழில்ரேகையானது இணைந்து விளங்குமானால் இவர் தனது உயிருக்கே ஆபத்தான தொழில் முறையில் ஈடுபட்டுருக்கலாம் அப்படிக்கின்றி தொழிலில் நல்லவிதமான சுக ஜீவிதமாயிருப்பினும் நண்பர்களாலேயே சில சதித்திட்டங்களுக்குள்ளாகி நிவர்த்தியாகலாம்.



மாணவன்: குருவே! ஒருவருக்கு தொழில் ரேகையில் கீழ்ப்பாகத்தில் ஒரு வெள்ளைப்புள்ளியும் மேல் பாகத்தில் அதிலும் ஒழுங்கீனமான முறையில் சில சிறு துண்டுரேகை குறுக்காக காணப்பட்டால் அதனால்அவர்கள் நன்மையடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! சாதாரணமாகதொழில்ரேகை ஆரம்பத்தில் புள்ளிகண்டாலே எத்தகைய தொழில் முறையாயினும் சற்று தவறுவதற்கு மார்க்கமுண்டு. அதிலும் மேல் பாகத்தில் சில சிறு துண்டுகள் காணப்பட்டால் அடிக்கடி தொழில் முறையில் பல குற்றம் குறைகளும் நிந்தையான பெயர்களும் ஏற்படும்.




மாணவன்: ஐயா! தொழில்ரேகையானது ஒழுங்கான முறையிலிருந்தாலும் அதின் முனையில் அதாவது சனி மேட்டில் நான்கு சிறு கோடுகள் காணப் பட்டால் அதற்கு என்ன பலன் கூறலாம்?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகையின் மேல் பாகத்தில் நான்கு துண்டு ரேகைகள் காணப்பட்டால் எத்தொழிலிலும் இவர்கள் உருபடாதவர்களாக விளங்குவார்

மாணவன்: ஐயா! மேற்கண்ட அதன் சந்தேகத்தையும் தயவு செய்து நிவர்த்திக்க வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! உனது வினவிற்கு தந்த பதிலளிக்கிறேன் அதைப்பற்றி கவலைபடாது தைரியமாகக் கேள் பதில் தெரிவிக்கிறேன்.

மாணவன்: ஐயா! சூரிய மேட்டிலும் புதன் மேட்டிலும் இருகோடுகள் காணப்பட்டால் அதற்கென்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! புதன்மேடு கனத்திருப்பவர்கள் கலையிலும் கல்வியிலும் சிறந்து விளங்குவார்கள் அதில் கோடுகள் கண்டால் அத்தொழிலில் பின்னமுண்டு குருமேட்லிருந்தால் இவருக்கு குடும்பசெல்வாக்கிலும் பலதொல்லைகள் உண்டு என்னலாம்.

மாணவன்: ஐயா! ஆயுள்ரேகைமீது எந்தவயது அளவில் அந்த துண்டு ரேகைகள் காணப்படுகின்றனவோ அந்த வயதுகளில் கெண்டங்கள் பல வரவும் மார்க்கமுண்டு என்று கூறலாம்.



மாணவர்: ஐயா! உள்ளங்கையின் அடிபாகத்திலிருந்து ஆரம்பமாக வேண்டிய தொழில் ரேகையானது சந்திரமேட்டில் ஆரம்பமாகி முனையில் பிளவுபட்டு ஒரு முனை சூரியமேட்டையும் மற்றொருமுனை புதன் மேட்டையும் நோக்கினுல் அதனுல் எவ்வித பலன்களைக் காணக்கூடும்?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகைச் சந்திர மேட்டில் நின்றிருப்பதால் சிறந்த அதிர்ஷ்ட சாலியாக ஜாதகர் விளங்கக்கூடும். அதிலும் புதன் மேட்டிலிருக்கும் கிளையானது கல்வியிற் சிறந்த ஓர் வித்வானுகவும் அமைந்து அதில் நல்ல பலனையும் மேலான பதவியையும் தரும் ஆனுல் சூரிய மேட்டை ஒரு முனை பார்ப்பதால் அதைக் கெடுக்கவும் மார்க்கமுண்டு ஆனுல் அச்சமயத்தில் அவர்களின் கிரக அமைப்பு போல் நடைபெறுமென்று தெரிந்து கொள்ளவேண்டும்.



மாணவன்: ஐயா! தொழில்ரேகை யானது ஆரம்பத்தில் வளைந்து இருப்பதோடு மேல்பாகம் முக்கால் பங்கிலேயே அத்தொழில் ரேகை நின்றிருப்பதோடு அதின் முனையில் ஒரு கருப்புப்புள்ளிக்காணப்பட்டால் அதனால் அவர் விர்த்திகர மடைவாரா அல்லது தாழ்மையாக இருக்க நேரிடுமா?

ஆசிரியர்: தம்பி! ஆரம்பத்திலேயே தொழில் ரேகையானது வளைவுபட்டிருந்தாலும் கஷ்டமான தொழில் முறையில் ஈடுபட்டவராக இருக்கலாம். அப்படி கஷ்டமான திசையிலீடுபட்டவராயினும் சுமார் 60 வயதிற்குள்ளேயே ஏதேனும் ஓர் காரணத்தால் தொழிலைவிற்கவும் நேரிடலாம். பற்றுக்குறைக்கு கருப்புப்புள்ளியும் காணப்படுவதால் கஷ்ட திசையிலும் கணக்கற்ற கஷ்டங்களுண்டு.

மாணவன்: ஐயா! தொழில் ரேகை யானது நடுபாகத்தில் ஆரம்பமாகி முக்கால் பாகத்திலேயே நிழல்போல் பட்டதும் படாததுமாக சிதரலிட்டு காணில் அதற்கு என்னபலன் கூறலாம்?



ஆசிரியர்: தம்பி! இவருக்கு சிறு வயது முதற்கொண்டு தொழில் முறை அனுபவமே இராது. பாதிவயதில் தொழில் செய்ய முற்படுவார். அதிலும் ரேகை சிதரலிட்டு இருப்பதால் அவ்வளவு லாபத்தை தரக்கூடிய தொழிலாக இராது. அப்படி இருந்தாலும் வெகுநாளைக்கு அத்தொழில் நீடித்திராது. அதனால் மிகவும் கஷ்ட திசையாகவே விளங்கக்கூடும்.




மாணவன்: ஐயா! தனரேகையாகிய சனிரேகை ஆரம்பத்திலேயே பாதியில் துண்டுபட்டு இருந்தால் அதனால் என்ன பலன்?

ஆசிரியர்: தம்பி! தொழில்ரேகையானது எந்த வயதில் துண்டித்துள்ளதோ அவ்வளவு வயது வரையிலும் நல்ல கௌரவமான தொழில் நடத்துபவராகஇருப்பார்ஆனால் அத்தொழில் பாதியிலேயே நவறி விடக்கூடும்.

மாணவன்: ஐயா! ஆயுள்ரேகையானது மேல் பகுதியில் கிளைத்து பிளவுபட்டு உள்ளங்கை வரையில் வந்திருப்பதால் நன்மையடைய முடியுமா?

ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகையானது எந்த வயது அளவில் குறிக்கின்றதோ அந்த வயதில் ஏதேனும் ஒரு கெண்டமோ நோய்கண்டோ கடினமான முறையில் நிவர்த்திக்கலாம் ஆனால் கிளைத்திருக்கும் ரேகையில் அந்த ரேகை பாகம் எத்தனை வயதில் அந்தரேகை முடிவடைந்துள்ளதோ அதுவரையில் நல்ல யோகத்தையும் சுகபோகத்தையும் தரக்கூடும்.



மாணவன்: குருவே! தொழில் ரேகையானது முறையிலிருப்பினும் அத்தொழில் ரேகையும் அடிபாகம் துண்டித்தும் பல துண்டுரேகைகள் உள்ளங்கை முற்றும் கண்டாலும் ஆயுள்ரேகையும் முக்கால் பாகத்தில் துண்டுபட்டிருப்பதாலும் அதற்குப்பலன் என்னவென தெளிவாக கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையில் பலதுண்டு ரேகைகள் காணப்பட்டால்இவரது குடும்பவாழ்க்கையில் பல கஷ்டங்களைக் காணலாம் தொழிலும அவ்வளவு சுகமிராது அப்படி இருந்தாலும் ஆயுள்ரேகை

யின் அளவு போல் ஆயுளும் முடிய மாரக திசையும் காட்டும் என கூறலாம்.

மாணவன்: குருவே! புத்தி ரேகையின் ஆரம்பத்திலும் ஒருபிளவுரேகை உள்ளது அதன் பலனையும் உணர்த்துவீர்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையின் ஆரம்பத்தில் ஒரு கிளைத்த ரேகையானது கண்டிருந்தால் சிலநாள் புத்தி சுவாதீனமற்று பலபேர்களின் வார்த்தைகளுக் கிணங்கி தன் வாழ்க்கைப்பாதை தவறி நடக்கவும் நியாயமுண்டு.



மாணவன்: குருவே! தொழில் ரேகையானது மேல் முக இருதய ரேகையுடன் சம்பந்தப்பட்டு அதில் சிறு கிளைரேகை சேர்த்து கொடி போல் உள்ளங் கையிலிருந்தால் அதனால் என்ன லாபத்தை அடைய முடியும்?

ஆசிரியர் தம்பி! தொழில் ரேகை மேற்புறத்தின் பாகம் இருதயரேகையுடன் சம்பந்தப்பட்டு அதில் சிறுகிளைரேகை சேர்ந்து விருதுகொடி போல் காணப்பட்டால் அவர்கள் எந்தத் தொழிலிலும் அதிகாரம் வகித்தவர்களாகவே இருப்பார்கள் இவர்கள் ஜீவிய காலத்தில் ஓர் பெரிய உத்தியோகஸ்தனாகவும், விளங்கக்கூடிய யோகமுண்டு.

மாணவன்: ஐயா! தொழில் ரேகை முன்னும் பின்னும் துண்டித்து நடு பாசத்தின்ரேகை மட்டும் கண்டால் அதின்பலன் என்னவென கூறலாம்



ஆசிரியர்: தம்பி! முன்னுமில்லாமல் பின்னுமில்லாமல் துண்டுபட்ட ரேகையானது அவ்வளவு சுசமானதல்ல, தொழிலும் விர்த்தியில்லை .

மாணவன்: ஐயா! புத்திரேகையானது பிளவு பட்டு நடுவிலேயே நிறுத்தப்பட்டிருந்தாலும் செவ்வாய் மேட்டில் ஒரு கருப்புப்புள்ளியிருந்தாலும் அதனால் என்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையானது ஒரு நிலையிலில்லாமல் பல தொழில் செய்து பாடுபடவும் பல கஷ்டங்களையடையவும் நேரிடலாம். ஆனால் செவ்வால் மேட்டில் கருப்புப்புள்ளி ஒன்று கண்டிருந்தால் இன்னும் அதிகமான கஷ்டங்கள் சம்பவிக்கும். அல்லது வெள்ளைப்புள்ளி கண்டால் கஷ்டங்கள் பலவிதத்திலும நிவர்த்தியாகலாம்.



மாணவன்: ஐயா! தொழில்ரேகையானது நடுப் பாதிலேயே வளைவுபட்டு ஆயுள்ரேகையுடன் கலந்திருக்குமானால் என்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகையுடன் சம்மந்தப்பட்ட ரேகையானது பாதிவயதில் தொழிலைக் கெடுக்கும். அதனால் பல இடைஞ்சல்கள் அடையக் கூடும்.



மாணவன்: ஐயா! தொழில்ரேகையில் மேற்பகுதியில் குருமேட்டை நோக்கினாற்போல் கிளைத்த வரி கண்டிருந்தால் அதனால் அவர்கள் நன்மையடைவார்களா தீமையடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! கிளைத்த தொழில் ரேகை கண்டால் கீர்த்தியும் லாபமும் அடையக் கூடுமென்று முன்னமே கூறியிருக்கின்றேன். அதிலும் குருமேட்டிலிருந்தால் மிகவும்

தொழில் லாபமுண்டு. மனநிம்மதியுடன் குடும்பத்தில் குறைவற்ற வாழ்க்கையும் ஏற்படலாம்.



மாணவன்: ஐயா! சனிமேட்டில் தொழில்ரேகையானது சூரியமேட்டில் முடிவடைந்ததல்லாமல் அதன் இறுதி முனையில் ஓர் நட்சத்திரக்குறி இருக்கக் கண்டால் அதனால் நன்மையா தீமையா

ஆசிரியர்: தம்பி! சனிமேட்டிலிருக்குப் தொழில்ரேகைசூரியமேட்டில்பிரிக்கப்பட்டிருந்தால் சற்றுநிர்ப்பந்தமான தொழிலாக இருக்கலாம், ஆனால் அதின் முனையில் நட்சத்திரக்குறி கண்டிருப்பதால் நிர்ப்பந்தமான தொழிலாக இருந்தாலும் அதில் சில நாளில் அதிர்ஷ்டவசமான பல லாபகரங்களேற் படலாம். அப்படி ஏற்பட்ட போதிலும் சூரிய மேட்டில் நட்சத்திர ரேகை காணப்படுவதால் அதின் பலன் அதிக நாளிருக்காது.

மாணவன்: ஐயா! அவ்விதமான ரேகையுள்ள கரத்தில் அதே தொழில் ரேகைமீது சிக்கல்போல் ஓர் ரேகை துவக்கமிட்டு குருமேட்டில் முடிவடைந்து அதின் முனையில் ஒரு நட்சத்திரக்குறி கண்டிருந்தால் அதன் லாப நஷ்ட மென்ன?

ஆசிரியர்: தம்பி! தொழில்ரேகையில் சிக்கல் ஏற்பட்டு அது குருமேட்டில் அமர்ந்திருந்தால் கஷ்டமான தொழில் முறையி லிருப்பவர்களாயினும் நல்ல அம்சமான பெரிய உத்தியோகத்திலமரும் ராசியுண்டாகும் அதிலும் குருமேட்டிலிருக்கும் நட்சத்திரக்குறி அவரது குடும்பத்திற்கு ஓர் யோக பலனை அளிக்க வல்லது.

மாணவன்: ஐயா! புத்திரேகையானது ஆரம்பத்தில் மெல்லிய கோடு தோன்றி இறுதியில் கனத்து இருக்குமானால் அதனால் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையானது முடிவில் கனத்திருந்தால் முதலில் அவர் வாழ்நாள் முழுவதி லும் நல்ல பக்தியுடன் இல்லறதர்மத்தை நடத்தி நன் மார்க்கமாக வாழ்ந்திருந்தாலும் வயது அதிகரிக்கசில மந்த புத்தியும் கல்நெஞ்சமும். கபடமான யோசனை யும் கலகத்தையே எதிர்பார்க்கும் கருத்து முண்டா கும் என்று கட்டாயமாகக் கூறலாம்.




மாணவன்: ஐயா! உள்ளங்கையில் மணிக்கட்டிற்கு நேராயிருந்து ஆரம்ப மாகவேண்டியதொழில்ரேகையானது ஆயுள்ரேகையின் மீதிருந்து ஆரம்ப மாக சனிமேட்டில் முடிவடையும்மேற் படி ரேகையானது புதன் மேட்டிற்கு கீழ் வளைந்து நின்றால் அதனால் அவ ருக்கு அனுகூலமா பிரதிகூலமா?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகை ஆயுள்ரேகை யிலிருந்து ஆரம்பமாகி புதன்மேட்டில் முடிவடைந் துள்ள தொழில் ரேகை முனையின் வளைவு கண்டிருந் தால் அவரது ஆயுள்காலம் சுமார் 60 வயதுவரையில் நல்லயோகமும் கல்வி சம்பந்தமான தொழில் முகாந் திரமாக இருக்கலாம். அதனால் அவர் சுகபோகயோ காதி காரணமாகவும் விளங்கக்கூடும் ஆனால் மேற் கண்ட அறுபது வயதிற்குப் பிறகு அவரது அமைப்பு போல் தான் பலன்தரும்.




மாணவன்: குருவே! தொழில் ரேகை யானது சனி மேட்டிலிருந்துஆரம்பமா காமல் புதன் மேட்டில் ஆரம்பமாகி இருபாகம் வரையில் செல்லாமல் நடுப் பாதியில் நின்றிருந்தால் அதனாலவர்க ளுக்கு நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! சனி மேட்டில் ஆரம்பமாக வேண்டிய தொழில்ரேகை யானது புதன் மேட்டில் ஆரம்பமாகி

இருப்பதால் அதனுல் இவர்கள் லாபமடைவார்களே ஒழிய நஷ்டமென்பதை காணமுடியாது அப்படியிருந்தும் அந்தொழில் சாமான்யமான தொழிலாக இராது அதாவது கல்வியில் சம்மந்தப்பட்ட ஓர் கலைவாணராகவோ, அல்லது ஓர் கலைஞராகவோ, அல்லது மேன்மையான ஸ்திதியில் விளங்கக்கூடும்.

மாணவன்: குருவே! தாங்கள் தெரிவித்த ரேகையின் பலனைக்கேட்டு பெரு மகிழ்ச்சி யடைந்தேன். ஆனுல் புத்திரேகையானது தொங்கலிட்டு இருதய ரேகைமீது பாய்ந்து தொழில்ரேகையை பின்னலிட்டு நின்றிருப்பதால் அதனுலென்ன பலன் காணமுடியும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையானது சாதாரணமாக தொங்கலிட்டு இருந்தால் இவருக்கு சுவாதீனமற்ற புத்தியென்று கூறவேண்டும் இந்தரேகை அப்படியில்லை உள்ளங்கையை நன்ருக உற்றுப்பார். தொழில்ரேகையும், இருதயரேகையும், புத்திரேகையும் ஒன்று சேர்ந்து ஓர் முக்கோணமாக விளங்குகிறது உள்ளங்கையில் முக்கோணமிருந்தால் மூலதனமில்லாமல் ஓர் தொழிலில் பெருத்த முதலாளியாகுவதற்கு ஒரு அம்சமுண்டு என்றும் கூறலாம் அப்படி இருப்பினும் 50 வயதுக்குள்ளாகத்தான் இந்த ராசி ஏற்பட வழியுண்டு. ஆனுல் இவருக்கு ஏதேனும் கெட்ட கிரகங்களின் கோட்பாடினுல் பல வழியில் காலத்தை கடத்தி இருந்தால் அதை நிர்ணயிக்க முடியாது.

மாணவன்: ஐயா! அப்படி அம்சம் பொருந்திய கரத்தில் சனிமேட்டிற்கும் புதன்மேட்டிற்கும்ஓர்வளைவுரேகை கண்டிருந்தால் அதனுல் அவர்கள் நன்மை அடைவார்களா அல்லது தீமையடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! எந்தரேகை எப்படி இருந்தாலும் எவ்வளவு கஷ்டத்தை பொருந்தியவர்களாக இருப்பினும் சனிமேட்டிற்கும் புதன்மேட்டிற்கும் ஓர்

வளைய மேற்பட்டிருக்குமானால், கவலைகளெல்லாம் கதிரவனைக் கண்ட பனிபோல் விலகும். கபடமில்லா தவர்களின் சிநேகமுண்டாகும் சனிதிசை, சனிபுத்தி சனி அந்தரம் புதன்திசை புதன்புத்தி. புதன் அந்தரம், இதுகள் வரும் காலங்களில் சகல பாக்கியங்களும் பலவிதமான பணவசதிகளும் ஏற்படக்கூடும் எனலாம்.




மாணவன்: ஐயா! முன்போலவே தொழில் ரேகையின் முகனை புதன் மேட்டில் முடிந்து அதில் சிறு துண்டு கிளைத்து இருதய ரேகையில் கலந்து ஒரு முக்கோணம்போல் தோன்றினால் அதனால் லாபமா நஷ்டமா?

ஆசிரியர்: தம்பி! முக்கோணம் உள்ளங் கையில் அமைந்திருப்பவருக்கு சாதாரணமாகவே நல்லபலன் தான் ஆனால் துண்டாக இருதயரேகைமீது ரேகை கலந்திருப்பதால் சற்று கல்நெஞ்சமும், காசு விஷயத்தில் கண்ணும் கருத்துமுள்ளவராக காணப்படலாம்.



மாணவன்: ஐயா! தொழில்ரேகையானது அமைப்புபோல் அமைந்திருந்தாலும் அதின் முனையில் ஓர் தீவுக்குறியோ அல்லது ஓர் துண்டுரேகையோ காணப்பட்டால் அதற்கு என்னபலன் சொல்லவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகையானது நல்ல பாகத்திலிருப்பதால் இவர்களுக்கு தொழில் முறையில் ஒருவித இன்னலுமில்லாமல் இருக்கும் அப்படி இருந்தாலும் கடைசியில் துண்டுரேகை இருப்பதால் தொழிலில் திடீரென முடிவில் நிலுவையாகி கஷ்டதிசையும் ஏற்படலாம்.

மாணவன்: ஐயா! இது இப்படி இருக்க ஆயுள் ரேகையிலும் ஓர் துண்டுரேகை சம்மந்தப்பட்டு இருக்குமானால் அதற்கு என்ன பலன் சொல்லலாம்?

ஆசிரியர்: தம்பி! ஆயுள்ரேகையில் எவ்விடத்தில் ஒரு சிறுகோடு விழுந்துள்ளதோ அதை நான்கு பாகமாக பகிர்ந்து அதில் ஒருபாகத்தை 25-வயது எனக்குறித்து அதன் அளவுப்படி கணக்கிட்டு எந்த வயதில் இருக்கின்றதோ அந்த வயதில் ஓர் பெரிய கெண்ட மேற்படலாமெனக் கூறலாம்,



மாணவன்: குருவே! ஒருவருக்கு தொழில்ரேகை இருந்தும் ஆயுள்ரேகையே இல்லாவிடில் அவர்கள் கால கிரகம் எப்படி?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகை இல்லாவிடில் ஆயுளே அற்பமெனவும் பிறந்தபோதேயும் மரணமாக ப்ராப்தமுண்டு அப்படிஉலகில் இருப்பார்களேயாமானல் தெய்வப் பிறவியெனவும் தெய்வீக சக்தி வாய்ந்தவரெனவும் துறவரவாசிகளாகவும் முனிவராகவும் இருக்கலாம் என்று கூறலாம்.

மாணவன்: ஐயா! ஒருவருக்கு ஆயுள் ரேகை சரிவர இருந்தாலும் இருதய ரேகையை இணைந்தாற்போல் இருக்கவேண்டிய புத்திரேகையானது குருமேட்டிற்கும் சனிமேட்டிற்கும் நடுவில் ஆரம்பமாகி புதன்மேட்டிற்கும் அங்காரக மேட்டிற்கும் நடுபாகத்தில் முடிவடைந்திருக்குமானல் அதனல் அவர்களடையும் பலன்யாது?



ஆசிரியர்: தம்பி! புத்திரேகையானது குருமேட்டிற்கும் சனிமேட்டிற்கும் நடுவில் ஆரம்பமாகி இருந்தால் இவர்கள் வீண் செலவு செய்து விபரீதப்படுவார்கள் என்னலாம்.

மாணவன்: ஐயா! அப்படி அமைந்த ரேகையாயிருந்தாலும் உள்ளங்கையில் முருகன் கரத்திலுள்ள வேல் போன்ற ஓர் குறி கண்டிருந்தால் அதன் பலன் எப்படி?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையில் வேல் போன்ற ஒருரேகை இருந்தால் அதனால் அவர்கள் பலவழியிலும் நல்ல பலன்களை அடைவார்கள் தவிர தெய்வ ப்ரசாதியாகவும் ஓர்மாந்திரீக நிபுணராகவும் விளங்க கூடுமென கூறலாம்.




மாணவன்: ஐயா! புத்திரேகை குரு மேட்டிற்கும் சனி மேட்டிற்கும் நடுவில் ஆரம்பமாகி புதன் மேட்டில் முடிந்திருப்பதால் அதின் நடுபாகத்தில் ஒரு ரேகை தொங்கவிட்டு இருதய ரேகையில் முடிபோல் தோன்றி தொழில் ரேகையுடன் இணைந்து இருப்பதால் அதின் பலா பலன் என்னவென்று கூறலாம்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகையிலிருந்து ஆரம்பமாகிய ரேகை இருதயரேகையில் முடிந்து தொழில் ரேகையில் இருந்தால் புத்தியின் சாதுர்யத்தினால் பல தொழில் செய்யலாம் அதனால் முன்னுக்கு வரலாம். ஆனால் எத்தொழில் செய்தாலும் எவ்வளவு தனம் தேடினாலும் இறுதியில் பரமஏழையாய் போகக்கூடும்

மாணவர்: ஐயா! தொழில் ரேகையானது ஆரம்பத்திலேயே ஆழ்ந்து பள்ளமாக துண்டித்திருந்தால் அதனால் நன்மையா தீமையா?



ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகை துண்டித்திருந்தால் சிறுவயதில் பெரியோர்களுக்குப் பயந்து சில நாள் தொழில் செய்யலாம். ஆனால்

வயதேறிய பிறகுதொழிலைவிட்டு முடிவில் தொழிலே இல்லாமல் சோம்பித்திரிவார்கள் எனக் கூறலாம்.

மாணவன்: ஐயா! தவிர ஆயுள்ரேகையின் மீது சில துண்டுரேகைகள் தொடர்ந்து இருந்தால் அதனுல் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! மேற்சொன்னபடி சிறு வயதிலேயே தொழிலின்றி பரதவிக்கும் ஜாதகருக்கு சுமார் 30 வயதுவரையில் அடிக்கடி பலவிதமான கெண்டங்களெல்லாம் ஏற்படலாம். ஆனுல் ஆயுள் அழிவதற்கு வழியிராது.




மாணவன் ஐயா! தொழில் ரேகையானது உள்ளங்கையின் நடுபாகத்திலிருந்து அதிலும் சரிந்து ஆரம்பமாகிய சூரிய மேட்டையடைந்து முனையில் மூன்று பிளவுடன் அதாவது சூலம் போல் தோன்றினுல் அதனுல் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையின் நடுபாகத்திலிருந்து சரிந்து உதயமாகிய தொழில் ரேகையானது சூரியமேட்டில் நின்று சூலம் போல் மூன்று பிளவுபட்டிருந்தால் அதனுல் அவர்களின் தொழில் முறை அபாரமான சக்தி வாய்ந்தது. இவர் எந்த தொழிலையும் கண்ணுல் கண்டதும் செய்யும்படியான சக்தி வாய்ந்தவர்களாக இருப்பார்கள். தெய்வத்தின் பெயராலேயே ஒரு தொழிலாகக் கொண்டு நடத்துவதற்கும் இவர்களுக்கு சக்தியுண்டு தெய்வீகபக்தியும், பல மாந்திரீக உபதேசங்களும் பெற்ற வைராக்கிய சித்தர்களாகவு மிருக்கலாம்

மாணவன்: ஐயா! சூரியமேட்டிலிருப்பது போல் குருமேட்டிலும் ஒருசூலக்குறி கண்டால் அதனுல் அவர்கள் அடையும் பலன் யாது?

ஆசிரியர்: தம்பி! குருமேட்டில் ஒரு சூலக்குறி கண்டிருந்தால் மாந்திரீகத்தில் சிறந்தவர்களாகவோ தெய்வத்தன்மை பொருந்தியவராகவோ இருக்கலாம் இவர்களின் வாக்கினுல் எதைக் கூறினுலும் அவ் வாக்கு தெய்வ வாக்குபோல் பலிதமுண்டாகும்:



மாணவன்: ஐயா! தொழில்ரேகையானது அடிபாகத்திலும் கலக்காமல் மேல் பாகத்திலும் சேராமல் இருந்தால் அதற்கு என்ன பலன் கூறலாம்?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகையானது அடிபாகத்திலும் சேராமல் மேல் பாகத்திலும் கலக்காமல் இருந்தால் சிறுவயதில் சில்நாள் தொழிலின்றி கஷ்ட ஜீவனத்துடனிருந்து பிறகு வாலிப திசையில் ஓர் தொழில்ஏற்பட்டு அதனுல்வெகுகாலம் மேன்மைபெற்று நல்ல விதமான வாழ்க்கையும சீரும் சிறப்பும் ஓங்குமெனக் கூறலாம்.

மாணவன்: ஐயா! அப்படி முடிவில் நின்ற தொழில் ரேகைக்கு மேல்பகுதியில் குருமேட்டைச் சரிந்தாற்போல் புதன் மேட்டுடன் சலந்த ஓர் வளையமேற்பட்டு துண்டு துண்டாக சிதரலிட்டு இருக்குமாஞல் அதனுல் நன்மையா? தீமையா?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகைக்கு மேல்பகுதியில் ஓர் வளையம் குருமேட்டிலிருந்து சரிந்து புதன் மேட்டைத் தொட்டு இருந்தால் நல்லவிதமானலாபங்களும் கொடுக்கல் வாங்கல் பெருமையும மனையில் புத்திர உற்பத்தியும் நோயற்ற வாழ்க்கையாக சிறப்புற வாழ்வார் ஆனுல் அந்த ரேகை சிதரலிட்டு இருப்பதால் அவ்வளவு பலனைத்தர அந்தரேகைக்கு அதிகாரமில்லை ஆனதால் எதிலும் சொற்பபலனையே தரும்,

மாணவன்: ஐயா! இதுதான் இப்படி யென்றால் புத்திரேகையானது சரியான முறையிலிருந்தாலும் அதன் முடிவில் ஒருரேகை தொங்கலிட்டு இருதய ரேகையுடன் கலந்து இருப்பதால் அதற்கு நல்ல பலனா அல்லது துரதிஷ்டவான்களா?

ஆசிரியர்: தம்பி! இந்தரேகையை அவ்வளவு அற்பமானதாக நினைக்காதே இதற்குத்தான் சதுர்கோண ரேகை ஒன்று சொல்லப்படும். ஒருவருக்கு உள்ளங்கையில் சதுர்கோண ரேகை இருந்தால் எத்திக்கிலும் நல்ல கியாதியும், எதிலும் நல்ல லாபங்களும் ஒரு பெரிய உத்தியோகத்திலீடுபட்டு பிரசித்தி பெற்றவராகவும் விளங்குவாரெனலாம்.

மாணவன்: ஐயா! இருதயரேகையின் இருபாகத்திலும் ஒரு X குறி கண்டிருந்தால் இவருக்கு ஏற்படுவது இன்பமா அல்லது துன்பமா இதை சற்று விரிவுடன் எடுத்துக் கூறவேண்டும்?

ஆசிரியர்: அப்பா! இருதய ரேகையின் இடப்பாகத்தில் X குறி இருந்தால் அவருடைய உள்ளம் சுத்தமானதாக நிமிஷத்திற்கொரு குணபாவம் பொருந்தியிருப்பதல்லாமல் எதையும் செய்யலாமென மனது தோன்றும் அடுத்த நிமிஷமே அது மாறுதலடைந்து முடிவில் ஏமாற்றமடையும் உள்ளம் பொருந்தியவராகவும் இருக்கலாம்.

மாணவன்: ஐயா! இதெல்லாம் இப்படி இருந்தாலும் ஒருவருக்கு ஆயுள்ரேகையின் உள்பாகத்திலுள்ள சுக்கிர மேட்டில் பல கோடுகள் பலவிதமாக தென் பட்டால் அதற்கேதாவது பலனுண்டா?

ஆசிரியர்: பலனுண்டு அதாவது ஒருவருக்கு சுக்கிரமேடானது வேறு எந்த ரேகையும் தென்படாமல் சுத்தமாகவும் மழமழப்பாகவும் அழகாகவும் இருந்தால் நல்ல அதிர்ஷ்டசாலி யென்று கூறலாம்.

ஆனால் பல துண்டுரேகைகள் காணப்படுவதால் பல விதத்திலும் பொருள் நஷ்டமும் துரதிஷ்டமுந்தான் பொருந்தியிருக்கும்.

மாணவன்: ஐயா! தொழில் ரேகையானது நடு பாதியிலிருந்து ஏற்பட்டு அதன் முனை சனி மேட்டில் முடியாமல் புதன் மேட்டிற்கும் சூரிய மேட்டிற்கும் நடுவில் முடிந்திருப்பதுமல்லாமல் மூன்று கிளையாக முகனையில் பிரிந்து ஓர் திரிசூலம் போல் இருந்தால் அதற்கு என்னபலன் சொல்லலாம்.




ஆசிரியர்: அப்பா! சந்திர மேட்டிற்கும் சுக்கிரமேட்டிற்கும் நடுவில் தொழில் ரேகையில்லை இருந்தாலும் அதைப்பற்றி கவலையில்லை ஆனால் தொழில் ரேகை எந்த வயதிலிருந்து ஆரம்பமாகியிருக்கின்றதோ அந்த வயதிலிருந்து நல்லவிதமான அம்சம் பொருந்திய ஓர் தொழில்ஏற்பட்டு அதனால் முன்னேற்றமடைவர். ஆனால் இறுதி முகனையில் திரிசூலம் போன்ற மூன்று கதிர் ரேகை பிரிந்துள்ளதால் இவருக்கு பல வழியிலும் நல்ல லாபத்தை இறுதியில் தரலாம் அதனால் இவர் ஓர் செல்வச் சீமானாகவும் விளங்கக் கூடுமென கூறலாம்.

மாணவன்: ஐயா! தொழில் ரேகைதான் இப்படி இருந்தாலோ இருதயரேகையும் இடையிடையே துண்டுபட்டும் அதற்கு மேலும் கீழுமாக சில சிறு ரேகைகள் ஏற்பட்டு இருந்தால் இவர்களின் வாழ்க்கைப்பாதையில் வறுமையா அல்லது வளமையா?

ஆசிரியர்: இருதயரேகை என்பது அவரவர்களின் மனதின் தெளிவை ஏற்படுத்தக் கூடியது ஆனால் மேற்கண்டரேகை இருப்பார்கள் நல்லகுணபாவத்துடன் இருப்பார்கள் என்றுசொல்லமுடியாது

அத்தகையோருக்கு ஆயுள்ரேகையின் நடுவில் மேற்கண்ட குறி கண்டால் சுமார் 30-வயதிற்கு மேல் ஓர் நல்ல யோகமேற்பட்டு அதில் அளவற்ற தனலாபங்களையும் வாகனாதிகளையும் மண்மனை இதுகளின் அமைப்பான லாபகரங்களுமுண்டாகும் ஆனல் அந்த சதுரக்குறியினுள் ஒரு அம்புபோன்ற குறி ஏற்பட்டு இருப்பதினல் பகைவர்களால் ஓர் வைப்பு சூனியங்களோ, அல்லது திடீரென ஒரு கண்டமோ ஆயுளுக்கே ஆபத்து தரக்கூடியதாக ஏற்பட்டு அதனல் ஏராளமான பொருள் செலவழிந்து சந்தேகிக்கும் முறையில் மிகவும் கடினமாக அவர் உயிர்பெற வழி ஏற்படலாம். அப்படி உயிர் பெற்று வாழ்பவர் கடைசிகாலம் வரையில் கவலையில்லாமலும் நோய் நொடியினல் பாதிப்பின்றியும் சுகஜீவியாக வாழக்கூடும்.




மாணவன்: குருவே! ஒருவருக்கு உள்ளங்கையில் தொழில் ரேகை போன்று மூன்று ரேகை ஆயுள் ரேகையினின்று படிப்படியாக ஆரம்பித்து புதன்மேட்டில் ஒரு ரேகையின் முனையில் சூரியமேட்டிற்கு ஒரு முனையும் சனிமேட்டிற்கு ஒரு முனையும் முடிவுகாட்டினல் அதனல் அவர்கள் அடைவது நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! சாதாரணமாக சனிமேட்டில் முடிவு காட்டியிருக்கும் ரேகையால் ஜாதகர் சோம்பலற்று தொழில்செய்து பணம் சம்பாதிப்பதில் ஊக்கமுள்ளவராக இருக்கும், அதிலும் குருமேட்டில் முடிவடைந்துள்ள ரேகையால்தான் தர்மத்திவீடுபட்டுபுகழடையப் பெறலாம். தவிர புதன்மேட்டில் முடிவடைந்துள்ள ரேகையின் பலனவது நல்ல குணமும் கல்வி ஞானத்தெளிவும் கடவுள் பக்தியும், கபடமற்ற உள்ளமும் படைத்திருப்பார். இவரது வாழ்க்கையே

உலகில் ஓர் சீரும் சிறப்பும் பொருந்திய செல்வாக்கான வாழ்க்கையாகவே விளங்கும் என்று கூறலாம்

மாணவன் : ஐயா! இருதய ரேகைக்கும் புத்திரேகைக்கும் நடுவில் நான் நீளமான கோடுள்ள ரேகைகள் கண்டால் அதனால் அவர்கள் என்ன பலனை அடையக்கூடும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகைக்கும் இருதய ரேகைக்கும் நடுவில் பல நீளமான ரேகைகள் காணப்பட்டால் அந்த ஜாதகருக்கு பலவிதமான யோசனைகளும் பலவித குணபாவங்களும் பொருந்தியிருக்கும் ஆனால் எந்தவிதமான யோசனைகளை அவர் செய்த போதிலும் வெகு சுலபமாகவே முடிந்து அதனால் வெற்றி பெறக்கூடிய யோகவானாக விளங்குவார்.



மாணவன்: ஐயா! சனிமேட்டிலிருக்கக்கூடிய தொழில் ரேகை குருமேட்டின் முனையில் நின்று அடிபாகத்தில் கோடாலி போன்று ஓர் ரேகை ஆயுள் ரேகையுடன் சேர்ந்தாற் போலிருக்குமானால் அதற்கென்ன பலன் சொல்லலாம்?

ஆசிரியர்: தம்பி! தொழில் ரேகையானது குருமேட்டின் முகனையிலிருந்தால் அவ்வளவு மேன்மையான தொழிலென்று சொல்ல முடியாது அந்தத்தொழிலும் அடிபாகத்தில் கோடாறி போன்ற ஒருரேகை காண்பதால் ஆரம்பத்திலிருந்தே அவ்வளவு சுகத்தையனுபவிக்க முடியாது நிர்பந்தமாக செய்யக்கூடிய தொழிலாகவே இருக்கும்.

மாணவன்: ஐயா! அதிலும் புத்திரேகை துண்டு பட்டிருப்பதற்கு என்ன காரணமுண்டு?

ஆசிரியர்: தம்பி! ஜாதகர் தொழில் நிர்ப்பந்தமான முறையிலிருப்பதற்கு அதுவே மூக்கிய காரணமாகும்.

மாணவன்: ஐயா! அதுதான் அப்படியிருந்தாலும் தொழில் ரேகைமீது சில துண்டு ரேகைகள் பாய்ந்திருக்கிறதே அதற்கு என்ன பலன் சொல்ல வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! அந்த துண்டு ரேகைகள் எந்தெந்த இடங்களில் ஏற்பட்டு இருக்கிறதோ அந்தந்த வயதுகளில் தொழில் கெட்டு தேர்ந்து இருக்கலாம் ஆனால் அப்பொழுது எந்த நிலவரத்தில் ரேகை அமர்ந்திருக்கின்றதோ, அதை கவனித்துக் கூற வேண்டும்.

மாணவன்: குருவே! ஆயுள் ரேகையைத் தொடர்ந்தாற் போல் பக்கத்திலேயே சிதரலிட்டு ஒரு ரேகை இருக்கக்கண்டால் அதற்கு என்ன பலன்?

ஆசிரியர்: தம்பி! ஆயுள் ரேகையை தொடர்ந்து சிதரலான ரேகை தென்பட்டால் இவருக்கு ஆயுள் கால பரியந்தம் அடிக்கடி பலவிதமான நோய்களைக் காட்டிக் கொண்டிருக்கும்.

மாணவன்: ஐயா! இதுவரையில் தாங்கள் கூறிய ரேகையின் விஷயங்களை நன்குணர்ந்தேன். ஆனால் இன்னும் வேறு ரேகையின் விஷயங்களை அடியேனுக்கு தெளிவுறக் கூறுவீர்.

மணிக்கட்டு ரேகை என்னும்

# கங்கண ரேகையின் அமைப்பு

ஆசிரியர்: தம்பி! இதுவரையில் உனக்கு பல ரேகைகளின் அமைப்பைப் பற்றியும் அதனால் ஏற்படும் நன்மை தீமைகளையும் தெளிவுற உணர்த்தினேன் ஆனால் இதில் இன்னும் சிலது உள்ளது. அதையும்

உணர்த்துகிறேன் நன்கு மனதில் பதித்துக்கொள், தவிர அடியில் குறித்திருக்கும் படத்தை நன்கு கவனித்துப்பார், அதிலுள்ள ரேகைகளைத் தெரிந்துக் கொள்.

அதாவது மணிகட்டுரேகை என்பது கரத்தின் உள்ளங்கையின் அடிபகத்தில் மணிக்கட்டில்பல விதமான கோடுகள் சாணப்படும் இந்தமணிக்கட்டு



ரேகையில் பல விதங்களுண்டு சங்கிலி போல் சிதரல் கோடு போல் வளைவு போல் மற்றும் டலவிதம் காணபடும்.

ஆசிரியர்: தம்பி! மேலே கண்டுள்ள படத்தை நன்ருக கவனித்துப்பார். அந்த படத்தில் உள்ளங்கையின் அடிபாகத்தில் மணிக்கட்டில் கோடான ரேகையும் சில பேருக்கு சங்கிலி போன்றும் ரேகை அமைந்திருப்பதுண்டு இதற்குத்தான் கங்கணரேகை என்றும் மணிக்கட்டு ரேகையென்றும் சொல்லுவார்கள்.

மாணவன்: குருவே! கங்கணரேகை யென்றீரே அந்தரேகை ஆழ்ந்து பள்ளமாக அழகு பொருந்தி இருந்தால் அதனுல் அவர்கள் யோகஸ்தர்களாக விளங்குவார்களா? அல்லது துர்பாக்கியத்தை அடைவார்களா? இதன் மர்மத்தை தயவு கூர்ந்து வெளிப்படுத்துவீர்.

ஆசிரியர்: தம்பி! மணிக்கட்டுரேகை அழகு பொருந்தி ஆழ்ந்து பள்ளமாக காணப்பட்டால் சுக போகத்தையும் நல்லபோகத்தையும் ஆரோக்கியத்தையும் செல்வ ஒழுப்பும் அமைந்திருக்கும்.

மாணவன்: ஐயா! இது தான் இப்படியென்றுலோ மணிக்கட்டு ரேகையானது ஒன்றின்கீழ் ஒன்றாக இரு கோடுகள் விழுந்திருந்தால் அவர்கள் அதனுல் அடைவது நன்மையா தீமையா?

ஆசிரியர்: அப்பா! கங்கணரேகை யென்னும் மணிக்கட்டுரேகை ஒன்றின்கீழ் ஒன்று பதிந்திருந்தால் இவருக்கு முதல்ரேகையால் பல அபசமான சுகபோகங்கள் பொருந்தியிருந்தாலும் கீழிருக்கும் அந்த வரையானது அந்த பலன்களை சமயாசமயங்களில் கெடுத்துவிடும். ஆனுல் இவர்களின் கைகளின் பாகம்போல் எவ்வளவு கஷ்டங்களேற்படினும் சமாளித்து நன்மையடையக்கூடும்

மாணவன்: ஐயா! மணிக்கட்டு ரேகையானது மணிபோன்று சங்கிலிபோல் பதிந்து காணப்பட்டால் அதற்கு என்ன பலன் கூறலாம்?

ஆசிரியர்: தம்பி! மணிபோன்ற சங்கிலிரேகை மணிக்கட்டின் மீது விழுந்து பதிந்திருந்தால்இவருக்கு எக்காரணத்தைக் கொண்டும், இணைபிரியாத ஒரு செல்வந்தரின் சிநேகமும் அதனுல் அளவற்ற செல்வாக்கும் பொருந்துவதுடன் இவர் ஓர் பெரும்புகழ் வாய்ந்த புனிதனுகவும் இருக்கக் கூடுமென கூறலாம்.

மாணவன்: குருவே! மேற்கண்ட மணிக்கட்டு ரேகையின்மீது பல துண்டுரேகைகள் கண்டால் இவருக்கு என்ன பலன் சொல்லலாம்?

ஆசிரியர்: தம்பி! அதுபோன்ற துண்டு ரேகைகள் மணிக்கட்டுரேகையின் மீது விழுந்திருந்தால் இவருக்கு புத்திர விர்த்தியிராது. அப்படி இருந்தாலும் சொல்லுக்கடங்காத சுகம்ற்ற பிள்ளைகளாக தோன்றுவார்கள்.

மாணவன்: குருவே! மணிக்கட்டின்மீது பாம்புபோல் வளைந்து வளைந்து ரேகை இருக்குமானுல் அதனுல் என்ன பலனடைவார்கள்?

ஆசிரியர் : தம்பி! மணிக்கட்டு ரேகையின் மீது பாம்புபோல்வளைந்துவளைந்துரேகை காணப்பட்டால் வேண்டிய சீரும் புகழும் பொருந்தியவர்களாயினும் நிமிஷத்திற்கொரு குணமும் நின்றால் ஒரு யோசனையும், உட்கார்ந்தால் ஒரு எண்ணமும் பலவிதமான குணபாவங்களும் பொருந்தி யிருப்பார்கள் இவர்களுக்கு தன் புத்தியேதான் பெரிதாகத் தோன்றும். பிறர் வார்த்தையைக்கேட்கவோ சமயோசிதம்போல் நடக்கவோ நுட்பமான புத்தியிராது.

மாணவன்: ஐயா! ஒருவருக்கு மணிக்கட்டில் ரேகையே தோன்றாமலிருந்தால் அவர்களுக்கு என்ன பலன் சொல்லாம்?

ஆசிரியர்: தம்பி! அப்படி இருப்பவருக்கு கரத்திலுள்ள மற்ற ரேகைகளைக்குறிப்பாகஉணர்ந்து செல்வாக்கு ரேகையின் பலனையும் மற்ற சில நுட்பமான ரேகையின் பலன்களையும் உணர்ந்து அவர்களின் முகவாட்டத்தையும் கண்டறிந்து சமயோசிதம் போல் பலாபலன்களையும் எடுத்துக் கூறவேண்டும்.

# ஆரோக்ய ரேகையின் குறிப்பு

இந்த ரேகை புதன் மேட்டுக்கு அடி பாகத்தில் ஆரம்பமாகி சுக்கிர மேடு வரையிலும் அடி பாகப் முடியும் சிலருக்கு புத்தி ரேகையின்



முடிவிலிருந்து புதன் மேட்டை நோக்கிச் சென்றிருந்தாலும் ஆரோக்கிய ரேகைகளும் இன்னும் பல குறிகளும் உண்டு.

மாணவன்: ஐயா! ஆரோக்கியரேகை என்பது என்ன? அதனுல் என்ன பலனுண்டு அந்தரேகை கரத்தில் எவ்விடத்திலிருக்கின்றது இதை இவ்வடியேனுக்கு தெளிவுற விளக்குவீர?

ஆசிரியர்: தம்பி! புதன் ரேகை என்பதும், ஆரோக்கியரேகை என்பதும் கல்விரேகை என்பதும் ஒன்றுதான் இந்தரேகையானது புதன் மேட்டின் கீழிருந்து உதயமாயிருப்பதல்லாமல் சுக்கிரமேட்டின் கீழ் முடிவடையும் இந்தரேகையானது ஒழுங்கான முறையிலிருக்குமாஞல் அவர்களுக்கு கல்வியும், ஞானமும் கனமான பெருந்தன்மையும் சீரும் செல்வாக்கும் எதையும் முயற்சி வைத்து முடிக்கும் ஆர்வமும் ஏற்படும்.

மாணவன்: ஐயா! ஆரோக்கிய ரேகையானது புத்தி ரேகையின் முடிவிலிருந்து புதன் மேட்டை நோக்கிச் சென்ருல் அதனுல் நல்லபலனை அடைவார்களா அல்லது தீமையடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! ஆரோக்கிய ரேகையானது புத்திரேகையின் முடிவிலிருந்து புதன்மேட்டைநோக்கிச் சென்றிருந்தால் இவர்கள் தன் புத்தியின் சாதுர்யத்தினுலும் கல்வியின் தெளிவினுலும் கனத்த பொருள் சம்பாதிப்பதும் அதனுல் சிறந்த ஆரோக்கியமான வாழ்க்கையிலீடுபட்டிருந்தாலும் சுகஜீவியாக ஜீவிப்பார் என கூறலாம்.

மாணவன்: புதன் மேட்டிலிருந்து உதயமான ஆரோக்கிய ரேகையானது சற்று சிறு சிறு துண்டு துண்டாக காணப்பட்டால் அதனுல் அவர்களுக்கு மேன்மையுண்டா அல்லது தாழ்மையடைவர்களா?

ஆசிரியர்: தம்பி! ஆரோக்கிய ரேகை புதன் மேட்டில் உதயமாகி துண்டுதுண்டாக பின்னப்பட்டு காணப்படுமானுல் அடிக்கடி குடும்ப வாழ்க்கையில்

கலை, நிம்மதியற்ற மனமும், பல தொல்லைகளும், ஏற்படலாம் பொருள் விரையங்களும் ஏற்பட இதற்கு வழியுண்டு.

மாணவன்: ஆரோக்கிய ரேகையானது புதன் மேட்டிலிருந்து உதயமாக வேண்டியது தவறி சந்திர மேட்டில் உதித்து சுக்கிரமேடு வரையில் பிறைபோல் வளைவு கொண்டு இருக்குமானால் அதற்கு என்ன பலன் கூறவேண்டும்?

ஆசிரியர்: அப்பா! புதன் மேட்டிலிருந்து உதயமாக வேண்டிய ஆரோக்கிய ரேகை சந்திர மேட்டிற்கும் சுக்கிர மேட்டிற்கும் வளைவு பட்டிருந்தால் சிலருக்கு காதல் விஷமான காரியங்களில் சிந்தியுண்டு தவிர இந்த ரேகைகள் சனி ரேகைக்கு மேல் அமைந்திருப்பதால் புதிதாக ஓர் ஸ்திரீயும் வசமாவாள், அல்லது அபிமான தரத்தினால் சிலர் அதிர்ஷ்ட வசங்களுண்டாகும் எனலாம்.

மாணவன்: சுவாமி! இதுதான் இப்படி இருக்கிறது என்றால் அடித்தது ஓர் குறை என் மனதை பரிக்கின்றது.

ஆசிரியர்: தம்பி! மனதில் குறை வைக்காதே சந்தேகங்களை நிவர்த்தி செய்துக்கொள்ள மனதில் அச்சப் படாதே எதை வேணுமானாலும் கேள் அதற்கு விடை கூறுகிறேன்.

---

# பாச ரேகையின் பலன்

பாச ரேகை யென்பது புதன் மேட்டிற்கு பக்கத்திலும இருதய ரேகையின் மேல் புறத்திலும் அமைந் திருக்கும் இந்த பாச ரேகை பல விதங்களாக அமைந்



திருக்கும். தவிற பல துண்டு ரேகைகள், கண்டிருந்தால் எத்தனைத் துண்டுகளிருக்கின்றதோ அத்தனைத்தாரங்களமையும் என்றும் சொல்லலாம்.

மாணவன்: ஐயா! புதன் மேட்டிற்கு அடிபாகத்தில் அழுத்தமான ஒருரேகை காணப்பட்டால் அதனுல் விபரம் யாதுயெனப் புகல்வீர்?

ஆசிரியர்: அப்பா! இதைதான் பாசரேகை யென்றும் ஐக்கிய ரேகை யென்றும் விவாகரேகை யென்றும் தாரரேகை யென்றும், கூறிவார்கள். இதின் அமைப்பு பலவிதம் உள்ளது ஆதலால் இதின் அமைப்புபோல் தான்யாவும் நடந்து வரும் எனக் கூறலாம்.

மாணவன்: சுவாமி! பாச ரேகையானது சற்று மெல்லியதாக காணப்பட்டால் அதற்கு என்ன பலன் கூறவேண்டும்.

ஆசிரியர்: தம்பி! கரத்தில் மெல்லியதாக காணப்பட்டால், காதல் கொண்டு ஓர் பெண்மீது காதல் வளர்ந்து வருவதாகவும் கூறலாம். அல்லது அபிமானதார முண்டென்றுகூறலாம்.

மாணவன்: ஐயனே! தாரரேகையானது ஆழமாக சிறுத்து தோன்றினல் அதனல் என்ன?

ஆசிரியர்: பாசரேகை சிறுத்து ஆழமாக தோன்றினல் தாரத்தில் சுக யோகத்துடன் சில காலம் நல்லவிதமான வாழ்க்கையுண்டாகும், பிறகு நடுவில் தாரத்திற்கு மாருகவு முண்டாகி தவரலாம் இதை நன்ருக யூகித்து கூறவேண்டும்.

மாணவன்: குருவே! மற்ெருரு சந்தேகம், புதன் மேட்டிற்கு பக்கத்திலே கீழ்பாகத்தில் குறுக்காக சில ரேகைகள் தென்பட்டால் அதற்கு என்ன பலன் கூறவேண்டும்.

ஆசிரியர்: அப்பா! மேற்கண்ட புதன் மேட்டிற்கு பக்கத்தில் கீழ் பாகத்தில் எத்தனை கோடுகள் ஆழ்ந்து தென்படுகிறதோ அத்தனை தாரமுண்டு என்று கூறலாம், அதிலும் மெல்லிய கோடுகள் தென்பட்டால் எத்தனைக்கோடுகள் இருக்கின்றதோ அத்தனை அபிமான தாரங்கள் உண்டு என்று கூறலாம்.

மாணவன்: ஐயனே! புதன்மேட்டிற்கும் கீழ் பாகத்தின் பக்கத்திலுள்ள தார ரேகையானது முதலில் கனத்தும் முடிவில் சிறுத்துமிருந்தால் என்ன பலன் கூறவேண்டுப்?

ஆசிரியர்: தம்பி! புதன் மேட்டில் கீழ்பாகத்திலுள்ள பாசரேகையானது முதலில் கனத்து இருந்தால் காதலர்கள் இருவருக்கும் முதலில் காதல்முற்றி பிறகு நாளடைவில் அக்காதல் மாறிசமமான வாழ்க்கையில் ஈடுபடுமெனக் கூறலாம்.

மாணவன்: ஐயா! மேற்கூறிய புதன் மேட்டில் பல கோடுகள் கண்டிருந்தால் அது பலதாரங்களுண்டு எனக் கூறலாமா?

ஆசிரியர்: அப்பா! அது தப்பிதம் கோடுகள் அதிகமாக காணப்பட்டால் பல தாரங்கள் சேருவ

தால் இந்த ஜாதகருக்கு பல பெண்களின் இச்சை யுண்டு ஆனால் எதுவும் இவருக்கு பிராப்தமிருக்காது இவரது காதலில் நிலையற்ற பலனே நடந்து வரும்.

மாணவன்: ஐயா! குருமேட்டின் கீழ்புறத்தில் அதாவது இருதய ரேகைக்கு மேல் பாகத்தில் ஓர் வளைவான ரேகை கண்டிருக்குமானால் அதற்கு ஏதே னும் பலனுண்டா?

ஆசிரியர்: அப்பா! குருமேட்டின் கீழ் சாதா ரணமாக ஒருரேகை கண்டிருந்தால் இவருக்கு ஒரு தொழிலிலும், எண்ணங்கள் ஒரு விதத்திலும் இடந் தராது, ஆனால் அந்த ரேகை வளைவுபட்டு இருதய ரேகையை இணைத்தாற்போல் காணப்படுவதால் பல பெண்கள் மீதுகாதலுண்டு ஆனால் நாளடைவில் அது பொய்க்காதலாகவே முடியும்.

மாணவன்: சுவாமி! புதன் மேட்டில் தாரரேகை யே இல்லாமல் குரு மேட்டில் மேற் சொன்னதை போல் இரு ரேகை விழுந்திருந்தால் அதனால் அவ ருக்கு எத்தனை மனைவிகள் அமைவார்கள்?

ஆசிரியர்: தம்பி! புதன் மேட்டில் ஐக்கிய ரேகை இல்லாதிருந்தால் இவருக்குகுடும்பத்தில் பாச பந்தமே ஏற்பட வழியிராது. ஆனால் குருமேட்டில் கோடு கண்டிருப்பதால் சில அபிமான தாரங்களிருக் கலாம்.

மாணவன்: குருவே! ஐக்கிய ரேகையானது அளவுக்குமீறி சற்று நீளமாகவே தோன்றப்பட்டால் அதனால் என்ன பலனுண்டு?

ஆசிரியர்: அப்பா! ஐக்கியரேகை நீளமாக காணப்பட்டால் இவர்களின் வாழ்க்கையில் ஒருவித இன்னலுமின்றி மனம்போல நீடூழிகாலம் வாழ்வார் கள் என்று கூறலாம்.

மாணவர்: சுவாமி! அவ்விதமாக நீளமாக ரேகையின் முடிவில் ஓர் வெள்ளைப்புள்ளியோ, அல்லது வேல் போன்ற குறியோ, நக்ஷத்திரக் குறியோ, முக்கோணம் போன்ற சிறுவடிவமோ தோன்றினால் அது அவர்களுக்கு நன்மையைத் தருமா? அல்லது அதனால் தீமையுண்டா?

ஆசிரியர்: பாசரேகையின் பலன் பல உள்ளது அது நீளமாக இருந்தாலும் நீடூழி வாழ்க்கைதான். அதில் மேல் கூறியுள்ளபடி வேல் குறி வெள்ளைப் புள்ளி, முக்கோணம் நக்ஷத்திரக்குறி முதலிய பல குறிகள் கண்டால் வாழ்க்கைப்பாதையில் நல்ல அம சம் பெருந்தவும், செல்வாக்குடனும் சீரும் சிறப்பும் பொருந்த சித்தம் தளராமல் சதிபதிகள் தனது வாழ்க்கை இன்பமாக நடத்தி வருவார்கள் அதிலும் இவர்களுக்கு ஆயுள் காலபரியந்தம் ஒருவிதகவலையு மிராது.

மாணவன்: ஐயா! ஆம் அந்த ரேகை நீளமாக இல்லாமல் புதன் மேட்டிற்குள்ளேயே உள்ளடங்கி இருப்பதல்லாமல் அதில் சிறியக் குறிகளும் பள்ளங் களும் கண்டால் அதற்கு எப்படி?

ஆசிரியர்: அப்பா! ரேகை சிறிதாக இருந்தால் அதைப்பற்றி குறைகூற முடியாது; அதில் பல தீவுக் குறிகள் கண்டாலும் பள்ளம் கண்டாலும் தாரம் நோய்வாய்ப்பட்டு பலநாள் படுக்கையால் கிடக்கவும் நேரிடும். ஆனால் ஆயுளை மாத்திரம் நிர்ணயிக்கமுடி யாது; தாரத்தின் இடது கரத்திலுள்ள ஆயுள்ரேகை போல் தான் ஆயுளை நிர்ணயிக்கப்படும்.

மாணவன்: சுவாமி தாரரேகையின் ஆரம் பத்தில் இரு கிளைகள் ஏற்பட்டு இருந்தால் அந்த தாரத்தின் பலன் யாது?

ஆசிரியர்: அப்பா! தாரவகை ஆரம்பத்தில் இருகிளையாக இருந்தால் இரு பெண்களை மணக்கவும் நேரிடும் முடிவில் ஒன்று பட்டு இருக்குமாயின் அதில் ஒன்று தவறிப்போகுமெனவும் அல்லது இரு தாரத்தை தனக்காக ஒருமித்து முடிவில் ஒரு தாரத்தை மணப் பதே இதின் பலனாகும் தவிர இதை சற்று ஆராய்ந் தே கூறவேண்டும்.

மாணவன்: ஐயா! பாசரேகையானது புதன் மேட்டைத்தாண்டி சூரியமேடுவரையில் சென்றுமுடி வில் ஒரு சிலுவை கிராஸ் அம்பு கருப்புமச்சம், இது கள் கண்டால்! அதனால் அந்த தாரத்தினால் இவர் களுக்கு நன்மையுண்டா அல்லது தீமையடைவார் களா?

ஆசிரியர்: தம்பி! தாரரேகை சூரியமேடுவரை யில் சென்று இறுதியில் கிராஸ், சிலுவை மச்சம் அம்பு இது போன்ற பலகுறிகள் கண்டிருக்குமானால் இவர்கள் ஆயுள்கால பரியந்தம் இவரது வாழ்க்கை யில் இன்பத்தை காணவே முடியாது சதாகாலமும். கவலை, சஷ்டம் பொருள் விரயம் வருமானக்குறைவு பலதுக்கமான செய்திகள், நோயின் கவலை மற்றும் பல துன்பங்களெல்லாம் அனுபவிக்கநேரிடும். ஆனால் இக்குறிகள் மறைவு பட்டால் அதுமுதல் சற்று நிம் மதியும் நல்லவிதமான வாழ்க்கையும் சுகபோக யோகங்களைக் காணலாம்.

மாணவன்: சுவாமி ஐக்கிய ரேகையானது ஒழுங் கான முறையில், புதன் மேட்டை யடைந்தாலும் இதில் ஆரம்பத்தில் இருகிளை இருக்கக் கண்டால் அதனால் என்ன பலனை யடையக்கூடும்.

ஆசிரியர்: அப்பா! பாசரேகை ஒழுங்கானமுறை யிலிருந்து ஆரம்பத்தில் இருகிளை ஏற்பட்டிருந்தால் எத்தகைய குபேர சம்பத்துள்ளவர்களாக இருந் தாலும் அல்லது உள்ளன்பு உருதிகொண்ட காதலர்

களானாலும் ஏதேனும் ஓர் காரணத்தின் பொருட்டு பிரிவினை ஏற்படலாம்,

மாணவன்: ஐயா! தாரரேகையின் ஆரம்பத்தில் ஓர் சக்கரக்குறியாவது சூலம்போன்ற குறியாவது வளைக்குறியாவது விழுந்தால் இதின் பலன் என்னவென்று கூறவேண்டும்,

ஆசிரியர்: அப்பா! மேற்கண்ட சக்கரக்குறி தாரரேகையில் கண்டால் அந்த தாரம் பொருத்தமற்றதாக விளங்கும் முடிவில் அத்தாரம் தன்னை வஞ்சித்து வெளி தாண்டவும் நேரலாம் வளைக்குறி கண்டால் அதனால் பல வம்பு வழக்குகள் நேரலாம் குடும்பத்திலும் பாம்பு கீரி போலிருக்கும். சூலக்குறி இருந்தால் பலவிதமான நோய் காட்டி தாரத்திற்கு பல கெண்டங்களேற்படலாம் பல அபாயங்களுமுண்டாகும், ஆனால் தாரத்தின் கரத்திலுள்ள ஆயுள் ரேகையின் அமைப்புபோல்தான் ஆயுளைக்கூற முடியுமே தவிர ஆயுளை மாத்திரம் அற்பமாகக் கூற முடியாது.

மாணவன்: சுவாமி! தாரரேகை முதலில் கனத்தும் அழகாகவும் காணப்பட்டடால் அதனால் என்ன பலனையடைவார்கள்?

ஆசிரியர்: அப்பா! மேற்கூறிய படியுள்ள ரேகை படைத்த காதலர்களின் இன்பமானது முதலில் எதிர்பாராதவிதத்தில் கூடி அதமகிழ்ந்துஇல்லற தர்மத்தைநடத்துவார்கள்பிறகு நாளடைவில் காதல் குறையும் குடும்பத்திலும் கஷ்டமதிகரிக்கும், ரேகையின் கனம் குறைய குறைய காதலும் குறையும் என்று கூறலாம்.

மாணவன்: குருவே! குருமேட்டிலிருந்து ஒரு ரேகை பாம்பு போல் வளைந்து விவாக ரேகையைத் தீண்டியிருந்தால் அதனால் அடையும் பலன் யாது?

ஆசிரியர்: தம்பி! அமைப்புபோல் ஒரு மங்கையை விவாகம் புரிந்து கொண்டாலும் இதுபோன்ற ரேகை விழுந்திருக்கும் காதலர்கள் தன் நலத்தையே கோருவாரே தவிர காதலியின் அன்பையோ அல்லது வாழ்க்கையின் பாதையையோ கடைபிடித்து நடக்கக் கருதார். அப்படி சந்தர்ப்ப முயற்சியால் வாழ்த்தி சமயம் நேரிட்டாலும் இவர்களின் வாழ்க்கையில் பல சிக்கலும் வம்பு வழக்குகளும் ஏற்படுவது திண்ணமாம்.

மாணவன்: தாரரேகையானது புதன்மேட்டின் கீழிருந்து உதயமாகிசாய்வாக சூரியமேட்டைநோக்கி செல்வதல்லாமல் அதன் பக்கங்களில் சிலசிதரலான குறிகள் ஏற்படக்கண்டால் அதனுல் அவர்கள் நன்மையடைவார்களா அல்லது ஏதேனும் இவர்களின் வாழ்கையில் இடைஞ்சலேற்படுமா ?

ஆசிரியர்: தம்பி! தாரரேகையானது சூரிய மேட்டை நோக்கிச் சென்ருல் கவலையற்ற வாழ்க்கை கஷ்டமற்ற செல்வாக்கு கபடமற்ற காதலியாகவே வாய்ப்பாள். அப்படி இருந்தாலும் சில சிதரலான வரிகள் அதில் கலந்திருந்தால் அடிக்கடி தன் பந்துக்களால் தொந்தரவையும் மக்களால் மனக்கஷ்டமும், நோயின் கவலையாவது நெஞ்சத்தை பாதிக்கும் என்றுணர்வாயாக.

மாணவன்: ஐயனே! பாசரேகையானது ஆழமாக இல்லாமல் மெல்லியதாகவும், அதிலும் துண்டு துண்டாகவும்காணப்பட்டுகடைசியில் துறடுபோன்ற ஓர் குறியாவது ஓர் கருப்பு மச்சமாவது கண்டால் அதனுல் அவர்கள் என்ன பலனைக் காணமுடியும்?

ஆசிரியர்: அப்பா! பாச ரேகையானது மெல்லியதாகவும், துண்டு துண்டாகவும் காணப்பட்டால் ஒருவர் தனது அன்பின் மிகுதியால் ஓர் மாதினைக் காதலிப்பதாகும் அப்படி காதலிப்பதும் அக்

காதலால் அடிக்கடி பல இடைஞ்சல்களைக் காண்பது மாகும். ஆனால் இந்த ரேகை துண்டாகயிருந்தால் ஓர் அபிமான ஸ்திரீ உண்டு என்று கூறலாம்.

மாணவன்: குருவே! தாரரேகையானது ஆரம்பத்திலேயே சிறு துண்டாக தோன்றி மறைந்திருக்கு மானால் அதன் விபரம் அடியேனுக்கு தெளிவுற கூறவேண்டும்.

ஆசிரியர்: அப்பா! ஆரம்பத்திலேயே அது சிறுதுண்டாக துண்டித்து போனால் அந்ததாரம் வெகுநாள் நிலைக்காது. சீக்கிரத்தில் அதற்கு மாறுதலுண்டாம் எனக்கூறலாம். போகட்டும் பாசரேகையின் சங்கதிகளை இதுவரையில் நிறுத்திக் கொள்கிறேன். இதன் பின்வரும் சந்தான ரேகையின் குறிப்பை உனக்குத் தெரிவிக்கிறேன்.

மாணவன்: குருவே! அடியேன் தன்யனாகி றேன். தயவுசெய்து புத்திரரேகையென்பது என்ன? அதன் விபரமாவது யாதென கூறவேண்டும்.

## சந்தான ரேகையின் பலன்

சந்தான ரேகையென்பது அங்காரக மேட்டிற்கு அடிபாகத்தில் அமைந்துள்ளது.



மற்றும் தார ரேகைக்கு மேற்புறத்திலும் குறுக்குக் கோடு சனமாகவுமிருக்கும்.

ஆசிரியர்: தம்பி! மேலே காணும் படத்தை நன்கு கவனி அந்தப்படத்தில் உள்ள ரேகையே சந்

தான ரேகை என்றும் புத்திரேகையென்றும் கூறுவார்கள்.

மாணவன்: குருவே! அங்காரக மேட்டிற்கு பக்கமாக இருக்கின்றதே அந்த புத்திரேகை மாறுபாடாக துண்டுபட்டிருந்தால் அதற்கு என்ன பலன் சொல்ல வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! புத்திரேகை சற்று மாறுபட்டு துண்டாக இருந்தால் எந்தரேகையில் அந்த துண்டு கண்டிருக்கின்றதோ அந்தபுத்திரருக்கு பல கெண்டங்களும் நோய் நொடிகளும் காட்டலாம்.

மாணவன்: ஐயா! தாங்கள் கூறியது போல் அங்காரக மேட்டின் பக்கத்தில் பலகோடுகள் கண்டிருந்தால் அதையும் சந்தான ரேகையென்று கூறவேண்டுமா? அல்லது அந்த ரேகைகளுக்கு வேறு பெயர் உண்டா?

ஆசிரியர்: தம்பி! அப்படியல்ல அதுவும் புத்திர ரேகைதான் ஆனல் அது எத்தனைக் கோடுகளிருக்கின்றதோ அத்தனை சந்ததிகள் உண்டெனக் கூறலாம்.

மாணவன்: ஆமாம் சுவாமி! ரேகைதான் கணக்குப்படி புத்திர பாக்கிய முண்டென்றீா ஆனுல்அதில் சிறுத்தும் பொருத்தும் நீட்டமும் குட்டையுமாக இருக்கின்றதே அதன் விபரமெப்படி

ஆசிரியர்: தம்பி! அந்த ரேகையில் உயர்ந்திருப்பது ஆண் சந்ததியெனவும் குட்டையாக உள்ளது பெண் சந்ததியென்றும் அது கனத்த கோடாக இருக்குமானுல் அந்த சந்ததி கல்வி ஞானம் புத்திசாலித்தனம் முதலியன பொருந்தும் தவிற அந்த சந்ததியால் அக்குடுப்பத்திற்கு பெருத்த ஆதரவும், செல்வாக்கும் பெருகும் அந்தரேகை சிறுத்து இருந்தால் சற்றுமந்த புத்தியும் பல துர் நடத்தையும் அந்த சந்ததியிடம் காணலாம்.

மாணவன்: ஐயா! தாங்கள் தெரிவித்த ரேகையில் சற்று மறைவாக ஒரு ரேகை தோன்றினால் அது என்ன ரேகை?

ஆசிரியர்: தம்பி! அதுவும் புத்திரேகை தான் ஆனால் அது சற்று மறைவுற்று காணுமானால் அந்த சந்ததிக்கு அற்ப ஆயுளென்று கூறலாம்.

மாணவன்: குருவே! புதன் மேட்டிற்கு அடிபாகத்திலுள்ள பாசரேகையின் குறுக்கு பாகமாக சில துண்டு ரேகை இருந்தால் அந்தரேகைகளை என்ன ரேகை என கூறுவது அதனால் என்ன பலன்?

ஆசிரியர்: தம்பி! அந்த ரேகைகளையும் சந்தான ரேகை என்றுதான் கூறவேண்டும்.

மாணவன்: ஐயா! அந்த ரேகையில் ஆண் சந்ததி பெண் சந்ததி எப்படித் தெரிவது?

ஆசிரியர்: தம்பி! முன்சொல்லியதை போலவே தான் நீளமாக இருக்கும் ஆனால் ஆண் சந்ததியானால் மேல் புதன் மேட்டை நோக்கி சற்று நீட்டாகப் போகும் பெண் சந்ததியானால் குட்டை பாசரேகையை தொட்டதைப்போல் தோன்றும்.

மாணவன்: ஐயா! புதன் மேட்டில் இருக்கும் மேற்கண்ட புத்திரரேகையோ, அல்லது செவ்வாய் மேட்டில் தோன்றக்கூடிய புத்திரரேகையோ இல்லாமலிருந்தால் புத்திரர்கள் இல்லையென்று கூறலாமா?

ஆசிரியர்: தம்பி! அப்படி சொல்லப்படாது. அதாவது இதில் மலடுகளிருக்கலாம் அதையும் கவனிக்க வேண்டும்.

மாணவன்: ஐயா! அதை எப்படி தெரிந்து கொள்வது அதையும சற்று தெளிவாகக் கூறுங்கள்?

ஆசிரியர்: தம்பி! அதை சாதாரணமாக ரேகையில் சொல்ல முடியாது அவரவர்களின் பூர்வவினை தான் காரணமென்று சொல்லவேண்டும்,

மாணவன்: ஐயா! இன்னும் இந்த சந்தான ரேகையில் ஏதேனும் குறை உண்டானல் அடியே னுக்கு தெரிவிக்க வேண்டும்.

ஆசிரியா: தம்பி! சந்தானரேகையின் சங்கதி இவ்வளவுதான் ஆனுல் இன்னும் ஒருகுறை வைத்தி ருக்கின்றேன். அதை படமாகவும் முதலில் குறித் துள்ளேன், அதின் பலன்களைப்பற்றி உபதேசிக்கின் றேன் கேட்டருள்வாய்.

மாணவன்: சுவாமி! அப்படத்தின் விபரத்தை யும், அதிலுள்ள சில அம்சங்களின் பலன்களையும் விபரப்பட உறைப்பீர் ஐயனே?

# அங்குலாஸ்திகளின்

## சில அடையாளக் குறிகளின் பலன்

ஆசிரியர்: தம்பி! முதல் பக்கத்திலுள்ள ரேகைப் படத்தைப்பார் அதில் உள்ள விரல்களின் பெயர் அதாவது முதல் விரல், சுண்டுவிரல், இரண்டாவது பௌத்திர விரல், மூன்ருவது நடுவிரல், நான்காவது ஆள்காட்டி விரல், ஐந்தாவது பெருவிரல் என்று சொல்லப்படும்.

மாணவன்: குருவே! தாங்கள் தெரிவித்த விரல் களில் மூன்று துண்டுகளின் கணுவிலிருக்கின்றதே அதை என்னவென்று கூறவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! அந்த ஒவ்வொரு கணுக்களுக் கும் அங்குலாஸ்தி என்று பெயர். அந்த அங்குலாஸ் தியில் 1, 2, 3, என்று சொல்லப்படும். அதில்தான் பல குறிகளுள்ளது, அந்தக்குறிகளின் விபரங்களை யும் கூறுகிறேன். சற்று ஊக்கத்துடன் கவனிப்பாய் அதாவது அப்புக்குறி, சக்கரக்குறி, திரிகோணக் குறி, சதுரக்குறி, கோதுமைக்குறி, சூலக்குறி, நட்சத்

திரக்குறி, சிலுவைக்குறி கிராஸ்குறி, சூரியக்குறி வேல்குறி, அங்குசக்குறி, பலதுண்டுகோடுகள், சிக்கல் வலைக்குறி, கருப்புப்புள்ளி, வெள்ளைப்புள்ளி, இது போன்ற பல குறிகளுண்டு, விரல்களின் அங்குலாஸ்தி களில் மேற்கண்ட குறிகள் எந்த விரலில், எந்த அங்குலாஸ்தியில் கண்டிருக்கின்றதோ அதற்கு தகுந்தபடி நன்மை தீமைகளுமுண்டாகும்.

## சுண்டு விரலின் முதல் அங்குலம்

மாணவன்: ஐயா! அப்படியானால் சுண்டுவிரல் முதல் அங்குலாஸ்தியில் ஓர் திரிகோணக்குறியாவது அல்லது சதுர்க்குறியாவது கண்டால் அதனால் நன் மையுண்டா தீமையுண்டா?

ஆசிரியர்: தம்பி! இந்தக்குறிகள் மாத்திரமல்ல சாதாரணமாக சுண்டுவிரலின் முதல் அங்குலாஸ்தி யில் அம்புக்குறி, வேல்குறி, திரிகோணக்குறி சது ரக்குறி நட்சத்திரக்குறி சூரியக்குறி குறுக்கான சில கோடுகள் வெள்ளைப்புள்ளி இதுகள் இருந்தால் அதனால் அவர்கள் திரண்ட ஐஸ்வரியமும் சிறந்த செல்வாக்கும், பெருந்தன்மையும்பொருந்தியிருக்கும்.

மாணவன்: ஐயா! மேற்கூறியக்குறிகளிருந்தால் தான் மேன்மையுண்டு என்று கூறினீர் அப்படிக் கின்றி சக்கரக்குறி கோதுமைக்குறி சூலக்குறி அங்கு சக்குறி இரண்டு நீட்டமான சிறிய கோடுகள் கண்டி ருந்தால் அதனால் நன்மையுண்டா? அல்லது தீய பலனைத்தான் அடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! நீ கூறிய குறிகள் சுண்டு விர லின் முதல் அங்குலாஸ்தியில் விழுந்திருந்தால் இவர் கள் செய்யும் தொழிலில் நல்ல யோகத்தை அடைவ துடன் மற்றும் பல லாபங்களையும் அடையக்கூடும். தவிர மிகவும் பெருந்தன்மையைப் படைத்திருப்பார் கள்.

மாணவன்: ஐயா! சந்தோஷம் இதுகளின்றி சிக்கல்குறியோ, அல்லது கிராஸ் குறியோ இருந்தால் அதனால் என்ன பலனையடையக் கூடும்?

ஆசிரியர்: தம்பி! சிக்கல் குறியாவது. கிராஸ் குறியாவது, யாருக்கு விழுகின்றதோ அவர்கள் மகா கொடுவழக்கு வீண்வம்பு விபரீதமானவார்த்தை முத லியன பொருந்தியுள்ளவர்களாக இருப்பார்கள். அந்த குணபாவத்திலேயே பலவிதமான இடைஞ்சல்களும் இவர்களின் வாழ்க்கையில் காணலாம்.

மாணவன்: ஐயா! சிலுவைக்குறி யென்றீரே அக்குறியாவது, கருப்புப்புள்ளியாவது விழுந்திருந் தால் அதற்கு என்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! மேற்கண்ட குறிகள் விழுந் தால் இவர்கள் எதிலும் உருபடாதவர்களாக விளங் குவார்கள் பல காரியங்களில் தோல்வி அடையக் கூடும். தவிர கஷ்ட திசையில் இவருக்கு கண் கலக் கத்தையளிக்கலாம்.

## சுண்டுவிரல் இரண்டாவது அங்குலம்

மாணவர்: ஐயா! சுண்டு விரலின் முதல் அங்கு லாஸ்தியில் உள்ள குறிகளுக்குத்தான் பலன் கூறினீர் இரண்டாவது அங்குலாஸ்தியில் சுக்கிரக் குறியோ திரிகோணக் குறியோ, சதுரக்குறியோ, சூரியக் குறியோ, வேல்குறியோ, அங்குசக்குறியோ, நட்சத் திரக்குறியோ கண்டிருந்தால் அதனால் இவர்கள் அடையும் லாபமென்ன?

ஆசிரியர்: அப்பா! நீ கேட்கும் விரலின் இரண் டாவது அங்குலத்தில் மேற்கண்ட குறிகள் விழுந்தி ருக்குமானால் இவர்கள் எதிலும் சற்று வெற்றிகர மாகவே விளங்குவார்கள். மிகவும் சாமார்த்தியசாலி யாகவும். பேச்சுருதியுள்ளவராகவும் பெருந்தன்மை பொருந்தியவராகவும் இருப்பார்கள் எனக் கூறலாம்

மாணவன்: ஐயா! அடியேனுக்கு மற்றுமோர் சந்தேகம் அதாவது மேற்கண்ட விரலில் இரண்டாவது அங்குலாஸ்தியில் ஓர் அம்புக்குறியாவது மூன்று துண்டுகோடுகளாவது வெள்ளைப்புள்ளியாவது சூலம் கோதுமை இதுபோன்ற குறிகளாவது கண்டிருந்தால் இவர்களுக்கு இதனுல் நன்மையுண்டா தீமையுண்டா?

ஆசிரியர்: தம்பி! நீ தெரிவித்த குறிகள் அற்பமல்ல, மிகவும் அதிர்ஷ்ட வசமான குறிகள் அதிலும் இக்குறிகள் சாதாரணமாக சாமான்யமானவர்களுக்கு விழாது மகாதிடகாத்திரமும், சாமார்த்தியமும், வைராக்கியமும் பொருந்தியவர்களுக்கு அல்லது கல்வியிற் சிறந்தவர்களுக்கும் ஓர் கருவியை இயற்றக் கூடிய கலைஞர்களுக்கு தான் விழுந்திருக்கும். இவர்கள் எக்காரணத்தைக் கொண்டும் எக்காலத்தும் மனக்கலக்கமே யடைவார்கள். இன்பகரமான வாழ்க்கையே இவர்களுக்கு இனிது துலங்கும்,

மாணவன்: ஐயா! போகட்டும், மேற்கண்ட சுண்டுவிரலின் இரண்டாவது அங்குலத்தில் ஓர் சிலுவைக்குறியோ, கிராஸ் குறியோ அல்லது கருப்புப் புள்ளியான மச்சமோ, சிக்கலான வலைக்குறியோ கண்டிருந்தால் இவர்கள் நன்மையடைவார்களா அல்லது தீமையுண்டா?

ஆசிரியர்: அப்பா மேற்கண்ட குறிகள் மிகவும் துர்பாக்கியமானது எந்தக்காரியத்திலும் இவர்கள் முன் பின் யோசியாமல் பிரவேசித்து முடிவில்மோசம் போவார்கள். குடும்பத்தில் பலகஷ்டம் பணமுடை அதிகரிக்கும். தரித்திராம்சையே சதா சஞ்சலத்தை அளிக்கும் இக்குறியுள்ளோர்கள் பலபேர் பரதேதியாகவும் காரணமுண்டு

## சுண்டுவிரலின் மூன்ருவது அங்குலம்

மாணவன்: ஐயா! தாங்கள் கூறிய சுண்டுவிர லின் இரண்டாவது அங்குலத்தில் அமைந்துள்ளகுறி களின் பலாபலன்களை கூறினீர் அதனுல் அடியேன் தன்யனுகினேன் இருந்தாலும் மேற்கண்ட விரலின் மூன்ருவது அங்குலத்தில் கருப்புப்புள்ளியாவது சிலு வைக்குறியாவது சூலக்குறியாவது, கிராஸ்குறியா வது அம்புக்குறியாவது சூரியக்குறியாவது இருந்தால் இவர்களுக்கு அதனுல் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! சிலுவைக் குறியாவது கிராஸ் குறுயாவது விழுந்திருந்தால் எக்காரியத்தை நினைத் தாலும் அக்காரியம் வெட்டுண்டு போகும் சூலக்குறி யாவது அம்புக்குறியாவது அமைந்திருக்குமாஞல் இவர்களுக்கு பகைவர்கள் அனேகமுண்டு என்றும் அதனுல் பல ஆபத்துக்களும் ஏற்படலாம் சூரியக் குறி இருந்தால் எந்தகாலமும் வீணுன நஷ்டமும், மனக்கஷ்டமும் அலைச்சல் திரிச்சலும், ஆபத்துக்கள் பலவும் காட்டும் என்றும் கூறக்கூடும் கருப்புப்புள்ளி விழுந்திருந்தால் கட்டாயமாக ஓர் நோயினுல் பாதிக் கப்படலாம் அல்லது இவர்களின் தொழிலில் திடீ ரென பின்னமேற்படவும் ஓர் வழியுண்டு,

மாணவன்: ஐயா! இதுதான் இப்படி இருந்தா லும் மேற்கண்ட சுண்டு விரலின் மூன்ருது அங்குலத் தில் ஓர் சக்கரக்குறியோ சதுரக்குறியோ திரிகோணக் குறியோ, வேல்குறியோ அங்குலக் குறியோ அல்லது ஓர் வெள்ளைப்புள்ளியோ கண்டிருந்தால் அவர்க ளுக்கு என்ன பலனுண்டு.

ஆசிரியர்: தம்பி! மேற்கண்ட விரலின் மூன்ரு வது அங்குலத்தில் சக்கரம், சதுரம், திரிகோணம் வேல், அங்குசம் வெள்ளைப்புள்ளி இது போன்ற குறி களிருந்தால் இவர்கள்எக்காரியத்திலும்எந்தகாலமும்

ஏமாற்றமடைவார்கள். இவர்களுக்கு பெரியோர்களின் செல்வமோ பெற்றோர்களின் செல்வாக்கோ இல்லாமற்போன போதிலும்தான் கொண்டதாரத்தினால் தன சம்பத்துடன் வாழ்வார்கள்,

## இரண்டாவது பௌத்திர விரல்

### முதல் அங்குலப்பலன்

மாணவன்: ஐயா! இரண்டாவது விரலாகிய பௌத்திர விரலில் முதல் அங்குலத்தில் ஓர் சக்கரக் குறியோ. கோதுமைக்குறியோ, நட்சத்திரக்குறியோ வேல்குறியோ சூரியக்குறியோ அங்குசக்குறியோ, அல்லது வெள்ளைப்புள்ளியோ அமைந்திருந்தால் அதனால் அவர்களுக்கு நன்மை ஏற்படுமா அல்லது தீமை உண்டாகுமா?

ஆசிரியர்: தம்பி! கரத்திலுள்ள பௌத்திர விரலின் முதல் அங்குலத்தில் சக்கரம் கோதுமை நட்சத்திரம் வேல் சூரியன் அங்குசம் வெள்ளைப்புள்ளி இதுகள் கண்டிருந்தால் மிகவும் அதிஷ்டசாலியாக தோன்றுவார்கள். அதிலும் கோதுமைக் குறியாவது வேல் குறியாவது கண்டிருந்தால்இவர்களுக்கு அன்ன வஸ்திரம் குறைவிராது செல்வாக்கான வாழ்க்கை அதிலும் சக்கரம் நட்.சத்திரம் இவற்றின் குறிகள் இருக்குமானால் இவர் ஓர் பிரபல வியாபாரியாகவோ அல்லது ஓர் தொழில் முறையின் தலைவனாகவோ இருக்க வேண்டும்,

மாணவன்: ஐயா! இதற்குதான் இவ்வித பலன் என்றால் இந்தக்குறிகளின்றி அம்பு சூலம் சிலுவை கிராஸ் பலதுண்டு கோடுகள் சிக்கலான வலைக்குறி கருப்புப்புள்ளி இத்தகைய குறிகளிருந்தால் இதற்கு என்ன பலனுண்டு?

ஆசிரியர்: அப்பா! நீ கேட்கும் மேற்கண்ட குறிகள் மிகவும் கொடியது. அதிலும் அம்புக்குறி சிலுவைக்குறி விழுந்திருந்தால் உயிருக்கே ஆபத்துகள் நேரிடக்கூடும் சூலக்குறியோ, கிராஸ் குறியோ, இருந்தால் இவர்களுக்கு எதிலும் உருபடாத குணமுண்டாவதுடன் பலவிதத்திலும் நஷ்டங்களைத்தான் காணப்படும் பலதுண்டுகள் கண்டால் தன்புத்தியானது ஒருவழியில் நில்லாமல் பலவழியிலும் செலுத்தி பேதனம் கொண்டவர்போல் திரியநேரலாம். கருப்புப்புள்ளி கண்டால் மிகவும் தரித்திரவந்தரென்பதை குறிக்கும் சிக்கல்குறி கண்டால் இவர்களுக்கு எதிலும் தொடுவழக்குகளும் பலகவலைகளும் காரியத்தில் ஏமாற்றமும், ராஜாங்க விரோதிகளாகவும் கூட நேரிடலாம். ஆனல் திரிகோணக் குறியேனும் சதுரக் குறியேனும் கண்டிருந்தால் சற்று கவலையாய் தளர்ந்த நெஞ்சமுள்ளவராயினும் யோகத்தைத்தர அதிகாரமுண்டாகும்.

## இரண்டாவது அங்குலக்குறிகள்

மாணவன்: சுவாமி! பௌத்திர விரலின் இரண்டாவது அங்குலத்தில் ஓர் சிலுவை போன்ற குறியோ சில குறுக்குக்கோடுகளோ கிராஸ்குறியோ, சிக்கல் போன்ற வலைக்குறியோ' கருப்புப்புள்ளியோ இருக்கக் கண்டால் அவைகளுக்கு என்னபலன் கூறலாம்?

ஆசிரியர்: தப்பி! சிக்கலான வலைபோன்ற ஓர் குறி கண்டிருக்குமானல் இவர்களின் வாழ்க்கையில் நடக்கும் காரியங்களில் பலதொடு வழக்குகளும், வப்பு சண்டைகளும் விபரீதமான குற்றகளும் நேரிடலாம். தவிற சிலுவைக்குறியாவது, சில குறுக்குக் கோடுகளாவது கண்டிருந்தால் இவர்கள் குடும்பத்தில் பெருங் கஷ்டங்களை யெல்லாம் அனுபவிப்பாகள் கிராஸ்குறி கண்டாலும் கருப்புப்புள்ளி கண்டாலும்

இவர்களின் தொழில் முகாந்திரத்திலோ எண்ணிய எண்ணங்களிலோ கத்தரிப்புண்டாம்.

மாணவன்: ஐயா! தவிற ஓர் சூலக்குறியாவது அங்குசக்குறியாவது இருந்தால் இவர்களுக்கு என்ன பலன் கூறலாம்?

ஆசிரியர்: தம்பி! அங்குசக்குறி விழுந்திருந்தால் அவர்களை தெய்வ பக்தி உள்ளவர்களென்றும், தேவாம்சம் பொருந்தியவர்களென்றும் கூறலாம். அதிலும் சூலம் வேல் இதுபோன்ற குறிகள் கண்டிருக்குமானல் இவர்கள் மாந்திரிகத்தில் சிறந்தவர்களென்றும் ஓர் மஹான்களென்றும் கூறலாம்.

மாணவன்: ஆசிரியரே! கோதுமைபோன்ற ஓர் குறி பௌத்திர விரலின் இரண்டாவது அங்குலத்தில் இருக்குமானல் அவர்கள் அதனல் நன்மையடைவார்களா அல்லது தீமையுண்டா?

ஆசிரியர்: அப்பா! கோதுமைக்குறி விழுந்திருப்பவர்கள் நல்ல செல்வந்தராக இருக்கலாம். நில பலம் பொருந்தியவர்களாகவு மிருக்கலாம் மாடுமனை முதலியன வைத்துப் பரிபாலிருக்கும் ஓர் சிறந்த தன வந்தராகவும் இருக்கலாம்.

மாணவன்: ஐயனே! இதுதான் இப்படியென்றல் பௌத்திரவிரலின் இரண்டாவது அங்குலத்தில் ஓர் சதுரக்குறியோ, சக்கரக்குறியோ அம்புக்குறியோ, திரிகோணக்குறியோ, நட்சத்திரக்குறியோ, சூரியக்குறியோ வெண்மையான புள்ளியாகவோ தோன்றுமானல் அதனல் அவர்களுக்கு என்ன பலனுண்டு?

ஆசிரியர்: தம்பி! சூரியன் போன்ற குறியாவது சதுரக்குறியாவது ஒரு வெள்ளைப்புள்ளியாவது, சக்கரக்குறியாவது தோன்றினல் எந்த காலத்திலும், இணையற்ற லாபகரத்தையே இவர் காணலாம்,

சிறந்த வாக்குறுதி யுள்ளவர்களாகவும் தோன்றக் கூடும், அதிலும் நட்சத்திரக்குறியோ, திரிகோணக் குறியோ, கண்டிருந்தால் இவர்கள் எதற்கும் முதன்மையும் மேன்மையும் பெற்று மிகவும் அதிர்ஷ்டசாலியாகவும் தோன்றலாம் ஆனல் அம்புக்குறி கண்டால் எக்காரியத்திலும் மிகுந்த ஆர்வமும், ஆலோசனை மிகுதியும் படைத்து எதையும் ஒரே நோக்கத்துடன் முடித்தே தீருவார்கள் எனவும் கூறலாம்,

## மூன்ருவது அங்குலக் குறிகள்

மாணவன்: ஐயா! இரண்டாவது விரலாகிய பௌத்திர விரலில் மூன்ருவது அங்குலத்தில் ஓர் அங்குசக்குறியோ, அல்லது ஓர் அம்புக் குறியோ இருக்குமானல் அதனல் அவர்களுக்கு நன்மையா அல்லது தீமையா?

ஆசிரியர்: தம்பி! பௌத்திர விரலின் மூன்ருவது அங்குலாஸ்தியில் ஓர் அம்புக்குறியோ அல்லது அங்குசக்குறியோ கண்டிருந்தால் அந்த ஜாதகருக்கு துஷ்டர்கள் சவகாசமும் துன்மார்க்ககுணமும்மேலிட்டிருக்கலாம் அதனல் சில தொந்தரவுகளும் ஆபத்துகளும் கூட நேரலாம்.

மாணவன்: குருவே! மேற்கண்ட விரலின் மூன்ருவது அங்குலாஸ்தியில் ஓர் சிலுவைக்குறியோ அல்லது கிராஸ்குறியோ சூலக்குறியோ துண்டான சில கோடுகளோ, கருப்புப்புள்ளியோ, சிக்கலான வலைக்குறியோ கண்டிருந்தால் இவர்களுக்கு பலன்எப்படி?

ஆசிரியர் அப்பா! சிக்கலான வலைக்குறியாவது கிராஸ் குறியாவது கண்டிருந்தால் குடும்பத்திலும் தொழில் முறையிலும் சிநேகிதர் விஷயத்திலும் பல தொடுவழக்குகளேற்படும் அன்றியும் சிலுவை சூலம் போன்ற குறிகளாவது பலதுண்டு ரேகைகளாவது.

கருப்புப்புள்ளியாவது கண்டிருந்தால் பலகவலைகளும் குடும்பத்தில் கஷ்டதிசையும் மேலிடும் பலவிதத்தில் கஷ்டங்களைக்காட்டுமே யொழிய எக்காரணத்தை முன்னிட்டும் முன்னுக்கு வரமுடியாது.

மாணவன்: குருவே! மேற்கூறிய விரலின் மூன்ருவது அங்குலத்தில் ஓர் வெள்ளைப்புள்ளியாவது கோதுமைகுறியாவது கண்டிருந்தால் இவர்களுக்கு என்ன பலன் சொல்லலாம்?

ஆசிரியர்: அப்பா! வெள்ளைப்புள்ளி கண்டபேர்கள் வீரத்திலும் தீரத்திலும் செல்வாக்கிலும் சிறந்தவர்களெனக் கூறலாம் தவிர அந்த அங்குலத்தில் ஓர் கோதுமைக்குறி கண்டிருந்தால் இவர் எந்த காலத்திலும் ஒருகுறைவுமின்றி சிறப்புடன் பெருமை பெற்று லாபத்துடன் இவர்கள் ஒருவரின் தாக்ஷண்யத்தை எதிர்பாரார்கள்.

மாணவன்: சுவாமி! மேற்கண்ட விரலின் 3-வது அங்குலத்தில் வேல்சக்கரம் நட்சத்திரம் சதுரம், திரிகோணம், சூரியக்குறிபோன்ற குறிகள் இருந்தால் அதனுல் அவர்கள் நன்மையடைவார்களா அல்லது கவலையடைய காரணமுண்டா?

ஆசிரியர்: அப்பா பௌத்திர விரலின் மூன்ருவது அங்குலஸ்தியில் வேல் சூரியன் சக்கரம் நட்சத்திரம் சதுரம் திரிகோணம் இதுபோன்ற குறிகள் கண்டிருந்தால் இவர்களின் வாழ்க்கையில் ஒரு சிக்கலு மேற்படாது சுகஜீவியான வாழ்க்கையும் செல்வாக்கான குடும்பமேன்மையும் புத்திரபாக்கியமும், அப்புத்திரர்களால் புகழான நற்பலனும் எக்காலத்திலும் ஏமாற்றமில்லாமையும் எதிரிகளுக்கு அஞ்சாத திடகாத்திரமான வாச்சாக்களும் உண்டு என்றுகூறலாம்

## மூன்ருது நடுவிரலின்

## முதல் அங்குலப்பலன்

மாணவன்: சுவாமி! மூன்ருவது விரலாகிய நடு விரலின் முதல் அங்குல பாகத்தில் ஓர் அம்புக்குறி யோ, சூலக்குறியோ வேல்குறியோ, இதுகளிருந் தால் இவர்களின் வாழ்க்கையில் நன்மையடைவார் களா அல்லது சஞ்சலத்தைக் கைக்கொள்வார்களா?

ஆசிரியர்: தம்பி! அதாவது அம்பு, சூலம், வேல், இம்மாதிரி குறிகள் நடுவிரலின் முதல் அங்குலாஸ்தி யில் கண்டால் இவர்களுக்கு முன்கோபமும் மூர்க்க மான குணமும் அதிகமுண்டு. அதின் காரணத்தால் பல துன்மார்க்க செய்கைகளுக்கும் ஈடு படலாம் இவர்களுக்கும் எந்த காலத்தும் எக்காரணத்தைக் கொண்டும் மன நிம்மதியிராது.

மாணவன்: ஐயா! கருப்புப்புள்ளியோ சிக்க லான குறியோ, அங்குசச்குறியோ கண்டிருந்தால் இவர்களின் பலன் எப்படி?

ஆசிரியர்: அப்பா! சிக்கல்குறி அங்குசக்குறி கருப்புப்புள்ளி இதுகளிருந்தால் இவர்களின் வாழ்க் கையில் சதிபதிகள்பாம்பும்கீரியும் போலிருப்பதுடன் எதிலும் நியாயம் தீராது சிக்கலாகவே தனது வாழ்க் கையை நடத்துவார்கள் தவிரபந்துக்களிலும் நிந்தை பகை முதலியன காட்டும் அதனுல் குடும்பமே கலைந் தாலும் கலையலாமெனக் கூறவேண்டும்.

மாணவன்: ஐயா! நடுவிரலின் முதல் அங்குலத் தில் சூரியக்குறியோ, கிராஸ்குறியோ, சிலுவைக்குறி யோ இருக்குமாணுல் இவர்களின் வாழ்க்கை எப்படி நடக்கும்?

ஆசிரியர்: அப்பா! சூரியன் கிராஸ் சிலுவை இக்குறிகள் நடுவிரலின் முதல் அங்குலத்தில் கண்டிருந்தால் அதனுல் மிகவும் துன்பமடைந்து குடும்பத்தில் நிம்மதியில்லாமல்பனக்கலக்கமுண்டாகும் தவிர தரித்திரத்தால் மெலிந்து தடமாட்டமான வாழ்க்கையுண்டாகும் என்று கூறவும் மார்க்கமுண்டு.

மாணவன்: ஐயனே! இக்குறிகள் தான் இப்படியென்றால் ஒரு கோதுமைக் குறியோ, வெள்ளைப்புள்ளியோ, சக்கரக்குறியோ, சதுரக்குறியோ, நட்சத்திரக் குறியோ, முக்கோணக்குறியோ கண்டிருந்தால் இதனுலும் கவலைதான் அடைவார்களா?

## இரண்டாவது அங்குலத்தின் பலன்

ஆசிரியர்: தம்பி! இப்பொழுது நீயுரைத்த குறிகள் சாமான்ய மானதல்ல! நல்ல அதிர்ஷ்டவசம் பொருந்தியவை அதாவது சக்கரம் வெள்ளை கோதுமை சதுரம் முக்கோணம் நட்சத்திரம் போன்ற இக்குறிகள் கண்டிருந்தால் இவர்கள் எக்காரியத்திலும் இகழ்ச்சி அடைவார்கள். தன் மனைவியின் வீட்டாரின் செல்வாக்கும் மைந்தர்களால் பெரும் நன்மையும் பெற்றோர்களின் பொருள் சேர்க்கையால் கவலையற்ற வாழ்க்கையும் தொழில் முகாந்திரத்தில் மேன்மையான குடும்ப கௌரவமும் படைத்தவர்களாக இருப்பார்கள் எனலாம்.

மாணவன்: குருவே! நடுவிரலின் இரண்டாவது அங்குலத்தில் ஓர் வெண்மை நிறப்புள்ளியோ சக்கரம் கோதுமை நட்சத்திரம் சூரியன் சதுரம் திரிகோணம் போன்ற குறிகள் இருக்குமானுல் வ ர்களுக்கு என்ன பலன் கூறவேண்டும்.

ஆசிரியர்: அப்பா! நீகேட்ட குறிகள் அனைத்தும் இரண்டாவது அங்குலாஸ்தியில் இருக்குமானால் அவர்களுக்கு உலகில் ஏதேனும் ஓர் காரணத்தை முன்னிட்டு நல்ல புகழும் கீர்த்தியும் பெருகலாம். தவிர குடும்பத்தில் ஒருவித கவலையும் இவர்களுக்குத் தோன்றாது உற்றார் பெற்றோர் இவர்களின் வார்த்தைக்கிணக்கமாக மரியாதையும் தாழ்மையான வார்த்தையும் ஏழை எளியவர்கள் மீது இரக்கமும் தன்னுயிர்போல் மன்னுயிரைப்பாதுகாக்கும் தன்மையும் தயை தாக்ஷிண்யம் நிறைந்த உள்ளமும் பொருந்தியிருப்பார்கள்.

மாணவன்: ஐயா! இதுதான் இப்படியென்றால் சிக்கலான வலைக்குறியாவது அம்புக்குறியாவது சிலுவைக்குறியாவது கிராஸ்குறியாவது அல்லதுகருப்புப் புள்ளியாவது நடுவிரலின் இரண்டாவது அங்குலத்தில் கண்டால் இவர்களுக்கு நல்ல பலனைத் தருமா அல்லது தரித்திரத்தைத்தான் அளிக்குமா?

ஆசிரியர் அப்பா! சிக்கலான வலைக்குறி அம்பு சிலுவை, கிராஸ் கருப்புப்புள்ளி இம்மாதிரியானகுறிகள் கண்டால் இக்குறி விழுந்த42—நாளைக்குள் தனது வாழ்க்கையே களைந்து பிழைக்க வழியின்றி பெண்டு பிள்ளைகளைத் துறந்து துறவறவாசியாகப் போகவும் நேரலாம் அல்லது துஷ்டர்களின் சரவாசத்தில் பல தொந்தரவுகள் ஏற்படலாம் துன்பத்தைத் தரும் நோய் நொடிகளாலும்பாதிக்கலாம் என்று கூறலாம்

மாணவன்: ஐயா! கரத்தின் நடுவில் இரண்டாவது அங்குலத்தில் சூலக்குறியோ, வேல்குறியோ, அங்குசக்குறியோ பலதுண்டு குறுக்கு ரேகைகளோ கண்டிருந்தால் இவர்களுக்கு என்ன பலனைக் கூற வேண்டும்?

ஆசிரியர்: தம்பி! சூலம் வேல் அங்குசம் பல துண்டு குறுக்கு ரேகைகள் இதுகளெல்லாம் நடுவிரலின் இரண்டாவது அங்குலாஸ்தியில் கண்டிருந்தால் இவர்கள் தேவாம்சம் பொருந்தியவர்களாயும் வைத்தியத்திற் சிறந்தவர்களாகவோ அல்லது மாந்திரீகத்தில் வல்லவர்களாகவோ விளங்குவார்கள்,

## நடுவிரலின் மூன்ருவது அங்குலக் குறிகள்

மாணவன்: ஆசிரியரே! மேற்கூறிய நடுவிரலின் மூன்ருவது அங்குலத்தில் சக்கரம் நட்சத்திரம் கோதுமை சதுரம் திரிகோணம் வெள்ளைப்புள்ளி போன்ற குறிகள் கண்டிருந்தால் அந்த சாதகர் அதனுல் அடையும் லாபநஷ்டங்களின் பலன் என்ன வென்று தெரிவிக்கவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! நடுவிரலின் மூன்ருவது அங்குலாஸ்தியில் சக்கரம் நக்ஷத்திரம் கோதுமை வெள்ளைப்புள்ளி நாற்சதுரம்திரிகோணம் இது போன்றகுறிகள் ஏதேனும் இருக்கக்கண்டால் உலகில் இவர்கள் ஒரு பெரிய தனவந்தர்களாகவோ ஓர் டலத்த முதலாளியாகவோ இருக்கலாம் இவர்களுக்கு குடும்பவாழ்க்கையிலும் பந்துக்களிலும் நன்மதிப்பு உண்டாவதுடன் எதிலும் கீர்த்திபெற்று லாபத்துடனிருப்பார் இவர் செய்யும் ஒவ்வொரு காரியங்களும் எக்காரணத்தைக் கொண்டும் பின்னமுருது,

மாணவன்: சுவாமி! இது தான் இப்படியென்ருலோ மேற்கூறிய நடுவிரலின் மூன்ருவது அங்குசத்தில் அம்பு சூலம் சிலுவை அங்குசம் கருப்புப்புள்ளி போன்ற குறிகள் தோன்றுமானல் அதனுல் அவர்களுக்கு நன்மையா தீமையா?

ஆசிரியர்: அப்பா! மேற்கூறிய குறிகளைத் தம்நடுவிரலில் அடிப்பாகமாகியமூன்ருவது அங்குலத்

தில் தோன்றியிருந்தால் இவர்களுக்கு குடும்ப வாழ்க்கையில் மனநிம்மதியிராது எவ்வளவு சம்பாத்தியம் இருந்தாலும் வரவுக்குமிஞ்சிய சிலவால் வறுமையுடன் வாழ்வார்கள் எக்காரியத்தில் பிரவேசித்தாலும் ஏமாற்றமடைந்து ஏங்கித்தவிப்பார்கள் இனத்தவர்களுடன் பகைமை கொண்டு எக்காலத்திலும் மனக்கசிவுடனே இருக்கவும் நேரலாம்.

மாணவன்: சுவாமி! அப்படியானால் கிராஸ் அங்குசம் சூரியன் வேல் ஒரு சிக்கல் குறியோ ஒருவருக்கு நடுவிரலின் மூன்றுவது அங்குலாஸ்தியில் காணப்பட்டால் அதனுல் அவர்களுக்கு லாபமா அல்லது நஷ்டங்களேற்படுமா?

ஆசிரியர்: தம்பி! நடுவிரலின் மூன்றுவது அங்குலாஸ்தியில் மேற்கூறிய குறிகளிருந்தால் எந்த காலத்திலும் இவர் பல சிக்கலானகாரியங்களில்தான் பிரவேசிப்பார் பல துஷ்டர்களின் சாவகாசத்தினுல் பல தொல்லைகளெல்லாம் இவருக்கு நேரக்கூடும்' முன்கோபத்தினுல் எதையும் துணிவுடன் செய்ய எத்தனித்து பின்னுல் மனதில் கவலை கொள்வார் என்பதில் சந்தேகமில்லை.

## நான்காவது ஆள் காட்டி விரல் முதல் அங்குலத்தின் பலன்

மாணவன்: குருவே! அதாவது நான்காவது விரலின் முதல் அங்குலத்தில் ஓர் அம்புக்குறியோ சக்கரக்குறியோ சதுரக்குறியோ திரிகோணக்குறியோ கோதுமைக்குறியோ நட்சத்திரக்குறியோ வேல்குறியோ அங்குசக்குறியோ அல்லது ஓர் வெண்மையான புள்ளியோ விழுந்திருக்குமானுல் அதனுல் அவர்கள் நன்மையடைவார்களா தீமையைத்தான் காண்பார்களா?

ஆசிரியர்: தம்பி! மனசந்தேகத்திற் கிடங்கொடுத்த அம்பு சக்கரம் சதுரம் திரிகோணம் கோதுமை நக்ஷத்திரம், வேல், அங்குசம், வெள்ளைப்புள்ளி இம்மாதிரியான குறிகள் கண்டால் இதனுல் இவர்கள்மிகவும் அதிஷ்டசாலிகளாக விளங்குவார்கள் தவிர தனது புத்தியின் கூர்மையினுலும் தன் மனுபலத்தினுலும் பலவித ஆராய்சிகளில் சம்மந்தப்பட்டு ஒவ்வொன்றையும் நூதனமாக கிண்டுபிடிப்பார்கள் அல்லாமலும் திடீரென திரண்ட ஐஸ்வரியத்தையும் அடையக்கூடும். தானதர்மத்தில் சிறந்தும் விளங்குவார்கள் தன் பெற்றோர்களிடமும், பந்துக்களிடமும் பயந்து பணிவுடனே ஒழுக்கமாக நடந்து கொள்வார்கள்.

மாணவன்: சுவாமி! நான்காவது விரலின் முதல் அங்குலத்தில் சூலக்குறியாவது சூரியகுறியாவது கண்டிருந்தால் அதனுல் அந்த குறிகளுடையவர்கள் நன்மை அடைவார்களா? அல்லது தீமையே தினமும் காண்கார்களா?

ஆசிரியர்: தம்பி! ஆள்காட்டி விரலின் முதல் அங்குலத்தில் எல்லோருக்கும் சூலக்குறி இருக்காது. ஆயிரத்திலொருவருக்குத்தான் காணலாம் இந்த சூலக்குறி கண்டவர்கள் தெய்வபக்தி சிறந்து விளங்குவார்கள் அப்படிக்கின்ற சூரியக்குறி கண்டிருந்தால் உள்ளன்பில்லாமல் மேலுக்கு தெய்வத்தை நினைப்பார்கள் பகல்வேஷமும் இவர்களிடம் பலவிதமாகக் காணலாம்.

மாணவன்: ஐயா! அடியேனுக்கு மற்றுமோர் மனக்கவலை அதாவது சிலருக்கு நான்காவது விரலின் முதல் அங்குலத்தில் சிலுவை போலவும் சிக்கலான வலைபோலவும் கருப்புப்புள்ளியும் கூட காணுகிறது. இக்குறியுள்ளவர்கள் என்ன பலனை அடைவார்கள் என்பது விளங்கவில்லை அடியேன் மீது அன்பு

செலுத்தி இதுவரையில் கூறியது போல் அநின்பலன்களைத் தெரிவிக்கவேண்டும்?

ஆசிரியர்: தம்பி! எதையும் மனதில் கிலேசமின்றி கேள் மர்மத்தை மறைபாமல் உரைக்கின்றேன் அதாவது ஆள் காட்டி விரலின் முதல் அங்குலத்தில் கருமையான புள்ளிகண்டால் செல்வாக்காக இருந்து வரும் திடீரென ஏதோ காரணத்தை முன்னிட்டு தனது செல்வாக்கழிந்து பலவிதமான கவலைகளெல்லாம் அடைய நேரிடும், அதைத் தவிர்த்து சிலுவைக் குறி கண்டிருந்தால் அதனுல் தனது பந்துக்களாலேயோ சிநேகிதர்களாலேயோ பலதொல்லைகள் நேரிட்டு பலபேர்களின் பகைப்பும் இழிப்பும் ஏற்படலாம், அப்படியின்றி சிக்கல் குறிகண்டால் தான் செய்யும் வியாபாரத்திலேயோ அல்லது குடும்ப விஷயத்திலேயோ பலவிதமான பிக்குகள் ஏற்படும் குடும்பத்தில் மனைவி மக்களுள் மனக்கசப்புண்டாகும். அதனுல் குடும்பமே கலையவும் காரணமேற்படலாம்

மாணவன்: ஐயா! இக்குறியினுல்தான் இவர்கள் கஷ்டமடைவார்கள் என்றீர் ஆனுல் மேற்கண்ட நான்காவது விரல் முதல் அங்குலத்தில் ஒரு கிராஸ் குறியாவது துண்டு ரேகைகள் ஏதயவது கண்டிருந்தால் அதனுல் என்ன பலன் அடைவார்கள்?

ஆசிரியர் தம்பி! முன்சொன்னதுதான் கஷ்டமான குறி என்று எண்ணிவிடாதே! அதைவிட முதல் அங்குலத்தில் கோணல்கோடு விழுந்திருந்தால் முதல் கோணலென்முல் முற்றும் கோணல் என்னும் பழமொழிபோல் அவர்களின் வாழ்க்கைப் பாதையில் எல்லாம் இடைஞ்சலாகவே முடியும் இதுமாத்திரமல்ல கிராஸ்குறி விழுந்திருந்தால் இவர் செய்யும் தொழிலுக்கும் வெட்டுண்டு சிநேகிதத்தில் பிரிவினையும் காரியமும் கடைசிவரையிலும் எக்காரணத்தைக் கொண்டும் கைகூடிவராது.

## இரண்டாவது அங்குலத்தின் பலன்

மாணவன்: ஐயா! நான்காவது விரலாகிய ஆள் காட்டும் விரலின் இரண்டாவது அங்குலத்தில் ஓர் அம்புக்குறியோ பலதுண்டு ரேகைகளோ சூலக்குறி யோ வேல்குறியோ அங்குசக்குறியோ கண்டால் அத ஞல் அவர்கள் அடையும் பலன் என்ன?

ஆசிரியர்: தம்பி! அம்பு சூலம் வேல் அங்குசக் குறி பலதுண்டு ரேகைகள் இதுகள் கண்டால் அவர் கள் வாழ்க்கையில் கவலையைக் காணுத முறையில் நல்லவிதமான வாழ்க்கை ஏற்பட்டு சீரும் சிறப்பும் பெற்று செல்வத்துடன்வாழ்வார்கள் இவர்கள் குடும் பத்தில் பல தெய்வபிரார்த்தனைகள் செலுத்தக்கூடும் ஆனுல் மேற்கண்ட குறிகள் கண்டவர்கள் ஓர் மாந் திரீகத்திற் சிறந்தவர்களாகவுமிருக்கலாம்.

மாணவன்: ஐயனே! மேற்கண்ட குறிகளைத் தவிர அதேவிரலில் இரண்டாவது அங்குலத்தில் சக்க ரம் போன்ற குறியாவது கோதுமைக் குறியாவது சதுரக்குறியாவது நக்ஷத்திரக்குறியாவது திரிகோண குறியாவதுசூரியக்குறியாவதுவெள்ளைப்புள்ளியாவது கண்டிருந்தால் அந்தக்குறிகளால் அவர்கள் அடை யும் பலன் யாது?

ஆசிரியர்: அப்பா! நான்காவது விரலின் இரண் டாவது அங்குலத்தில் ஓர் சக்கரக்குறியோவெள்ளைப் புள்ளியோ இருந்தால் இவர்களுக்கு உள்ளூரில் லா பம் அவ்வளவு இல்லாமற் போயினும் வெளிதேச பிர யாணத்தில் அளவிலாத லாபங்களை அடையவும் பல அதிர்ஷ்ட வசங்களும் உண்டாகும் மற்றும் கோது மைக்குறி இருக்குமானுல் இவர்கள் எக்காரணத்தைக் கொண்டும் அன்னவஸ்திரத்திற்கு குறைவின்றி இருப்பார்கள் முக்கோணக்குறியாவது நாற்சதுரக்

குறியாவதுஇருந்தால் இவர்கள் சற்று ஏழ்மைதனமானவர்களாக இருந்தாலும் இக்குறி ஏற்பட்ட கால முதல் நல்ல அதிஷ்டமானவர்களாக விளங்குவதுடன் எந்த வியாபாரத்திலிடுபட்டாலும் லாபகரத்டன்னிருக்கக்கூடும் ஆனல் சூரியக்குறி கண்டால் எவ்வளவு திரண்ட செல்வத்தைப் படைத்தவர்களாயினும் நாளுக்கு நாள் ஏதேனும் ஓர் காரணத்தால் அவர்களின் செல்வாக்கு அழிவு ஏற்படலாம்.

மாணவன்: ஐயா! மேற்கண்ட ஆள்காட்டி விரலின் இரண்டாவது அங்குலத்தில் பல நல்ல பலனைத் தருங் குறிகளை கூறினீர் ஆனல் அக்குறிகளைத் தவிர்த்து ஓர் சிலுவைக்குறியாவது சிக்கலான வலைக் குறியாவது ஓர் கிராஸ் குறியாவது கருப்புப்புள்ளியாவது இருந்தால் அதனல் நன்மையுண்டா? அல்லது தீமையேற்படுமா?

ஆசிரியர்: அப்பா! கிராஸ்குறியோ சிக்கல்குறியோ கருப்புக்குறியோ விழுந்திருந்தால் குடும்பத்தில் கஷ்டமும் நோயும் வியாஜ்யங்களில் தோல்வியும் தன் மனைவி மக்களுக்கு தன் விஷயத்தில் மதிப்பில்லாமையும் ஏற்படும் அதிலும் சிலுவைக்குறி கண்டிருந்தால் பல துஷ்டர்களின் உறவைக்கூட்டும் அதனுல் பல கலகங்களும் அரசபகையும். குடும்பப்பகையும் மேலிடும் இவர்கள் தனது வாழ் நாள் முழுதிலும் மன நிம்மதியை இழந்து வருந்துவார்கள்.

## மூன்ருவது அங்குலப் பலன்

மாணவன்: ஐயா! ஆள்காட்டும் விரலின் மூன்ருவது அங்குலஸ்தயில் கோணக்குறியோ நட்சத்திரக்குறியோ சூரியக்குறியோ தோன்றுமானுல் அதற்குண்டான பலன் யாது?

ஆசிரியர்: அப்பா! நான்காவது விரலின் மூன்ருவது அங்குலாஸ்தியில் கோதுமைக்குறி கண்டால் இவர்கள் சிறந்த செல்வாக்குடையவர்களாக விளங்கலாம் அதுவன்றி நக்ஷத்திரக்குறி காணில் இவர் ஓர் சிறந்த நடிகராகவாவது சிறப்புற்ற ஓர் பேச்சாளராகவாவது விளங்கக்கூடும். இதில் சூரியக்குறி இருந்தால் சமமான புகழும் கஷ்டமற்ற சுகஜீவியாகவும் இருக்கலாம்.

மாணவன்: சுவாமி! கரத்திலுள்ள நான்காவது விரல் மூன்ருவது அங்குலத்தில் கருப்புப்புள்ளியோ சிலுவைக்குறியோ, வலைக்குறியோ கிராஸ்குறியோ, சிதரலான துண்டு ரேகைகளோ கண்டிருந்தால் அதற்கு பலன் என்னவென்று கூறவேண்டும்.

ஆசிரியர்: தம்பி! ஒருவருக்கு சிக்கலான குறியும், சிதரலான துண்டுரேகைகளும் கரத்தின் ஆள் காட்டும் விரலில் மூன்ருவது அங்குலத்தில் காணப்பட்டால் அவர்களின் வாழ்க்கையில் ஏதேனும் காரணத்தால் குடும்பம் கலைந்து கனிந்து நிற்க ஏதுவுண்டு பல சிக்கலான கடன் தொல்லைகளும் ஏற்படலாம். அதனுல் வியாஜ்யம் ஏற்பட்டு குற்றவாளியாகவும் செய்யலாம் இதுதவறி சிலுவைக்குறியோ, கிராஸ் குறியோ இருக்குமானுல் குடும்பத்திலோ அல்லது பிறரிடத்திலோ நம்பிக்கைத் துரோகம் ஏற்படலாம். ஒரு நோயாளியாகவுமிருக்கலாம் அந்த நோயினுல் மனக்கவலை ஏற்பட்டு நாளுக்குநாள் பலஹீனப்படவும் அதிகாரமுண்டு. ஆனல் கருப்புப்புள்ளி அந்த அங்குலாஸ்யில் விழுந்திருந்தால் மாரகத்தையும் செய்யலாம் ஆனுல் ஆயுள் ரேகையானது நீடித்திருந்தால் அவர்கள் காலமெல்லாம் கஷ்ட திசையாக மாறுமே தவிர மாரகம் செய்யாது எனக்கூறலாம்,

மாணவன்:சுவாமி! நான்காவதுவிரலாகிய ஆள் காட்டும் விரலின் மூன்ருவது அங்குலாஸ்தியில் ஓர் சக்கரம் சூலம் திரிகோணம் வேல் அங்குசம், அம்பு சதுரம் வெள்ளைப்புள்ளியோ இதுபோன்ற குறி கள் கண்டால் அதனுல் அவர்களுக்கு நன்மையா அல்லது கவலையும் கஷ்டமுந்தான் அடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! நீ கூறிய ஆள்காட்டி விரலின் மூன்ருவது அங்குலத்தில் ஒரு சக்கரக்குறியோ சது ரக்குறியோ திரிகோணக்குறியோ அங்குசக்குறியோ அம்புக்குறியோ சூலக்குறியோ வெள்ளைப்புள்ளியோ கண்டிருந்தால் எந்த காலமும் மனக் கவலையற்ற வாழ்க்கையும் மைந்தர்களால் மனமகிழ்ச்சியும் கல்வி யினுலேயே தொழில் முகாந்திரத்திருலேயோ பணம் சம்பாதிப்பதிலும் கஷ்டதிசையற்ற கலக்கமற்ற உள் ளமும் படைத்து வாழ்வார்கள்.

## ஐந்தாவது கட்டைவிரலின் முதல் அங்குலப்பலன்

மாணவர்: ஐயா! ஐந்தாவது விரலாகியகட்டை விரலில் முதல் அங்குலபாகத்தில் அம்பு, சூலம் வேல் அங்குசம் சூரியன் போன்று குறிகள் இருக்குமாளுல் இவர்களின் வாழ்க்கையிலே நடக்கும் நன்மை தீமை யை அடியேனுக்கு நிகழ்த்துவீர்?

ஆசிரியர்: அப்பா! அம்பு சூலம் வேல் அங்குசம் இன்நான்கு குறிகளில் எந்த குறிகளேனும் கட்டை விரலின் முதல் அங்குலத்தில் கண்டால் ஓர் பெரிய மஹானுகவும் தெய்வ வரப்ரசாதியாகவும் மாந்திரீ கத்தில் வல்லமகத்துவம் பொருந்தியவராகவும் விளங் கலாம் இதுகளை தவிர்த்து சூரியக்குறி தோன்றினுல் உலகப்பிரசித்தி பெற்றவர்களாகவும் மகாயோகியாக வும் விளங்குவார்கள்.

மாணவன்: குருவே! கட்டை விரலின் முதல் அங்குலத்தில் ஓர் சிலுவைக்குறியோ பலதுண்டு கோடுகலோ கிராஸ்குறியோ சிக்கல்குறியோ கருப்புப்புள்ளியோ இருந்தால் அதனால் அவர்கள் நன்மையடைவார்களா அல்லது தீமையால் வாடுவார்களா?

ஆசிரியர்: அப்பா! சிலுவைக்குறி கிராஸ்குறி இதுகளில் ஏதாவது கட்டை விரலின் முதல் அங்குலத்தில் காணுமானால் இவர்கள் மனக்கோரிக்கையில் கந்தரிப்புண்டு அல்லது தொழிலிலும் மனக்கிலே சம்பகை நிந்தை இதுகளைக் காட்டலாம் இதைத் தவிர்த்து சிக்கல் குறியாவது பலதுண்டு கோடுகளாவது கண்டால் செய்யும் வியாபாரத்திலோ சிநேகித விஷயங்களிலோ பலவிசுமான கோள் குண்டிணித்தனங்கள் மேலிடலாம் சிநேகிதர்களால் பலவிதமான சதி நினைவுகள் ஏற்படலாம். குடும்பத்தில் மனைவி மக்களின் விஷயத்தில் பல தொடுவழக்குகள் ஏற்பட்டு மனக்கசிவு ஏற்படலாம் இதுகளின்றி மச்சம்போன்ற கருப்புப் புள்ளியொன்றும்கண்டிருக்குமானல் பலவிதமான நோய் நொடிகளும் பலவேதனையான ஆபத்துக்கள் ஏற்படவும் காரணமுண்டு.

மாணவன்: குருவே! மேற்கூறிய குறிகள் தான் கெடுதலெனக் கூறினீர் அந்த குறிகளன்றி சக்கரம், கோதுமை நட்சத்திரம் திரிகோணம் நாற்சதுரம், வெள்ளைப்புள்ளி இவ்விதமான குறிகளின் ஏதேனும் ஒன்று இருக்குமானல் அதனாலும் துற்பலனைத்தான் அடைவார்களா அல்லது மேன்மையுண்டாகுமா?

ஆசிரியர்: தம்பி! சாதாரணமாக ஒருவருக்கு கட்டை விரலின் முதல் அங்குலத்தில் சக்கரக்குறியோ திரிகோணக்குறியோ நாற்சதுரமான குறியோ, வெள்ளைப்புள்ளியோ விழுந்திருக்குமானல் பரமஏழையாயிருந்தாலும் அவர்களுக்கு திடீரென ஓர்

யோகமேற்பட்டு அதனுல் சகல சம்பத்தும் ஏற்படலாம். வியாபாரத்திலும் நல்ல லாபங்களெல்லாம் கிடைக்கப்பெற்று அதனுல் மேன்மை பெற்று விளங்கலாம் வெளிநாடுகளுக்கு போக்குவரத்துக்கள் ஏற்படலாம். அதனுலும் சீரும் சிறப்பும் பெற்று தனது வாழ்க்கையை கவுரவமாக நடத்தலாம். எவரிடமும் நாணயம் தவராதமுறையில் நடக்கவும் இவர்களுக்கு யோக்கிய தாம்சம் உண்டு அதிலும் மேற்கண்ட குறிகளின்றி கோதுமைக்குறி கண்டிருந்தால் காணி பூமிகளும் தன சம்பத்துள்ளவராகவும்அதில் நல்ல ஆதாயங்களைப் பெறும் யோகவானுகவும் விளங்கக்கூடும். அல்லது நட்சத்திரக்குறி கண்டிருந்தால் இவர் ஓர் தொழிலில் தேர்ந்தவராகவும் பல பேர்களுக்கும் பெரிய அதிகாரஸ்தராகவும் ஓர் குடும்பத்திற்கு அதிபதியாகவும் இருக்கக்கூடும் எனக்கூறலாம்.

## இரண்டாவது அங்குலக்குறியின் பலன்

மாணவன்: ஐயா! கட்டை விரலின் இரண்டாவது அங்குலத்தில் சூரியக்குறியோ, சிலுவைக்குறியோ சிக்கல் குறியோ கண்டால் அதனுல் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! அங்குசக்குறியோ சிலுவைக் குறியோ சிக்கல் குறியோ ஒருவருக்கு கட்டை விரல் இரண்டாவது அங்குலாஸ்தியில் கண்டிருந்தால் இந்த ஜாதகருக்கு ஆபத்துக்களும் நோய் நொடியினுல் கவலைகளும் குடும்பத்தின் பித்தலாட்டங்களால் தீராத மகாதுன்பங்களையும் தரும் எனலாம் ஆனுல் இதுகள் மாரமார சற்று கவலைகளும் மாறுவதற்கு அதிகாரமுண்டு அதுவன்றியில் மேற்கண்ட குறிகளைத்தவிர ஒரு சூரியக்குறி கண்டிருந்தாலும் மற்றும் ஏதேனும் ஒரு குறிகளைக் கண்டாலும் உடனே தனது கவலைகள் சூரியனைக் கண்ட பனிபோல் விலகும் எனலாம்.

மாணவன்: சுவாமி! அடியேனுக்கு மற்றுமோர் சந்தேகம்?

ஆசிரியர்: தம்பி! சந்தேகத்தை தணித்துக் கொள் உன் மனதில் தென்பட்டதைக்கேள் அதற்கு விடையளிக்கிறேன்.

மாணவன்: ஐயா! சிறியேன் கூறிய கட்டை விரலின் இரண்டாவது அங்குலாஸ்தியில் ஓர் அங்குச குறியாவது, அம்புக்குறியாது கிராஸ்குறியாவது கருமையான மச்சமாவது விழுந்திருந்தால் அதனுல் இவர்கள் அடைவது நன்மையா அல்லது தீமையா?

ஆசிரியர்: தம்பி இதற்குத்தானு சந்தேகப்பட்டாய்! அதாவது அம்புக்குறியானது கட்டை விரலின் இரண்டாவது அங்குலத்தில் கண்டால் இவர்கள் குடும்பத்திலேயோ அல்லது தன் தொழில் முகாந்திரத்திலேயோ சிநேகித விஷயத்திலேயோ பலகோள் மூட்டித்தனம் செய்யத் துடங்குவார்கள். அதனுல் பலவிதமான துன்பங்களேயும் அவமானங்களேயும் அடைய நேரிட்டாலும் நேரலாம், அல்லது அங்குசக் குறியாவது கிராஸ்கோடாவது கண்டிருந்தால் ஏதாவது ஓர் எண்ணத்தை மனதில் வைத்து அக்காரியம் நிறைவேறும் சமயத்தில் அது வெட்டுப்பட்டு கத்தரிப்புண்டாகும் பல சிலவுகளும் காட்டும் தன் உடன் பிறந்தோர்களில் ஒருவருக்கு ஆபத்தும் காட்டலாம் ஆனுல் கருப்புப்புள்ளி கண்டால் தனக்கே ஆபத்துக்கள் ஏற்பட்டாலும் ஏற்படலாம்.

மாணவன்: ஐயா! இதுதான் இப்படி துற்பலனேயளிக்குமென்றீர், அக்குறிகளில்லாமல் ஓர் சக்கரக் குறியாவது அல்லது கோதுமைகுறியாவது வேல் போன்ற ஓர் அடையாளமாவது கண்டிருக்குமானுல் அதனுல் இவர்களுக்கு ஆபத்து உண்டா? அல்லது அனுகூலம் தானு?

ஆசிரியர்: சிறுவனே! சிலர் கரத்தில் கட்டை விரலின் இரண்டாவது அங்குலாஸ்தியில் சக்கரக்குறி தோன்றலாம் அந்த சக்கரக்குறி தோன்றினால் நல்ல திறமை வாய்ந்தவர் ஒருவருடன் கூடி வெளிதேசம் போக நேரிடும் அப்படி இடம் விட்டு தன் பந்துக்கள் மனைவிமக்கள் பெற்றோர் உற்றோர்களைப்பிரிந்து போக நேர்ந்தாலும் அதனால் சில நாளில் திரண்ட பொருளைச் சேகரித்து அதிக செல்வாக்கு பெறுவார்கள். ஆனால் அக்குறியைத் தவிர்த்து கோதுமைக் குறியாவது வேல்போன்ற குறியாவது கண்டிருக்குமானால் ஓர் பிரபல வியாபாரியாக இருக்கலாம் அல்லது ஓர் தொழிற்சாலைக்கு அதிபதியாகயிருக்கலாம் இவர்களுக்கு பெரியோர்களின் பொருளில்லாமல் போனாலும் இக்குறிகளிருந்தால் ஓர்சிறந்த பணக்காரர்களாக விளங்குவார்கள் என்று கூறலாம்.

மாணவன்: சுவாமி! இக்குறிகளின் பலன் இது வரையிலிருக்கட்டும் இதுவே கடைசியாக தங்களைக் கேட்கிறேன் இதை மிகவும் தெளிவுடன் இச்சிறியேனுக்கு வழுத்துவீர்?

ஆசிரியர்: தம்பி! அப்பா! மனதிற் பட்டதை மர்மமாக வையாமல் கேள்.

மாணவன்: ஐயனே! கரத்தில் கட்டை விரலின் கடைசி அங்குலமாகிய இரண்டாவது அங்குலத்தில் ஓர் முக்கோணக்குறியோ சதுரக்குறியோ வெண்மையான புள்ளியோ கண்டிருந்தால் அதனால் அந்த ஜாதகர் மேன்மையடைய முடியுமா அல்லது எதிலும் தாழ்ந்து ஏமாற்றமடைவார்களா ?

ஆசிரியர்: அப்பா! பரம ஏழையான ஒருவனுக்கு திடீரென மேற்கண்ட கட்டை விரலின் இரண்டாவது அங்குலத்தில் ஓர் வெண்மையான புள்ளி கண்டால் திடீரென சில நாளைக்குள் ஏதேனும் ஒரு

காரணத்தால் நல்ல செல்வாக்கும் தன லாபங்களும் சகல சுகங்களும் ஏற்படலாம் அல்லாமலும் கடுமையான ஒரு தொழிலிருந்தாலும் கஷ்ட மற்ற நல்ல லாபகரமாகவும் தனக்கு மேன்மையைத்தரக் கூடியதுமான தொழில் உண்டாகும் அல்லது அந்த அங்குலத்தில் திரிகோணக்குறியோ நாற்சதுரமான குறி கண்டிருந்தால் இவர்கள் பெற்றோர்களின் காலத்தில் தரித்திர திசையான குடும்பமாக இருந்தாலும் இவர்களுக்குமேற்கண்டகுறி கண்டகாலத்திலிருந்து பணமுடையில்லாமல் ஓர் பணக்காரராகவும் நவநாகரீகமுள்ளவராகவும், குடும்ப அனுபோகத்தில் சிறந்தவராகவும் விளங்குவார்கள் இதைத் தவிர்த்து நட்சத்திரக்குறி கண்டால் ஓர் சிறந்த நடிகராகவோ ஓர் வித்வானாகவோ, ஓர் வல்லமை பொருந்திய வீரனாகவோ விளங்கக்கூடும். தம்பி! கேட்ட கேள்விகளுக்கெல்லாம் இதுவரையில் தகுந்தபதில் கூறியுள்ளேன் இனி ரேகையின் பலன் முடிந்தது ஆதலால் இவைகளையெல்லாம் நன்முக மனதில்பதியவைத்து யாருக்கு ரேகையைக் கூறினாலும், அனுபவத்தை யொட்டியும் முகக் குறியைக் கண்டும், முக்கியமான ரேகைகளின் பலனைக் கொண்டு அவர்களின் மனதை திருப்திபடுத்துவாய்.



## உள்ளங்கையிலுள்ள சில அடையாளக் குறிகளின் பலன்

மாணவன்: குருவே! விரல்களின் அங்குலாஸ்தியில் பல குறிகள் அமைந்திருந்தால் அதற்குப் பலனைத் தெளிவுற கூறினீர், அடியேனும் அதைக்கேட்டு ஆனந்த பரவசக் கடலிலாழ்ந்தினேன். ஆயினும் தற்போது என்மனதில் ஓர் அதிசயமான சந்தேகம் அலைமோதுகின்றது அதின் விபரத்தை நான் தங்களால் அறிந்துகொள்ள வேண்டுமென்று அடியேன் ஆவல் கொண்டுள்ளேன் ஆதலால் இவ்வறியாச் சிறுவனின் விஷயத்தில் தங்களின் திருவுளம்யாதோ?

ஆசிரியர் தம்பி! எக்காரணத்தைக் கொண்டும் மனதில் சந்தேகத்தை வைத்து சஞ்சலப்படாதே, எதையும் தைரியமாகக் கேள் உனது வினுக்களுக்கு உகந்த விடைகளை யளித்து உனதுள்ளத்தை திருப்தி செய்கின்றேன்.

மாணவன்: சந்தோஷம் சுவாமி! இதுவரையில் முதல் கரத்திலுள்ள ரேகைகளின் லக்ஷணங்களையும் அதன் குறிகளையும் அதனால் நேரக்கூடிய லாப நஷ்டங்களையும் உள்ளங்கையின் மண்டலங்களையும், அதின் விபரங்களையும், அதின் பலாபலன்களையும், கரத்தின் வளையங்களின் அமைப்புகளையும் அதின் அதிசயமான பலசங்கதிகளையும், கரத்தின் ஐந்து விரல்களின் அமைப்புகளையும் அதிலுள்ள அங்குலாஸ்திகளையும் அங்குல ஸ்திகளில் அமையப்பெற்ற அதிசயமான பல அதிர்ஷ்டங்களையும், அதனால் ஏற்படும் அனுகூலங்களையும் அடியேனுக்கு அறிவிப்பீர் ஆனால் இனியான் தங்களைக் கேட்கும் கேள்விகள் அதிசயமானது ஆதலால் அடியேன் வார்த்தைக்கு அனுமதிப்பீர்.

ஆசிரியர்: அப்பா! அஞ்சாமல் கேள் தகுந்த பதிலளிக்கிறேன்.




மாணவன்: ஐயா! மேலே காட்டியுள்ளபடத்தின் உள்ளங்கையில் பலகுறிகள் பலமேடுகளிலும் உள்ளது, அதனால் நன்மையடைவதோ அல்லது தீமையைப்பெருவதோ விளங்கவில்லை அதன் பலாபலன்களைத் தெளிவுற உரைப்பீர்?

ஆசிரியர்: தம்பி! உள்ளங்கையில் பலமேடுகள் உள்ளது ஆனால் அதில் குறிகளமைந்திருப்பதைக் கண்டு தான் குறிப்புடன் அதன்பலன்களைக் கூற வேண்டும் எவ்விடங்களில் எந்தக்குறி இருக்கின்றதோ அக்குறிகளின் அடையாளம் போல் கூறினால் அதற்குப் பலனைக் கூறுகிறேன் கேள் அஞ்சாதே.

மாணவன்: ஐயா! உள்ளங்கையில் உள்ளகுறிகள் முன்னே தங்களிடம் உரைத்தது போலவே நட்சத்திரக்குறி கிராஸ்குறி சூரியக்குறி சிலதுண்டுரேகைகள் வெள்ளைப்புள்ளி சக்கரக்குறி சிலுவைக்குறி அங்குசக்குறி வேல்குறி சிக்கல்குறி சூலம் திரிகோணம் அம்பு கோதுமைக்குறி கருப்புமச்சம் உள்ளங்கையில் சதுரமான வளையம் உள்ளங்கையில் முக்கோணம் உள்ளங்கையில் நடுப்பாகத்தில் சிறு சக்கரம் நாற்சதுரமான குறி இதுபோல் ABCD என்று S வரையிலும் பல குறிகளுள்ளது அதன் விவரங்களை தெளிவுற கூறுவீர் அதிலும் A என்னும் நக்ஷத்திரக்குறி புதன் மேட்டில் உள்ளபடியால் அதற்குப் பலன் யாதெனக் கூறுவீர்?

ஆசிரியர்: தம்பி! A என்னும் நட்சத்திரக்குறி புதன் மேடு சுக்கிர மேட்டின் கீழ்பாகம் சந்திரமேடு உள்ளங்கை இதுகளில் தோன்றினால் இவர்களின் வாழ்க்கையிலே நடந்து வரும் பலன்கள் அதிர்ஷ்டவசமாக அருக்கும் தவிர எத்தொழிலைச் செய்தாலும் அதற்கு இவர் ஓர் அதிபதியாகவும் தோன்றலாம். ஓர் குடும்பத்திற்கும் அதிபராக இருக்கலாம் எதிலும் இவருக்கு நல்ல ஆதாயமுண்டாகுமெனலாம் இந்த மேடுகளைத் தவிர மற்ற இடங்களில் இக்குறி அமைந்திருந்தால் துற்பலனாக இருக்கும்.

மாணவன்: ஐயா! ஆனால் B என்னும் கிராஸ் குறி அங்காரமேட்டில் அமைந்துள்ளது அக்குறியி

ஞல் நல்ல பலனடைய முடியுமா? அல்லது கவலையாகவே முடியுமா?

ஆசிரியர் அப்பா! B என்னும் கிராஸ்குறி அங்காரக மேடுமட்டு மல்ல எந்த மேடுகளில் உள்ளங்கையில் எந்த இடத்திலிருந்தாலும் அதனுல் பல இடைஞ்சல் காரியங்களில் கத்தரிப்பு நம்பிக்கைத் துரோகம் சிநேகிதர்களின் நயவஞ்சகம் மற்றும் பல கெடுதலான பலன்களேத்தான் தரும் ஆனுல் சந்திரமேடு சுக்கிரமேடு இதுகளில் கண்டிருந்தால் எதிலும் இடையூரில்லாமல் சமப்பலனுக நடந்துவரும்.

மாணவன்: ஐயா! அது போகட்டும் C என்னும் சூரியக்குறியாவது சுக்கிர மேட்டின் கீழ்பாகம் அதாவது செல்வாக்கு ரேகைக்கு உள்ளடங்கி இருக்குமாஞல் அதனுல் என்ன பலனே அடைய முடியும்?

ஆசிரியர்: —அப்பா! செல்வாக்கு ரேகையின் உள்ளடக்கமாக சுக்கிரமேட்டின் கீழ் பாகத்தில் C என்னும் சூரியக்குறியானது ஏற்பட்டிருந்தாலும் புதன் குரு சுக்கிரன் முதலிய இடங்களில் இருந்தாலும் நல்ல பலனேத் தரும் அப்படிக்கின்றி மற்றமேடுகளிலேயோ அக்குறிதோன்றினுல் பல இடைஞ்சல் விளேவிக்கலாம் நோய் காட்டலாம் கெண்டங்களாலும் பாதிக்கலாம் குடும்ப கவலேயை இவருக்கு காட்டும் என்றும் கூறலாம்.

மாணவன்: சுவாமி! அதாவது D என்னும் சில ரேகைகள் சுக்கிர மேட்டின் மேல்பாகத்தில் கட்டைவிரலின் இரண்டாவது அங்குலாஸ்தியின் இறுதிபாகத்தின் கீழ்புறத்தில் இருக்குமானுல் அதனுல் நன்மையடைவார்களா அல்லது தீமை யடைவார்களா?

ஆசிரியர்: தம்பி! சில துண்டுரேகைகள் நீ குறிப்பிட்ட சுக்கிர மேட்டின் மேல் பாகத்தில் மட்டுமல்ல குருமேடு சந்திரமேடு இதுகள் தவிர மற்றெந்தமேடுகளில் தோன்றினல் குடும்பக்கவலை புத்தியின் வேற்றுமை பந்துக்களின் பிரிவினை மனைவி மக்கள் மீது வெறுப்பு தொழில் முகாந்திரங்களில் பல ஆபத்துக்கள் இதுகளையெல்லாம் காட்டும் ஆனல் மேற்கூறிய சுக்கிரமேட்டின் மேல் பாகம் சுக்கிரமேடு குருமேடு இதுகளில் தோன்றினல் அவ்வுளவு கஷ்டதிசை இராது சமமான பலன்களைத் தரலாம்,

மாணவன்: ஐயனே! E என்னும் வெள்ளைப் புள்ளி குருமேட்டிலிருக்கின்றது அதனல் என்ன பலனை அடையக்கூடும்.

ஆசிரியர்: அப்பா! E என்னும் வெள்ளைப்புள்ளி எந்த மேட்டிலிருந்தாலும் உள்ளங்கையில் மட்டும் எந்த பாகத்திலிருந்தாலும் கஷ்ட திசையிலிருக்கும் ஒருவருக்கு இக்குறிகண்டால் திடீரென ஓர் நல்ல யோகம் தந்து குபேர வாழ்க்கையை அளிக்கலாம். மூர்க்கமான புத்தியுள்ளவராயினும் சாந்தமான மனதைத்தர இக்குறிக்கு அதிகாரமுண்டு கவலையுள்ள நோய் கண்டிருப்பினும் அது உடனேமாரலாம் குடும்பத்தில் விரோதிகளிருப்பினும் ஒற்றுமைப்படுத்தும், வெளியூர் பிரயாணம் செய்ய யோசித்தாலும் அதனல் நல்ல லாபத்தையே அடைய நேரிடும்.

மாணவன்: குருவே! F என்னும் சக்கரக்குறி சூரியமேட்டிலிருந்தால்அதனல் நன்மையா தீமையா?

ஆசிரியர்: தம்பி! F என்னும் சக்கரக்குறி மட்டுமல்ல L என்னும்குறியான திரிகோணம் N. என்னும் இடத்திலுள்ள கோதுமைக்குறி S என்னும் குறியான நாற்சதுரம் உள்ளங்கையின் நடுபாகத்திலுள்ள

என்னும் குறியான வட்டவளையம் O என்னும் குறியான உள்ளங்கை முக்கோணம் R என்னும் குறியான உள்ளங்கையின் சிறு சக்கரம் இதுகள் அங்காரமேடு சனிமேடு இதுகள் தவிர மற்றெந்த மேடுகளில் அமைந்திருக்குமானல் அதனல் நல்ல பலன்களைத்தரும். அளவு கடந்த லாபங்களை அடையக்கூடும் மேன்மையான பதவிகளும் கிடைக்கும் என்னலாம்,

மாணவன்: ஐயா! G என்னும் குறியான சிலுவைக்குறி சனிமேட்டிற்கு கீழ்புறத்தில் அமைந்திருப்பதால் அதற்கு என்ன பலன் கூறவேண்டும்?

ஆசிரியர்: அப்பா! சிலுவைக்குறி மட்டுமல்ல அதே சனிமேட்டில் சிக்கல் குறி தோன்றினலும் O என்னும் கருப்புமச்சம் சந்திரமேட்டின் ஓரத்தில் கீழ் பாகத்தில் ஆரோக்கிய ரேகையை அணைத்தாற் போல் இருந்தாலும் இக்குறிகள் மற்றும் எந்த பாகத்திலிருந்தாலும் பல இடைஞ்சல்களையும் குடும்பத்தில் பல சிக்கலான வழக்குகளையும் பெருங்கவலைகளையும் தருவதோடு தனது செல்வாக்கையும் நாளுக்கு நாள் குறைத்துத் தரித்திரவந்தனுகச் செய்யும் எனவும் கூறலாம்.

மாணவன்: ஐயா! H என்னும் குறியான அங்குசக்குறி சுக்கிரமேட்டிற்கும் சந்திர மேட்டிற்கும் நடுவில் விதிரேகையை அணைத்தாற் போலிக்கின்றது. அதனல் என்ன பலன் உண்டு?

ஆசிரியர்: அப்பா! நீ கூறிய அங்குசக்குறி மட்டுமல்ல மற்றும் வேல்குறி சூலக்குறி அம்புக்குறி இது போன்றகுறிகள் இருந்தால் இவர்ஓர் மாந்திரீகத்திற் சிறந்தவராகவும் ஓர் வைத்தியராகவும் இருக்கலாம் ஆனல் இக்குறிகள் A C D E F H I K M N O P Q R

S மேற்கண்ட படத்திலுள்ள எழுத்துக்களில் இந்த எழுத்துக்களிருக்குமிடத்திலிருந்தால் நல்ல பலன்களை யும் பிரக்கியாதியையும் தரும் அதனுல் மகா மேன் மையுடையவராகவும் மிருக்கலாம் அல்லது இதைத் தவிர்த்து B G L இந்த மேடுகளில் அமைந்திருக்கு மாஞல் எக்காரணத்தைக் கொண்டும் ஈடேறமுடி யாது தான் கற்றிருக்கும் தொழிலாலேயே தனக்கு அபகீர்த்தியும் நிந்தையும் நிஷ்டூரமும் ஆபத்தும் கூட ஏற்படும் போகட்டும் இதுவரையில் இந்த சங்க திகளை நிறுத்திவிட்டேன் யானுனக்கு உறைத்தவை கள் முழுமையும் மனப்பாடமாக தெளிவுறக் கற்று உலகத்தில் நற்கீர்த்தி அடைவாயாக.

சுபம்! சுபம்!! சுபம்!!!

குரு சிஷ்ய சம்வாத

ஹஸ்த இரேகை சாஸ்திரம் முற்றுப் பெற்றது.

---



சீனிவாச அச்சகம், சூளை, சென்னை-600007.

# தேவேந்திரநாத் மாயாஜால விநோதம்

வாரி சூழுலகின் கண் வசிக்கும் ஆரிய நண்பர்காள்! இதில் இங்கிலீஷ் கைபுரட்டு வித்தைகள் பிதாம்பர வித்தைகள் பிரன்ச் வித்தைகள் மூலிகை சல்லிய வித்தைகள் அஷ்டமாசித்திகள் செய்யலாம் வசியவகைகள் செய்யலாம் மணலைக்கிளரி விநாயகர் கட்டலாம் மகேந்திர ஜாலம் செய்யலாம் இந்திர ஜாலம் கோகர்ண வித்தை பாதாள அஞ்சனம் பச்சைப்பாம்பு மேய்தல் பேய்யோட்டுதல் மாஞ்செடிமுளைத்தல் மோடி வைக்கும் வித்தை இதைபோன்ற அற்புத ஜாலங்கள் 2000 சேர்ந்தவை செழுமணவை சித்திரகவி தேவேந்திரநாத் பண்டிதர் அவர்கள் தான் சொந்தமாய் செய்து காண்பித்த ஜாலங்கள் இதில் தெளிவுரக் காணலாம்.

இதன் விலை ரூ. 6-00

---

ஹிப்நாடிஸ மெஸ்மரிசமென்னும்

# வாயுவேக மனோவசிய

## சாஸ்திரம்

இந்த நூலில் மனோவசியத்தைப் பற்றியும் அதை அப்பியாசிக்க வேண்டிய வழிகளைப்பற்றியும் எழுதப்பட்டிருப்பதுடன் உலகில் பிறர் கண்களுக்குத் தெரியாமல் உலாவும் வழியைப்பற்றியும், இறந்த பெரியோர்களுடன் எப்படிப் பேசுவது என்பதைப் பற்றியும், நன்கு எழுதப்பட்டிருக்கின்றன, சபைதனில் விரலைக்காட்டி மற்றவர்களை தூங்க வைக்கும் வழிகளைப் பற்றியும் மனோவசிய சக்தியின் உலகத்திற்கு செய்யக்கூடிய நன்மை மிகுந்த செல்வாக்குடன் இருக்க விரும்புகின்றவர்களுக்கு இந்நூல் தேவாமிர்தம் போன்றதாகும் சித்திரப்படங்களுடன் கூடியது.

விலை ரூ. 6

---

# நம் நாட்டு வைத்தியம்

நீங்கள் வைத்தியர் என பெயர் வாங்க விரும்புகிறீர்களா? அப்படியானால் இன்றே நம் நாட்டு வைத்தியத்தை வாங்கி படியுங்கள். நீங்கள் பிரபல வைத்தியராகத் திகழலாம் என்பது உண்மை.

இது ஓர் உன்னதப் படைப்பு இதுவரை காணாத சிறந்த கட்டுக்கோப்பான சித்த வைத்திய நூல் என்றால் இது மிகை அல்ல இதில் ஆயுர்வேத யூனானி, அலோபதிக் முறைகளும் இடம் பெற்றுள்ளது. வைத்தியம் பயிற்சி பெற விரும்புவோர்களுக்கும், வைத்தியம் பயின்றுள்ள பிரபல வைத்தியர்களும் பொழுதைப் போக்க விரும்பும் அன்பர்களும் பயன் அடையும் விதத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

நம் நாட்டு வைத்தியம் படிப்பதற்கு மகிழ்ச்சியும் குதூகலத்தையும், ஆர்வத்தையும் தூண்டும் வகையில் எழுதப்பட்டிருக்கிறது.

இந்த நூலில் கரு உற்பத்தி எப்படி ஆகிறது? கரு வளர்ச்சியில் பஞ்சபூதம் எவ்வாறு வேலை செய்கிறது? தச வாயுக்கள் நமது தேகத்தை எவ்வாறு காத்து செயல்படுகிறது தசநாடியின் தொழில் என்ன திரிதோஷத்தின் தன்மை என்ன? கைநாடி பார்க்கும் விதம், மனிதஉடலில் 96 தத்துவக் கருவிகள் எவ்வாறு வேலை செய்கிறது மற்றும் இருதயம், கல்லீரல். மண்ணீரல், தீனிப்பை மூத்திரப்பை முதலியவற்றின் தொழில் விவரங்களும் அதில் காணும் நோய்களின் விவரங்களும் அந்நோய்களுக்கான சிகிச்சை முறைகளையும், மற்றும் சூரணம், மாத்திரை, செந்தூரம், பற்பம், சுண்ணம் லேகியம். தைலம் முதலிய அநேக முறைகள் இதனில் உள்ளது,

இந்நூலை தொகுத்தவர், ஸ்ரீரங்கம் சித்தவைத்தியர்
S. வீரப்பெருமாள் பிள்ளை R. I, M. P,

இதன் விலை ரூ 6.

---

சண்முகானந்த புத்தகசாலை,
48, நைனியப்ப நாய்க்கன் தெருவு,
பார்க்டவுன், சென்னை-600003

